








# லைப்பாய் சோப்

தினசரித் தொல்லையான அழுக்கிலிருக்கும் கிருமிகளி லிருந்து உங்களைப் பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 251-50 TM.

# கல்கி
# பொருளடக்கம்

மலர் 14 | மார்ச் 20 | ஜய ௵
இதழ் 34 | | பங்குனி 7



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

"கண்ணா உன்னைக் கண்டதும் மனம்
களிப்பில் துள்ளுதடா – மணி
வண்ணா உன்னை மனதில் நினைந்தால்
எண்ணம் இனிக்குதடா."



உள்ளம் கவரும்

# வள்ளியின் செல்வன்

ஜெமினி ரிலீஸ்

இப்பொழுது சென்னை வெலிங்டன், பிரபாத், சரஸ்வதி
மூன்று தியேட்டர்களிலும் மற்றும் தமிழ்நாடெங்கும்.....

**சென்னையில் தினசரி 3 காட்சிகள் - 2-30, 6, 9-30**

மலர் 14 இதழ் 34




தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# கைத்தறி வாரமும் மக்கள் கடமையும்

கேட்பாரற்றுக் கிடந்த கைத்தறி நெசவாளர்களின் வாழ்க்கையில் மீண்டும் நம்பிக்கை ஒளி உதயமாகி யிருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடையாதவர்கள் நாட்டில் யாருமே இருக்க முடியாது.

பாரத மக்களின் சுபிட்ச வாழ்வுக்கு விவசாயமும் கைத்தறி நெசவும் இன்றியமையாத தொழில்கள் ஆகும். அவ் விரண்டு தொழில்களும் சரிவர நடைபெற்றால்தான் பாரத மக்கள் க்ஷேமமாக வாழ முடியும்.

பல நூற்றாண்டுகளாக உலகப் பிரசித்தி பெற்று விளங்கிய இந்தியக் கைத்தறி நெசவுத் தொழில் யந்திர யுகத்தில் நசித்த வரலாற்றை எல்லோரும் அறிவர். பாரத நாடு சுதந்திரம் பெற்ற பின்னர்தான் கைத்தறி நெசவாளரின் தீனக்குரல் சர்க்காரின் செவிகளில் விழத் தொடங்கியது.

1952-ம் ஆண்டில் அவர்களும் அவர்களுடைய குடும்பங்களும் பட்டினி கிடந்து பரிதவிக்கும்படி நேர்ந்தது.

அச் சமயத்தில் பாரத நாட்டிலே அன்னியர்கள் ஆட்சி புரிந்து வந்திருப்பார்களாயின், வங்காளப் பஞ்சத்தைப் போன்ற கொடிய பஞ்சம் கைத்தறி நெசவாளர்களிடையே ஏற்பட்டிருக்கும்.

ஆனால், அதிர்ஷ்டவசமாகப் பாரத நாடு சுதந்திரம் அடைந்து விட்டது. கைத்தறி நெசவாளர்களின் கஷ்ட நஷ்டங்களைச் சுதந்திர சர்க்கார் கவனித்துத் தகுந்த பரிகார முறைகளைக் கைக்கொள்ள முன் வந்தனர்.

கைத்தறி நெசவாளர்களின் பரிதாபமான வாழ்க்கை நிலை முன்னேற்றம் அடையும்படி செய்யவும், கைத்தறித் தொழிலைச் சரியான அடிப்படையில் உருவாக்கவும் சர்க்கார் நெசவுத் தொழில் விசாரணைக் கமிட்டியை அமைத்தனர். கைத்தறி நெசவுத் தொழிலின் அபிவிருத்திக்கான திட்டங்களை ஆராய்ச்சி செய்வதற்காக அகில இந்தியா கைத்தொழில் போர்ட் ஒன்றையும் நிறுவினார்கள்.

அந்த போர்டார் சென்ற பதினெட்டு மாதங்களில் பல்வேறு திட்டங்களைப் பரிசிலனை செய்து ஒன்பது கோடி ரூபாய் செலவில் சில திட்டங்களைச் சிபார்சு செய்திருக்கிறார்கள்.

அத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கான முறைகளைச் சர்க்கார் எடுத்துக் கொண்டு வருகிறார்கள்.

இதைத் தவிர, இந்திய சர்க்காரும் மாகாண சர்க்கார்களும் கைத்தறி நெசவாளர்களின் உத்தாரணத்துக்காக இலவசமாகவும் கடனாகவும் கோடிக் கணக்கில் பணவுதவி கொடுத்துள்ளனர்.

கைத்தறி நெசவாளர்களின் நிலைமை முன்னேற்ற மடைந்து, அவர்கள் சுபிட்ச வாழ்வு நடத்த வேண்டுமாயின், ராக்ஷச பலம் பொருந்திய மில்களின் போட்டியிலிருந்து அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும். கைத்தறி நெசவாளர் உற்பத்தி செய்யும் ஜவுளிகள் விற்பனையாவதற்கு வழி வகை செய்ய வேண்டும்.

கைத்தறி நெசவாளர்களுக்கு நூல் கிடைக்கவும், மில்களின் போட்டியால் அவர்களுக்குப் பாதகம் ஏற்படாமல் இருக்கவும் சர்க்கார் சகல முறைகளையும் எடுத்துக் கொண்டுள்ளனர் என்று கூற முடியாது. எனினும், நெசவாளர்களின் நிலைமை முழு மோசமாகி விடாமல் இருப்பதற்கான பல முறைகளைச் சர்க்கார் அமுலுக்குக் கொண்டு வந்திருக்கின்றனர் என்பதில் சந்தேகமில்லை.

கைத்தறி நெசவாளர்களின் நன்மைக்காக மேற்படி நெசவாளர்கள் அடங்கிய கூட்டுறவுச் சங்கங்களை நாடெங்கும் அமைத்திருக்கிறார்கள்.

கைத்தறி நெசவாளர்கள் உற்பத்தி செய்யும் ஜவுளிகள் தேங்கி விடாமல் விற்பனையாவதற்காக இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் பண்டகசாலைகளை ஸ்தாபித்திருக்கிறார்கள்.

இதைத் தவிர நாடெங்கும் கூட்டுறவு நூல் மில்களை அமைப்பதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

கூட்டுறவுச் சங்கங்களில் அங்கம் வகிக்கும் கைத்தறி நெசவாளர்களே அந்த மில்களின் சொந்தக்காரர்களாக இருப்பார்கள்.

இத்தகைய மில்களில் இரண்டு ஏற்கெனவேயே ஆரம்பிக்கப்பட்டு விட்டன.

கைத்தறி நெசவாளர்களின் நிலை முன்னேற்றமடைய, மேலே குறிப்பிட்ட விஷயங்களைக் காட்டிலும் முக்கியமான அம்சம் பொது மக்களின் ஆதரவும், ஒத்துழைப்பும் ஆகும்.

சர்க்கார் எத்தனை அரிய பெரிய முறைகளைக் கைக்கொண்டாலும், பொதுஜனங்களின் ஆதரவும் ஒத்துழைப்பும் இருந்தால்தான் கைத்தறி நெசவாளர்களின் நிலைமை பூரண அபிவிருத்தியடைய முடியும்.

அத்தகைய ஆதரவையும் ஒத்துழைப்பையும் பெறுவதற்காகவே இந்த மாதம் 20-ந் தேதியிலிருந்து 26-ந் தேதி வரையில் அகில இந்தியாவிலும் கைத்தறி வாரம் கொண்டாடப்படுகிறது.

சென்ற ஆண்டிலும் நாடெங்கும் கைத்தறி வாரம் கொண்டாடியது ஞாபகம் இருக்கலாம்.

நமது கைத்தறி நெசவாளர் சமூகம் இனி எக்காலத்திலும் கஷ்டத்துக்கு உள்ளாகும்படி நேராமல் பாதுகாப்போம் என்று இவ் வாரத்தில் பாரத மக்கள் உறுதி கொள்ள வேண்டும்.

கைத்தறி ஜவுளிகளைத் தவிர வேறு எதுவும் வாங்குவதில்லை என்று பிரதிக்ஞை செய்துகொள்ள வேண்டும். இதனால் பெரிய ஆலைகள் கெட்டுப் போக மாட்டா. அவற்றின் பண்டம் செலவு ஆவதற்கு உலகமெல்லாம் திறந்து கிடக்கிறது.

# இறைவனை வணங்குகிறோம்

**பா**ரத அன்னையின் மணி மகுடத்தில் மாணிக்கமாக ஒளி வீசி வரும் அரும் பெரும் தலைவரான பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு நேரவிருந்த ஆபத்திலிருந்து அவர் தப்பியதற்காக எல்லாம் வல்ல இறைவனை வணங்குகிறோம். நாகபுரியில் நேருஜி திறந்த மோட்டாரில் போய்க் கொண்டிருந்தபோது, ஒருவன் அந்த மோட்டாரில் பாய்ந்ததாகவும், அவனைப் போலீசார் உடனே பிடித்து விட்டதாகவும், அவனிடம் ஒரு கத்தி இருந்ததாகவும் வெளியான செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டோம். அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டு யுத்த பீதியாகிற அந்தகாரம் சூழ்ந்துள்ள உலகில் இன்று நேருஜி அந்த அந்தகாரத்தை அகற்றும் ஜோதியாகத் திகழ்ந்து வருகிறார். அப்படிப்பட்ட மகா புருஷருக்கு எவ்வித விபத்தும் நேரக் கூடாது என்று உலக மக்கள் பிரார்த்தித்து வருகிறார்கள்.

இன்று பெரும்பாலான உலக நாடுகளும் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து நிற்கின்றன. அவ்விதம் பிரிந்து நிற்பது யுத்தத்தைத் தூண்டுவதாகும் என்பதை உலகத்துக்குக் காட்டிய பெருமை நேருஜிக்கு உரியது. வல்லரசுகள் இராணுவ உடன்படிக்கைகள் செய்து கொண்டு போர் மண்டலங்களைச் சிருஷ்டித்து வரும் இக்காலத்தில், எந்த வல்லரசுக் கட்சியிலும் சேராமல் நடு நிலைமைக் கொள்கையை அனுஷ்டிப்பதன் மூலம் உண்மையான சமாதான மண்டலத்தை உருவாக்க முடியும் என்பதைக் காட்டியவர் ஜவாஹர்லால் நேரு. கொரியாவிலும் இந்தோசீனாவிலும் சமாதானம் ஏற்படும்படி செய்வது எப்படி என்று தத்தளித்துக் கொண்டிருந்த வல்லரசுகளுக்கு, காந்தி மகானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றிச் சமாதான வழியைக் காட்டிய தனிப் பெருமை நேருஜியையே சார்ந்தது. இவ்விதம் உலக சமாதானத்துக்கு வழிகாட்டியாக இருந்து வரும் நேருஜி, பாரதநாட்டுக்கும் உலகத்துக்கும் இன்னும் பல ஆண்டுகள் தொண்டு புரிந்து, நீடூழி வாழ்ந்து யுத்த ஆபத்திலிருந்து உலகம் விடுதலை பெறும்படி செய்வதில் வெற்றி பெற வேண்டும் என்றும் பிரார்த்திக்கிறோம்.

# தீரர் ஒருவர்!

**பி**ரிட்டன் அணுகுண்டுகளையும் ஜலஜ குண்டுகளையும் உற்பத்தி செய்வதை எதிர்த்து, பிரிட்டிஷ் பார்லிமெண்டு அங்கத்தினரான ஸர் ரிச்சர்டு ஆக்லண்டு தம் அங்கத்தினர் பதவியை ராஜிநாமா செய்திருக்கிறார். இதைக் கேட்டு உலக மக்கள், அக்கிரமத்தை எதிர்த்துக் கூற ஒரு தீரர் இருக்கிறாரே என்று ஆறுதல் அடைந்திருக்கிறார்கள்!

பிசாச குண்டுகளை மொத்தமாகவும் சில்லறையாகவும் வழங்க அமெரிக்கா தயாராய் இருக்கும் போது, பிரிட்டன் இந்த குண்டு உற்பத்தியில் தானும் ஈடுபடப் போவதாகக் கூறியிருப்பது உலக மக்கள் மனத்தில் பெருஞ் சஞ்சலத்தை உண்டாக்கியிருக்கிறது. பிரிட்டன் புது சீனாவை ஐ. நா. சபையில் அனுமதிக்க வேண்டும் என்று கூறியதிலிருந்தும் மற்றும் பலப் பல காரியங்களாலும் அமெரிக்காவைக் கட்டுப்படுத்தி, சமாதானத்துக்கு உண்மையாகப் பாடுபட்டு வருகிறது என்று ஒரு அபிப்பிராயத்தை உலக மக்கள் மனத்தில் ஏற்படுத்தியிருந்தது. அந்த எண்ணத்தை ஜலஜ குண்டு உற்பத்தி செய்யப் போவதாக முடிவு செய்த தீர்மானம், ஒரேயடியாய் அழித்துவிட்டது!

பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில் துரைதான் ஜலஜ குண்டு உற்பத்தி செய்து, யுத்தத்துக்கு அழைப்பு அனுப்புகிறாரே ஒழிய பிரிட்டிஷ் பொது மக்கள் இதற்கு உடன்படவில்லை. சென்ற யுத்தத்தில் அவர்கள் பட்ட துன்பங்கள் அவர்கள் மனத்தில் இன்னும் பசுமையாக இருக்கின்றன. ஆகவே இதற்கு உடன்படமாட்டார்கள். இதை இன்னும் சந்தேகமற பிரிட்டிஷ் பிரதம மந்திரிக்கு மூளையில் அறைந்தாற் போல் எடுத்துக் கூற ஆக்லண்டு தீரர் தீர்மானித்திருக்கிறார். தாம் அங்கத்தினர் பதவியை ராஜிநாமா செய்து விட்டு மீண்டும் அவர் ஜலஜ குண்டு உற்பத்தி எதிர்ப்பையே தமது தேர்தல் விக்ஞாபனமாகக் கொண்டு தேர்தலுக்கு நிற்கப் போகிறார். எந்தக் கட்சியின் ஆதரவிலும் நிற்காமல் சுயேச்சையாக நிற்கிறார்.

"ஜலஜ குண்டு உற்பத்திக்கு ஆதரவாக இருந்த அங்கத்தினர்களுடன் ஒரு பந்தியில் உட்கார வெட்கப்படுகிறேன்" என்று சொன்ன ஆக்லண்டினுடைய நேர்மையையும் தீரத்தையும் பொது மக்களின் சீரிய பண்பில் அவருக்குள்ள திட நம்பிக்கையையும் கண்டு மகிழ்கிறோம்.

---

* தமிழ் நாட்டுக் கைத்தறியாளரின் குடும்பத்தை இந்த இதழ் அட்டைப் படம் சித்திரிக்கிறது.

# என்ன சேதி?

## நல்வாழ்வுக்கு அஸ்திவாரம்

எந்த நற்பணியிலும் மற்ற மாகாணங்களை முந்திக் கொண்டு அவற்றுக்கு வழி காட்டி நின்ற நமது சென்னை மாகாணம் நமது நாட்டு வைத்திய முறைகளை மறையாமல் பாதுகாக்கும் பணியைப் பல ஆண்டுகளுக்கு முன்பே ஏற்றுக் கொண்டு, இந்திய வைத்திய முறைக்கெனத் தனிக் கல்லூரியை ஏற்படுத்திச் சீரிய முறையில் தொண்டு செய்து வருகிறது. இக்தக் கல்லூரியில் மருத்துவம் பயிலும் மாணவர்களுக்கு இந்திய வைத்திய முறைகளோடு மேனாட்டு வைத்திய முறைகளிலும் பயிற்சி அளித்து வருவது குறிப்பிடத் தக்கதோர் விஷயமாகும்.

வைத்தியக் கல்லூரியின் வளர்ச்சிக்கு ஏற்ப வளமான கட்டடங்களும் தேவைப்படுவது இயல்பு தானே? பூந்தமல்லிச் சாலையில் உள்ள இக் கல்லூரிக்குப் பல லட்சம் ரூபாய் செலவில் புதிய கட்டடம் கட்டுவிக்கப்பட்டு இம்மாதம் எட்டாந்தேதியன்று சிறப்பாகத் திருவிழாவும் நடந்தேறியது.

சென்னை ராஜ்ய முதல் அமைச்சர் புதுக் கட்டடத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில் "இந்திய வைத்தியம், மேல் நாட்டு வைத்தியம் ஆகிய இரண்டிலும் பயிற்சி பெற்றிருக்கும் நீங்கள் மேல் நாட்டு வைத்தியம் ஒன்றை மட்டுமே படித்திருப்பவர்களைக் காட்டிலும் பல படி மேலானவர்கள். இந்திய வைத்தியத்தை சாமான்யம் என்று எண்ணித் தாழ்வு மனப்பான்மைக்கு இடங் கொடாதீர்கள்!" என்று இந்திய வைத்தியக் கல்லூரி மாணவர்களுக்கு ஊக்கம் அளிக்கும் முறையில் பேசி ஆசி மொழிகளையும் கூறினர்.

நோயைத் தீர்ப்பது வைத்திய சாஸ்திரம். உண்மையும் அறிவும் உலகத்தில் விருத்தியாவதற்குரியமுறை தேட வேண்டுமே ஒழிய, கிழக்கு மேற்கு என்கிற வித்தியாசம் கிடையாது. பழையது விருத்தியாகும்போது அதற்குப் புதியது என்கிற பெயர் உண்டாகிறது. பழைய அறிவில் ஏதேனும் மறந்து போனால் அதை நினைவுக்குத் தந்து கொள்வதும் அவசியமாகும். கீழ்ப்பாக்கத்து நாட்டு வைத்தியக் கல்லூரி மாணவர்களுக்குப் புது ஆராய்ச்சியினால் அடைந்த வைத்தியப் படிப்பும் சொல்லித் தருவதற்கான ஏற்பாடுகள் ராஜாஜி மந்திரி சபைக் காலத்தில் செய்யப்பட்டன. அதை அந்தக் கல்லூரி மாணவர்கள் மிகவும் பாராட்டி வரவேற்றுப் படித்து வருகிறார்கள். வைத்திய சாஸ்திரத்தில் வேறுபாட்டுணர்ச்சி வைத்துக் கொள்ளாமல் வைத்தியர்கள் அனைவரும் நோய் தீர்க்க எல்லா வழிகளையும் தேடி அடைவது கடமையாகும்.

## சரிசமானமாக வாழ்வோம்

"இந்தியாவில் சோஷலிஸ முறையில் சமூகத்தைத் திருத்தி அமைப்பதற்கு முதல் படியாக சாதி வேற்றுமைகளை ஒழிக்க வேண்டியது அவசியம். சாதி வேற்றுமை, வகுப்புவாதம் இவ்விரண்டும் தேச பக்தர்களுக்கிடையே சமத்துவத்தை ஏற்படுத்துவதற்கு முட்டுக்கட்டையாக உள்ளன. இவை நீடித்தால் இந்தியா தனது சுதந்திரத்தைக்கூடப் பாதுகாத்துக் கொள்ள முடியாது" என்று நாகபுரியில் பாரத் லோக் சபா வருஷாந்திர மகாநாட்டில் பாரத நாட்டுப் பிரதமர் ஜவாஹர்லால் நேரு குறிப்பிட்டுள்ளார்.



ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் சங்கீதக் கலைப் பணியைக் கௌரவிப்பதற்காக "பத்ம பூஷணம்" என்ற விருதை சென்ற ஆண்டு ஆகஸ்டு 15-ந்தேதி சுதந்திர தினத்தன்று இந்திய ஜனாதிபதி ஸ்ரீ ராஜேந்திர பிரசாத் அளித்தது நேயர்களுக்கு நினைவிருக்கும்.

அந்த 'பத்ம பூஷணம்' விருதையும், பதக்கத்தையும் சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா ஜனாதிபதியின் சார்பில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மிக்கு வழங்கினார். மேற்படி விருது வழங்கும் விழா சென்ற 11-ட கிண்டி ராஜபவனத் தோட்டத்தில் சென்னைப் பிரமுகர்கள் அடங்கிய குதூகலமான மகாசபையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

விழா முடிவில் ஸ்ரீமதி எம். எஸ். "ஸ்ரீ ரங்கபுர விஹாரா" என்ற கீர்த்தனத்தைப் பாடிச் சபையோரை மகிழ்வித்தார்.

## பட்டாபிஷேகம்

ஆந்திராவில் மந்திரி சபை அமைப்பதற்கான பூர்வாங்க ஏற்பாடுகளெல்லாம் முடிந்து விட்டன. பதவி ஏற்கும் வைபவம் இவ்விதம் நிறைவேறும் என்று எதிர்பார்க்கலாமா?

## பின்பற்றுவார்களா ?

முன்னணிக் கட்சி முன்பே காங்கிரஸில் சேர்ந்து விட்டது. ஆந்திராவில் என். ஜி. ரங்காவும், கிருஷிக் லோக் கட்சியினரும் காங்கிரஸோடு இணைந்து விட்டார்கள். மீதியுள்ளவர்களும் அதைப் பின்பற்றுவார்களா?

ஆரம்பப்பள்ளி ஆசிரியர்களுக்கு, அவர்களின் பதவி காலத்துக்குப்பின் பென்ஷன் வழங்கச் சென்னை சர்க்கார் முடிவு செய்திருக்கிறது.

## கதையின் முடிவு!

திருவாங்கூர் கொச்சி ராஜ்யத்தில் இடதுசாரிக் கட்சியினருக்குள் பிளவு ஏற்பட்டுவிட்டது!

சுதந்தர இந்தியாவின் அரசியல் அமைப்பு, மதத்தை அடிப்படையாகக் கொண்டது இல்லை. ஜனநாயக உரிமைகளைத்தான் அடிப் படையாகக் கொண்டிருக்கிறது. சாதி சமயம் முதலிய வேற்றுமைகள் இன்றி இந்தியப் பிரஜைகள் எல்லாருக்கும் சரிசம மான உரிமைகள் வழங்கப்பட்டிருக்கிறது.

இருந்தாலும் நம் நாட்டிலிருந்து சாதி வேற்றுமை அடியோடு தொலைந்து விட்ட தாக யாரும் சொல்ல முடியாது. அதனால் தான் நேருஜி அவ்வாறு கூறியிருக்கிறார்.

சரித்திர காலந் தொட்டுச் சாதிவேற்று மைகள் வடநாட்டிலும் சரி, தென்னாட்டிலும் சரி, இருந்து வந்திருக்கின்றன.

பழைய காலத்திலிருந்து சாதி வேற்றுமை களைப் பலர் கண்டித்து வந்திருக்கிறார்கள். அவ்வப்போது பல மகான்கள் சாதி வேற் றுமைகளையும், சாதி காரணமாக ஏற்றத் தாழ்வு கூறுவதையும் கண்டித்து வந்தபோதி லும், இந்த சமுதாயத்தை வடநாடு-தென் னாடு என்னும் வேற்றுமை இன்றி அந்தநோய் பீடித்துக் கொண்டுதான் வந்திருக்கிறது.

ஆனால் காந்தி மகானின் ஆத்ம சக்தி அந்த வேற்றுமையைக் களையும் அரும் பெருங் காரி யத்தைக் கணிசமாகச் சாதித்திருக்கிறது.

காந்தி மகான் காட்டிய அன்பு வழியில் சாதி வேற்றுமையை இந்த நாட்டிலிருந்து ஒழிக்க வேண்டுமென்றுதான் நேருஜி வேண் டிக் கொண்டிருக்கிறார்.

இந்திய நாட்டில் சாதி துவேஷம் நீங்கி எல்லாரும் சரிசமானமாக வாழ்வதற்கு பிரதமர் நேருஜி காட்டும் அன்பு வழியைப் பின்பற்றி நடந்து வருவோமாக!

## அமெரிக்க நெய்

நெய் வியாபாரம் செய்பவர்கள் கண்ட பொருள்களைக் கலந்து கலப்பட நெய்யை விற்று வருகிறார்கள். நெய் என்ற பெயரில் ஏதோ கிடைத்தால் சரி என்று வாங்கும் மக்கள், தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வதோடு தங்கள் தேக ஆரோக்கியத் தையும் கெடுத்துக் கொள்ளுகிறார்கள்.

இத்தகைய நிலையில் அமெரிக்காவிலிருந்து நெய் இறக்குமதி செய்வதைப் பற்றிய செய்தி வந்திருக்கிறது. அமெரிக்க நெய் வருவதனாலா வது கலப்பட நெய் வியாபாரம் குறையுமானால் இந்த இறக்குமதியைக்கூட நாம் வரவேற்க லாம். அமெரிக்காவிலிருந்து இறங்கும் நெய் முழுதும் ஸீல் செய்யப்பட்ட டின்களில் இந் திய சர்க்காரே வரவழைக்கிறார்கள். ஒரு சேர் நெய் கொண்ட மூடிய டின்கள் வருவதனால் மக்கள் நேராக இந்தச் சுத்த நெய்யை வாங்க முடியும். இதையும் வியாபாரிகள் வாங்கிக் கலப்படம் செய்து விற்கவும் முயல்வார்கள். உண்மையான நெய் வேண்டும் என்பவர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கலப்பட நெய்யைக் காட்டிலும் கலப்படம் இல்லாத நல்லெண்ணெயே மேலானது.

## பேராசிரியருக்குப் பரிசு

சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களைத் தமிழ் நாடு நன்கு அறி யும். அவர் எழுதிய 'தமிழ் இன்பம்' என்ற நூலை மத்திய அரசாங்கத்தினர் சார்பில் சாகித்ய அகாடமியார் தேர்ந்தெடுத்து, தமிழ் நூல்களில் சிறந்ததற்கு அளிக்கும் ஐயாயிரம் ரூபாய்ப் பரிசை வழங்கத் தீர்மானித்திருக் கிறார்கள். பேராசிரியர் எழுதிவரும் 'ஆற்றங் கரையினிலே' என்ற கட்டுரைத் தொடரை வாரந்தோறும் படித்து அநுபவித்து வரும் நமது 'கல்கி' அன்பர்களுக்கு இந்தச் செய் தியை அறிவிப்பதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம். நமது நேயர்களோடு நாமும் சந்தோஷம் கொள்கிறோம்.

## உலகம் மறக்காது!

பெனிஸிலின் என்ற அற்புத மருந்தைப் பற்றித் தெரியாதவர்களே அனேகமாக இருக்க மாட்டார்கள் என்று சொல்லலாம். சென்ற மகா யுத்தத்தின்போது 'பெனிஸி லின்' மருந்து பதினாயிரக்கணக்கான சிப்பாய் களுக்கு உயிரையும், உணர்வையும் அளித் திருக்கிறது. பெனிஸிலின் மட்டும் அப்போது இல்லையானால் எத்தனையோ ஆயிரக்கணக் கான சிப்பாய்கள் உயிர் இழந்திருப்பார்கள். நமது தினசரி வாழ்வில் இந்த சஞ்சீவி எத் தனையோ விதத்தில் நமக் குத் துணை செய்து வரு கிறது. இந்த அற்புத சஞ்சீவியான பெனிஸி லினைக் கண்டு பிடித்தவர் அலெக்ஸாண்டர் பிளமிங் என்ற பெரியார்; நோபல் பரிசு பெற்ற மேதை.



பயங்கர ரண சிகிச்சை யினால் கால் கைகள் ஊன மாகி மக்கள் நடைப் பிணங்களாக வாழும் துர்ப்பாக்கியம் ஏற்படாமல் காப்பாற்றிய பெருமை இவரையே சாரும்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன் சென்னைக்கு அலெக்ஸாண்டர் பிளமிங் விஜயம் செய் திருந்தது நேயர்களுக்கு நினைவிருக்கலாம். சென்னை நகரில் அவர் இருந்தபோது ஜெனரல் ஆஸ்பத்திரிக்கும், மருத்துவக் கல்லூரிக்கும் சென்று அரிய யோசனைகளைச் சொல்லிச் சென்றார். இந்தியாவிடம் அபிமானமுள்ள அவர் தமது எழுபத்து மூன்றாம் வயதில் திடீர் என்று மறைந்து விட்டார்.

பெனிஸிலின் மூலம் மானிடவர்க்கத்துக்குப் பேருதவி புரிந்த அலெக்ஸாண்டர் பிள மிங்கை உலகம் என்றும் மறக்காது.

1

0

# கைத்தறி நெய்யும் காவியம்

**கனம். எம். பக்தவத்ஸலம்**

நம் ராஜ்யத்தில் பன்னிரண்டு பேரில் ஒருவர் நெசவுத் தொழிலாளி. பண்டைக் காலம் முதல் இன்று வரை நிலைத்து வந்துள்ள இப் பண்பட்ட கைத்தொழிலுக்கு, முதலாளித்துவ இயந்திரத் தொழில் முறைப்படி அமைந்துள்ள ஆலைகளின் போட்டியால் ஆபத்து நேர்ந்துள்ளது. பொருத்தமற்ற அந்தப் போட்டியினால், இக் கைத்தறி நெசவுத் தொழில் அழியாமல் காப்பது, நாட்டு நலனில் நாட்டம் கொண்டோரின் முக்கிய கடமையாகும்.

ஆலை நிறுவ லட்சக்கணக்கான ரூபாய் மூலதனம் வேண்டும். இயந்திர யுகத்தின் வளர்ச்சியின் எதிரொலிகள், பொருளாதாரத் துறையில் மட்டுமல்ல, சமூகக் கலாசாரத் துறைகளிலும் ஒலிக்கின்றன. அவ்விளைவுகளின் பயனாய், தொன்று தொட்டு நம் மக்களிடை ஊறி, ஊன்றி, ஊடுருவி யிருந்த பல அடிப்படைப் பண்புகளும் குணங்களும் பாதிக்கப் படுகின்றன. பழைய பண்பாடு பெயர்ந்து, அதற்குப் பதில், புதியது உருவாகாமல், ஒரு விபரீத வெறுமையில் சிக்கி இருக்கின்றனர் இன்றைய இயந்திர யுகப் பாட்டாளி மக்கள்.

இந்தச் சூழ்நிலையில் உழைப்பையே மூலதனமாகவும், உண்மையையே தொழில் முறையாகவும் கொண்டு இலட்சக்கணக்கான மக்கள் கைத்தறித் தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர். அவர்கள் தொழிலால் அவர்கள் குடும்ப வாழ்க்கை சிதறிச் சின்னா பின்னமாகவில்லை. துள்ளி ஆடும் குழந்தை முதல் தொண்டு கிழவர் வரை, குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் அத் தொழிலில் பங்கு கொள்கின்றனர்; உதவுகின்றனர். அவர்கள் தொழில் குடும்ப ஒற்றுமையை உறுதிப் படுத்துகிறது. நெசவாளர் குடும்பத்தில் உள்ள சிறுவனுக்குப் பொறுப்புணர்ச்சியைப் பள்ளிக்கூடத்தில் போதித்துப் புகட்ட வேண்டிய அவசியமில்லை. அன்றாட அலுவலே, அவனுக்கு அரிய ஆசிரியனாக அமைந்து விடுகிறது. இவர்கள் செய்யும் துணியிலோ, தலை முறை தலைமுறையாகத் தொடர்ந்து, தழைத்து வந்துள்ள தேர்ச்சி, திறமை, தெளிவு ஆகியவற்றின் முத்திரையைக் காணலாம். தறியில் இவர்கள் செய்த அற்புதங்கள், நம் நாட்டில் மட்டுமல்ல, அயல் நாடுகளிலும் புகழ் பெற்று விளங்கி வந்தன. இவ்வாறு நம் நாட்டுக்கே சீரும் பேரும் தேடித் தந்த இந்தச் சீரிய தொழில் சிதைந்து சீரழியாமல் நாம் தாங்கிக் காக்க வேண்டும்.



நம் ராஜ்யத்தில் மட்டும் ஏறக்குறைய அறுபது லட்சம் மக்கள் கைத்தறி நெசவுத் தொழிலை நம்பி வாழ்கின்றனர். அவர்கள் வாழ்வு ஆக்கம் பெறவேண்டுமானால், கைத்தறித் துணியையே வாங்க மக்கள் உறுதி கொள்ள வேண்டும். பொதுமக்களிடையே இத்தகைய விழிப்பு ஏற்படாவிடில், அரசாங்கம் எத்தனைத் திட்டங்கள் வகுத்து, எவ்வளவு சலுகைகள் காட்டினாலும் உருவான உண்மையான பயன் ஏற்படாது.

நம் நாட்டில் ஏறக்குறைய இருபத்தெட்டு லட்சம் கைத்தறிகள் உள்ளன. இதில் ஐந்தரை லட்சத்துக்கு மேற்பட்ட தறிகள் சென்னை ராஜ்யத்தில் உள்ளன. இவ்வளவு முக்கியமான கைத்தொழிலைக் காத்துப் பேண, மத்திய அரசாங்கமும், நம் சென்னை ராஜ்ய அரசாங்கமும் துணிவான பல நடவடிக்கைகள் மேற்கொண்டுள்ளனர். அகில இந்திய கைத்தறி போர்டு ஒன்றை இந்திய அரசாங்கம் அமைத்துள்ளது. ஆலைகள் வேஷ்டி உற்பத்தி செய்வதையும் இந்திய அரசாங்கம் ஓரளவுக்குள் கட்டுப் படுத்தினர்.

சென்னை ராஜ்யக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கம் சில உற்பத்தி சாதனங்கள் வாங்க, இந்திய அரசாங்கம் நிதி உதவி அளித்தது. கைத்தறி அபிவிருத்தி நிதி ஒன்றை மத்திய அரசாங்கம் நிறுவியுள்ளது. நம் நாட்டில் உற்பத்தியாகும் மில் துணியில் கெஜத்துக்குக் காலணா வீதம் தீர்வை விதித்து அந்த அதிகப்படியான வருமானத்தைக் கொண்டு இந்த நிதி அமைக்கப்பட்டுள்ளது. இந்த "செஸ்" நிதியைக் கொண்டு கைத்தறித் தொழில் அபிவிருத்திக்குப் பல திட்டங்கள் நடந்து வருகின்றன. நெசவாளர்களைக் கூட்டுறவு சங்கங்களில் சேர்ப்பது, இத் திட்டத்தில் முக்கிய அம்சமாகும். இத் திட்டம் அமுலுக்கு வருமுன் நம் ராஜ்யத்தில் 566 நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் இருந்தன. அவற்றின் ஆதரவில் 97,642 தறிகள் இருந்தன. இத் தீவிர முயற்சிகளின் பயனாய் மேலும் 226 கூட்டுறவுச் சங்கங்கள் பதிவு செய்யப் பட்டுள்ளன. இப்பொழுது நம் ராஜ்யத்தில் ஒன்றே கால் லட்சத்துக்கு மேற்பட்ட தறிகள் கூட்டுறவு அமைப்பில் வேலை செய்து வருகின்

## ராஜாஜி செய்தி

தற்சமயம் கைத்தறிக்காரர்கள் ஓரளவு சந்தோஷமாகத் தங்கள் தொழிலைச் செய்து வருகிறார்கள். உற்பத்தி செய்த துணியை விற்பதில் அதிகக் கஷ்டம் காணவில்லை. இதையெல்லாம் பார்த்துத் திருப்தி அடைந்து வருகிறேன். ஆயினும் என் நோக்காவது ஒரு நாள், அவர்கள் நெய்யும் சேலைகளும் வேஷ்டிகளும் தவிர வேறு ஆலைத் துணிகளை யாரும் வாங்காமல் இருக்க மக்களுக்கு திடபுத்தியும் கருணையும் உண்டாக வேண்டும். அன்றுதான் கைத்தறிக் குடும்பங்களுக்கு உண்மையான க்ஷேமம் உண்டாகும். துணி வாங்கி உடுத்தும் நமக்குப் போதிய அறிவு இல்லாவிடில், மக்களுடைய க்ஷேமத்திற்காக அதிகாரமும் ஸ்தானமும் பெற்று வேலை செய்பவர்கள் உதவி செய்துதான் தீரவேண்டும். நம்முடைய தறிக்காரர்களுடைய சேலை வேஷ்டிகளுக்குப் போட்டியாக ஆலைகளில் எந்தவிதமான துணியும் உண்டாக்காமல் சட்டம் செய்து, காப்புத்தர வேண்டும். அல்லது அத்தகைய துணிகளுக்கு வரி போட்டுக் கைத்தறித் துணிகள் விற்பனை ஆவதற்குச் சலுகை தரவேண்டும்.

ஒரு வித ஆலைத் துணிகளுக்கு விற்பனை வரி போடப்பட்டிருக்கிறது. இதற்காகச் சென்ற ஆண்டில் சட்டம் செய்யப்பட்டது. அந்தச் சட்ட மசோதாவில் ஒரு பாகமே அமுலுக்கு வந்திருக்கிறது. நடுத்தர நம்பர் நூல்-துணிகளுக்கு வரிபோட மத்திய அரசாங்கம் அநுமதி தரவில்லை. அரசாங்கத்தின் உதவி வேண்டுமானால் கிளர்ச்சி செய்துதான் பயன் அடைய முடியும். நல்ல முறையில் சாவதானமாகக் கிளர்ச்சி செய்தால், குடியரசில் பயன் பெறுவதற்குச் சந்தேகம் இல்லை.

கைத்தறித் துணிகளைப்பற்றி வேண்டிய அளவு இதற்கு முன் சொல்லியிருக்கிறேன். அனைவரும் அறிந்த உண்மைகள். பாடுபட்டுப் பிழைக்கும் லக்ஷக்கணக்கான மக்கள் இந்தத் தொழிலில் ஈடுபட்டு வருகிறார்கள். அவர்களுடைய குடும்பங்கள் பெருகிக் கொண்டும் வருகின்றன. குழந்தைப் பருவத்திலேயே தொழிலை அந்தக் குழந்தைகளும் கற்று வருகிறார்கள். இந்த சமூகம் தென்னாட்டு வாழ்க்கையில் முதுகெலும்பைப் போன்ற முக்கியமான பாகம். இவர்களுக்கு ஆண்டவன் அருள்வானாக!

றன. இக்கூட்டுறவுச் சங்கங்களில் புதிதாய்ச் சேர்பவர்களுக்குப் பங்கு மூலதனமாய் வட்டியில்லாமல் முன் பணம் கொடுக்கப் படுகிறது. இதுவரை, இந்த வகையில் ஐந்தேகால் லட்சத்துக்கு மேற்பட்டுள்ள தொகை தரப்பட்டுள்ளது. இதல்லாமல் சங்கங்களை நடத்தக் கூட்டுறவு மத்திய பாங்கும் கடன் தந்துள்ளது.

அபிவிருத்தித் திட்டத்தில் மற்றொரு முக்கிய அம்சம், விற்பனை வசதிகளை அதிகரிப்பது. இதற்காக அதிக விற்பனை நிலையங்களையும் 'எம்போரியங்'களையும் திறக்கத் திட்டமிடப் பட்டுள்ளது. நம் ராஜ்யத்தில் மிகப் பெரிய நெசவாளர் ஸ்தாபனமான சென்னை ராஜ்ய கைத்தறி, நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தின் ஆதரவில், இதுவரை 53 விற்பனை நிலையங்கள் இருந்தன. இத்திட்டத்துக்குப் பின் 16 புதிய விற்பனை நிலையங்கள் நிறுவப்பட்டுள்ளன. சராசரி இதன் பயனாய், முன்பு மாதம் 21 லட்ச ரூபாய்க்கு விற்பனை நடந்து வந்ததற்கு எதிராக, இப்பொழுது 27 லட்சத்துக்கு விற்பனை நடந்து வருகிறது. மோட்டார் வான்கள் மூலம் கைத்தறித் துணிகளைத் தெருத் தெருவாக எடுத்துச் சென்று விற்கவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

கைத்தறித் துணியை வாங்குவோர்க்கு ரூபாயில் ஓரணா வட்டக் கழிவு கொடுக்கும் முறை மூலம் விற்பனையை அதிகரிக்க ஒரு திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. இதன் பேரில், ராஜ்யத்திலுள்ள கூட்டுறவுச் சங்கங்களுக்கு 17 லட்ச ரூபாய்க்கு மேல் மான்யமாக அரசாங்கத்தால் தரப்பட்டுள்ளது.

செஸ் நிதியைக் கொண்டு, நெசவாளருக்கு வீடு கட்டும் திட்டங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. அம்மாபேட்டையில் 200 வீடுகளும் அருப்புக் கோட்டையில் 200 வீடுகளும், மொத்தம் பதினெட்டரை லட்ச ரூபாய் செலவில் கட்டப்படும்.

வெளி நாடுகளில் கைத்தறித் துணி விற்பனையை அதிகரிக்கவும் விரிவான திட்டம் அமுல் நடந்து வருகிறது.

கைத்தறித் தொழில் வளர்ச்சிக்கு, அரசாங்கம் சாத்தியமான வகைகளிலெல்லாம் உதவி செய்து வருகிறது என்பது இதிலிருந்து விளங்கும். இவை அவசியம்தான். இவற்றால் ஓரளவு முன்னேற்றம் ஏற்படும் என்பதிலும் ஐயமில்லை. ஆனாலும் இத்தொழில் துறையில் நிரந்தர வளர்ச்சி ஏற்படுவது மக்கள் காட்டும் ஆதரவைப் பொறுத்தது. நம் நாடு வளமுள்ள நாடாகத் திகழ வேண்டுமானால் லட்சக்கணக்கான மக்களின் வாழ்க்கையின் ஜீவநாடியான கைத்தறித் துணிகளை ஆதரிக்கத்தான் வேண்டும். காந்தியப் பண்பாட்டில் பழகிய தமிழ் நாட்டு மக்கள் உண்மை உழைப்பின் உயர்வை உணர்ந்து மதிக்கத் தவறமாட்டார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

# வாழ்வின் மணம்

ஸோமாஸ்

மல்லிகையின் நறுமணம் கம்மென்று அந்த அறை முழுவதும் பரவிச் சமையலறைப் பக்கமும் எட்டியது. சுசிலாவுக்குத் தன் கணவன் ஆபீஸிலிருந்து வந்து விட்டான் என்பதை அறிந்து கொள்ள அதிக நேரம் பிடிக்கவில்லை. தினம் ஏழு மணிக்கு முன்பு மூர்த்தி ஆபீஸிலிருந்து திரும்பியது கிடையாது. ஆனால் அன்று அவன் அவ்வளவு சீக்கிரம் வந்து விட்டதுதான் அவளுக்குச் சற்று அதிசயமாயிருந்தது.

"சுசிலா, இந்தா இந்தப் பூவை எடுத்துக் கொள். இன்று என் நண்பன் ராமலிங்கமும் அவன் மனைவியும் வருகிறார்கள். நல்ல டிபனும் காப்பியும் தயார் செய். அதற்காகத்தான் சீக்கிரம் வந்தேன்! நாம் இன்று ஒரு சினிமாவுக்குப் போகிறோம்" என்று அவள் கணவன் மூர்த்தி உற்சாகத்தோடு சொன்னதும் சுசிலா ஒன்றும் பதில் சொல்லாமல் மல்லிகைப் பூவைக் கையில் வாங்கிக் கொண்டாள்.

"என்ன சுசிலா, பதிலே பேசவில்லையே! உடம்புக்கு ஒன்றுமில்லையே!" என்று அன்பு ததும்பக் கேட்டு அவள் நெற்றியில் கைவைத்துப் பார்த்தான் மூர்த்தி.

சுசிலா நாணத்துடன், "அதெல்லாம் ஒன்றும் இல்லை. இதோ வந்து விட்டேன்!" என்று சொல்லி விட்டு உள்ளே போனாள். மூர்த்தியின் நண்பன் ராமலிங்கத்துக்கும் அவன் மனைவி பத்மாவுக்கும் காப்பி, சிற்றுண்டி ஏற்பாடு செய்வதில் மூழ்கினாள்.

அவள் கைகள்தான் வேலை செய்தனவே தவிர, அவள் மனம் இன்ப எண்ணங்களில் அமிழ்ந்து எங்கெல்லாமோ சுற்றி ஆனந்த ஊர்வலம் வந்தது.

மூர்த்தி விவாக பந்தத்தில் சிக்கிக் கொள்ளக் கூடாது என்று தீர்மானமான திடசித்தத்துடன் இருந்தான். அதற்கு அநுசரணையாக அவன் நண்பன் ராமலிங்கம் அவனுக்குப் புத்திமதி சொல்லி வந்தான்.

"மூர்த்தி, நீயும் நானும் இத்தனை நெருங்கிய நண்பர்களாயிருப்பதற்கு அடையாளமாக ஒரு சபதம் எடுத்துக் கொள்ள வேண்டும். எக்காரணம் கொண்டும் விவாக பந்தத்தில் ஈடுபடக் கூடாது. விவாகம் மனிதனைப் பாச வலையில் வீழ்த்தக் கூடியது, ஜாக்கிரதை! ஜாக்கிரதை!" என்று ராமலிங்கம் சதா உபதேசம் செய்து, பட்டினத்துப் பிள்ளையார், சுவாமி ராமலிங்கப் பெருமான், சிவவாக்கியர் முதலிய ஞான புருஷர்களின் வேதாந்த, சமரஸ ஞானப் பாடல்களை உள்ள நெகிழ்ச்சியோடு பாடிக் காட்டி மேற்படி ஞானிகளின் நூல்களையும் வாங்கி அவனுக்கு அன்பளிப்பாக வழங்கியிருந்தான்.

ராமலிங்கத்தின் இந்த விடாமுயற்சிகள் வீண் போகவில்லை. மூர்த்தியின் மனதில் பசுமரத்து ஆணிபோல் பதிந்து விட்டன. அவற்றின்படி நடக்கவும் அவன் தீவிரமாக முற்பட்டு விட்டான். அதன் காரணமாக அவனது சுபாவத்தில் தீவிரமான மாறுதல்கள் ஏற்படலாயின. கல்லூரிப் படிப்பு முடிந்து உத்தியோகத்தில் அமர்ந்து விருப்பு வெறுப்பு இன்றித் தொண்டாற்ற ஆரம்பித்தான். அதுவும் ஆத்ம நண்பன் ராமலிங்கத்தினுடைய உத்தரவின்படிதான் வேலையை ஏற்றுக் கொண்டான் மூர்த்தி.

ராமலிங்கம் எந்த உத்தியோகப் பிணைப்பிலும் சிக்கவில்லை. அதற்கு முக்கிய காரணம், அவன் படித்த ஞான நூல்கள் மட்டும் அல்ல; அவன் நல்ல பண வசதியுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவனாயிருந்ததுதான். அவன் பெற்றோர்களுக்கு ஒரே பிள்ளை. அவனுக்கு நல்ல இடத்தில் விவாகம் செய்து வைக்க வேண்டும் என்று அவர்கள் மிகவும் ஆவலாயிருந்தார்கள். ராமலிங்கம் கொஞ்சமும் விட்டுக் கொடுக்கவில்லை.

சில மாதங்கள் அமைதியாகச் சென்றன. ராமலிங்கத்தினுடைய பிரமச்சரிய விரதத்துக்குப் பங்கம் ஏற்படக்கூடிய பலவித முயற்சிகள் நடந்தன. ராமலிங்கம் கடைசியில் அவைகளிலிருந்து தப்பும் பொருட்டு, அகில பாரத தேசத்தையும் சுற்றி வரத் தீர்மானித்து ஒரு பெரிய தீர்த்த யாத்திரையை மேற் கொண்டான். மூர்த்தி தானும் உத்தியோகத்தைத் தியாகம் செய்து விட்டு அவனைப் பின் தொடரத் தீர்மானித்திருந்தான்.

ராமலிங்கம் அவனைத் தழுவிக் கொண்டு, "அப்பா மூர்த்தி, மனசைத் தளர விடாதே. ஒரு பொருளை நம்பி மற்றொரு பொருள் இருப்பதாக எண்ணாதே. யாருக்கு யார் ஆதரவு! யாருக்கு யார் வழிகாட்டி! இதெல்லாம் மாயை—வெறும் மயக்கம். புலனடக்கத்தோடு இச்சை யகன்ற புனிதப் பாதையில் தனி மனிதனாக நடந்து செல். வழியில் சம்சாரச் சகதி குறுக்கிடும். அப்பொழுது ஞானம் என்னும் விளக்கையும், வைராக்கியம் என்னும் ஊன்றுகோலையும் உறுதுணைகளாகக் கொண்டு அநாயாசமாக அச் சகதியைக் கடந்து செல். நிச்சயமாக உன் லட்சியத்தை அடைவாய்!" என்று பாசபந்தங்களற்ற பரம ஞானியைப் போலப் பேசினான்.

இதைக் கேட்ட மூர்த்தியின் உடம்பு முழுவதும் சிலிர்த்துப் புளகம் எய்திக் குளிர் ஜுரம் வரும் போலாகி விட்டது.

மூர்த்தி வேறு வழியின்றித் தன் அருமை நண்பனை விட்டுப் பிரிந்திருக்கலானான். அவன் சொல்லி விட்டுப் போன உபதேச மொழிகளை உறுதியாகக் கடைப்பிடிக்கலானான்.

மூர்த்தியின் இந்த விபரீதப்போக்கு அவன் பெற்றோர்களுக்குக் கவலையை அளித்தாலும் சீக்கிரத்தில் அவனுக்கு விவாகம் செய்து வைத்துவிட்டால் எல்லாம் சரியாகி விடும் என்று தீர்மானித்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர்.

சுசிலா நல்ல அழகி. அவள் முகத்தில் லக்ஷ்மீகரமான களையொன்று இருந்து கொண்டு யாரையும் வசீகரித்தது. அவள் பார்வையில் பனிநீர் படிந்த மலரின் மென்மையும் தண்மையும் கலந்திருந்தன. அவளது தன்னடக்கம் அவளது அழகை அதிகப்படுத்திக் கொண்டிருந்தது. சாந்தமும் பெருமிதமும் குடிகொண்டிருந்த அவளது இயல்பு பற்றற்ற ஞானியான மூர்த்தியையே ஒரு உலுக்கு உலுக்கி விட்டது.

மூர்த்திக்குச் சுசிலாவைக் கொடுப்பது என்று அவன் பெற்றோர்கள் ஏகமனதாகத் தீர்மானித்தனர். ஆனால் மூர்த்தி கடைசி வரையில் போராடிப் பார்த்தான். அவனுக்குப் பெற்றோர்களுடன் நேருக்கு நேர் பேசி எதிர்த்து வாதாடத் தைரியமில்லை. தன் ஆத்ம நண்பனும் வாழ்வின் வழிகாட்டியுமான ராமலிங்கத்துக்கு விரிவான கடிதம் எழுதி, விவாக பந்தத்திலிருந்து தன்னைத்

தப்புவிக்குமாறு கேட்டிருந்தான். மூர்த்தி எழுதிய அந்தக் கடிதம், யாத்திரையை மேற்கொண்டு ஊர் ஊராகப் போய்க் கொண்டிருந்த ராமலிங்கத்துக்கு மிகவும் தாமதமாகக் கிடைத்தது. ஆகவே, அவனிடமிருந்து பதில் வருவதற்குள் மூர்த்திக்கும் சுசீலாவுக்கும், பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட திருமணம் நடந்தேறியது.

கண்ணீரும் கம்பலையுமாக மூர்த்தி ராமலிங்கத்துக்கு நடந்த விவரங்களை விவரித்து, இனி மேல் தனக்கு விமோசனம் உண்டா என்று மனம் நெகிழ்ந்து எழுதியிருந்தான்.

சுமார் ஒரு மாசத்துக்குப் பிறகு ராமலிங்கத்தினிடமிருந்து மூர்த்திக்குப் பதில் வந்தது.

"நண்பன் மூர்த்திக்கு,

உன் கடிதம் கிடைத்தது. நீ ஆத்ம நண்பனுதைன் உன்னை இல்லற வாழ்வுக்குப் பலியாக்க என் மனம் சம்மதிக்க வில்லை. ஒரு வழி சொல்லுகிறேன். வீட்டிலிருந்தபடியே துறவு வாழ்க்கையை மேற்கொள். புளியம் பழம் மேல் ஓட்டின் மீது ஒட்டாமல் விடுபட்டு நிற்பது போல் எதிலும் பற்று வைக்காமல் இருக்க வேண்டும். இதையாவது செய், பார்க்கலாம்.

ராமலிங்கம்"

இந்தக் கடிதத்தைப் படித்ததும் நண்பனின் உபதேசத்தைத் தீவிரமாகப் பின்பற்றுவதெனத் தீர்மானித்தான் மூர்த்தி. இந்தத் தீர்மானத்தின் விபரீத பலனை சுசீலா அநுபவிக்க நேர்ந்தது.

சுசீலா மிகவும் பொறுமையுள்ளவள். கணவன் மனங் கோணுமல், அவனுடைய லட்சியப் பாதையில் குறுக்கிடாமல் ஒதுங்கியே இருந்து வந்தாள்.

இவ்வாறு இரண்டு வருஷங்கள் சென்றன. வர வர, மூர்த்தியின் மனத்தில் சுசீலாவைப் பற்றிய ஐயப்பாடும் பயமும் கொஞ்சம் கொஞ்சமாக நீங்கலாயின. 'இவள் பாரமார்த்திக வாழ்வுக்குப் பரம சத்துரு' என்று இருந்த எண்ணம் போய் அதற்குப் பதிலாக அத்தகைய பற்றற்ற லட்சிய வாழ்வுக்கு உற்ற துணை என்ற எண்ணம் அவன் மனத்தில் வேரூன்றலாயிற்று.

** ** **

அன்று ராமலிங்கத்தினிடமிருந்து வந்த கடிதத்தைப் பார்த்ததும் மூர்த்திக்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையே யில்லை, கடிதத்தை ஆவலோடு பிரித்தான்.

"அன்புள்ள மூர்த்தி,

நீண்ட நாட்களாக உனக்குக் கடிதம் எழுதாததற்கு மன்னித்துக் கொள். மிக முக்கியமான ஒரு சமாசாரத்துடன் நாளை மாலை உன் வீட்டுக்கு வருகிறேன். என்னுடன் வரும் இன்னெருவருக்கும் சேர்த்து இரவு சாப்பாடு தயார் செய்து வை.

ராமலிங்கம்"

இந்தக் கடிதத்தைப் படித்ததும் மூர்த்தி, "சுசீலா!" என்று அன்பு ததும்பும் குரலில் அழைத்துக்கொண்டே சமையலறைக்கு ஓடினான்.

இரண்டு வருஷ மண வாழ்க்கையில், இது வரையில் கேட்டறியாத கணவனின் அழைப்பைச் செவி குளிரக் கேட்டாள் சுசீலா. அதில் பொங்கி வழிந்த அன்பு அவளை மெய் மறக்கச் செய்தது. புலன் அடக்கத்தில் வாழ்ந்து புனித லட்சியத்தை எதிர்நோக்கியிருந்த அவள் உள்ளம் திடீரென்று சலனம் அடைந்தது. கல்லாகி விட்டிருந்த அவள் மனம் துணிந்து நெகிழலாயிற்று. இது அவளுக்கே விளங்காத புதிரா யிருந்தது.

"சுசீலா, என் நண்பன் ராமலிங்கம் இன்று இரவு வருகிறான். அவனுடன் கூட ஒருத்தரும் வருகிறார். ஆகையினால் இரண்டு பேர்களுக்கு நல்ல சாப்பாடு தயார் பண்ணி வை" என்றான்.

சுசீலாவுக்குச் 'சப்'பென்று போய் விட்டது. கண்காணுத இடத்தில் இருந்தபோதே, ராமலிங்கம் அவர்கள் வாழ்வில் குறுக்கிட்டு அதைப் பாழாக்கி யிருந்தான். இப்பொழுது நேரிலும் வந்து விட்டால் அப்புறம் வேறு வினையே வேண்டியதில்லை. இதை நினைத்து அவள் மனம் ராமலிங்கத்தினிடம் தீராத வெறுப்புக் கொண்டது. எனினும் இரவு வரப்போகும் விருந்தாளிகளுக்கு விருந்து தயாரிப்பதில் மூனைந்தாள்.

அன்று மாலை ராமலிங்கம் வந்தபோது மூர்த்தி சிவவாக்கியர் பாடலில் ஆழ்ந்திருந்தான்.

"மூர்த்தி! என்ன அப்பா இது, ஒரேயடியாகப் படிப்பில் ஆழ்ந்து விட்டாயே!" என்று கேட்டுக் கொண்டே ராமலிங்கம் உள்ளே நுழைந்தான்.

மூர்த்திக்கு வியப்பினால் மூச்சே நின்றுவிடும் போல் இருந்தது. ராமலிங்கம் மாத்திரம் குரல் கொடுக்கவில்லை யென்றால் அவனைத் தெரிந்து கொண்டிருக்கவே மாட்டான். முன்பு பற்றற்ற நிலையில் பரம ஞானியாக விளங்கிய ராமலிங்கம் இப்பொழுது ஸில்க் ஷர்ட், தங்கக் கடிகாரம், சரிகை வேஷ்டி, சரிகை அங்கவஸ்திரம் முதலிய சர்வாலங்காரங்களுடன் விளங்கினான்.

"ராமலிங்கம்" என்று நாக்குழற அழைத்த மூர்த்தியின் கண்கள் அதிசயத்தில் மேலும் விரிந்தன. காரணம் அவனுக்குப் பின்னல் அவனுடைய நிழலைப்போல் தொடர்ந்து வந்த இளநங்கையைக் கண்டதுதான்.

ராமலிங்கத்தையும் அந்த அழகியையும் பார்த்துக்கொண்டே மூர்த்தி, "வாருங்கள், வாருங்கள்!" என்று மிகவும் பரிவோடு வரவேற்றான்.

"என்ன, மூர்த்தி! உனக்கு எல்லாம் ஒரே தடுமாற்றமா யிருக்கிறது, இல்லையா! நான் உன் பழைய நண்பன் ராமலிங்கம்தான். ஓகோ! மறந்தே போனேன். இப்பொழுதுதான் நினைவு வருகிறது. இதோ என்னுடன் வந்திருக்கிறாளே, இவள் பெயர் பானு. யாருமற்ற அநாதை. என்னுடைய ஆதரவில்தான் இப்பொழுது இருக்கிறாள்!" என்று அந்தப் பெண்மணியை அறிமுகப்படுத்தி விட்டு ஆசனத்தில் அமர்ந்தான்.

பிறகு அவன் மூர்த்தியைப் பார்த்து, "மூர்த்தி, என்னை மன்னித்து விடு. முதலில் உன் மனைவி சுசீலாவிடம் என்னை மன்னிக்கச் சொல்லு.

## பம்பாயில் ராமநவமி

பாரத மக்களுக்கு இலட்சிய புருஷனாக விளங்கும் ராமபிரானது புண்ணிய தினத்தைப் பம்பாய் ஆஸ்திக சமாஜ நிர்வாகிகள் மார்ச் 12-ந் தேதியிலிருந்து ஏப்ரல் 2-ந் தேதி வரை வெகு விமரிசையான ஏற்பாடுகளுடன் கொண்டாடுகிறார்கள். ப்ரவசன ரத்னாகர பிரம்ம ஸ்ரீ கே. ராஜகோபால சாஸ்திரிகள் அவர்களால் வால்மீகி ராமாயண உபன்னியாசமும் நடந்து வருகிறது. பம்பாய் மாதுங்காவிலுள்ள ஸ்ரீராம மந்திரத்தில் நடக்கும் ராமநவமி உற்சவத்துக்கு ஆஸ்திக அன்பர்கள் பலரும் திரளாக விஜயம் செய்து சிறப்பிப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

அவள் வாழ்வையும் உன் வாழ்வையும் என் வெறும் புத்தக அறிவினால் பாழாக்கி விட்டேன். மூர்த்தி, உனக்கு ஒன்றும் புரியவில்லை, இல்லையா! முதலில் பானு என்னிடம் வந்து சேர்ந்த வரலாற்றைச் சொன்னால்தான் உனக்கு விஷயம் விளங்கும்!" என்று சொல்லிவிட்டு ராமலிங்கம் அந்த வரலாற்றைச் சொல்லலானான்.

**ப**ற்றற்ற வாழ்வை மேற்கொண்டு புனித யாத்திரை செய்து கொண்டிருந்த ராமலிங்கத்துக்குப் பொருளாதார நெருக்கடி சரியாகப் பிடித்துக் கொண்டது. அவன் செல்வவந்தனாயிருந்தும், குடும்பத்தாருடன் சண்டையிட்டுக் கொண்டபடியால் ஊரிலிருந்து பணம் தருவிக்க இயலவில்லை. கையிலிருந்த தொகை கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து விட்டது. எப்படியோ அவன் சென்னைக்கு வந்து சேர்ந்தான். உயிர் வாழ்வதற்கு ஏதாவது வேலையைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான்.

ராமலிங்கம் பி. ஏ., பாஸ் செய்திருந்தும் வேலை சுலபமாகக் கிடைக்கவில்லை. அப்பொழுது சென்னையில் காங்கிரஸ் பொருட் காட்சி ஆரம்பமாகச் சில நாட்கள் இருந்தன. அங்கு ஒரு வேலை சேவா தளத்தில் கிடைத்தது, ராமலிங்கத்துக்கு. ஒலி பெருக்கியின் மூலம் மக்களுக்குச் சேவை செய்யும் அரிய வாய்ப்புக் கிடைத்தது.

அங்கே ராமலிங்கத்துக்கு நல்ல வேலை யிருந்தது. முதியவர்களும் குழந்தைகளும் ஊருக்குப் புதியவர்களுமாக யார் யாரோ வழி தவறி வந்து அவன் மூலம் உதவி பெற்றார்கள்.

அழகி பானுவும் பொருட்காட்சியைப் பார்க்க வந்தவர்களில் ஒருத்தி. சேவா தளத்தில் ராமலிங்கத்திடம் ஒப்புவிக்கப் பட்டாள். அச்சமும் நாணமும் கலந்த மான் போன்ற மருண்ட பார்வையுடன் பானு அவன் அறையில் நின்று கொண்டிருந்தாள். இயற்கை எழிலுடன் விளங்கிய பானு பற்றற்ற அவன் உள்ளத்தைப் பரவசப் படுத்தினான்.

"ஹலோ! ஹலோ! சேவா தளத்தில் ஒரு பெண்மணி. பெயர் பானு. வயது இருபது. ஊருக்குப் புதிது. பெற்றோர்கள் இங்கே வந்து அழைத்துப் போகலாம்!" என்று ராமலிங்கம் ஒலிபெருக்கியின் மூலம் சொன்னான். ஆனால் அன்று இரவு பொருட்காட்சி முடியும் நேரம் வரையில் யாரும் வரவில்லை. அந்தப் பெண்ணும் அவ்விடத்தை விட்டுப் போகவில்லை.

ராமலிங்கம் இரவு தான் தங்கியிருந்த அறைக்குப் புறப்பட்ட போது, அந்தப் பெண்ணும் அவனைப் பின் தொடர்ந்தாள். ராமலிங்கத்துக்கு ஒன்றும் புரிய வில்லை.

"நீ...எங்கே...என்னுடன்..." என்று உளறிக் கொட்டினான்.

பானு கலங்கமற்ற தெளிவான குரலில், "ஆமாம், நான் யாருமற்ற அநாதை. உங்களுடன் தான் வரவேண்டும். உங்களைப் போன்ற பரிசுத்த மனம் வாய்ந்த இளைஞர்கள்தான் தெய்வம் என்பது என் அபிப்பிராயம். நான் சேவா தளத்தில் இருந்த சில மணி நேரங்களில் உங்களைப் புரிந்து கொண்டு விட்டேன். இனி நீங்கள்தான் எனக்குக் கதி, ஆதரவு" என்று கூறிப் பொல பொலவென்று பவள மல்லிகை மலர்களைப் போல் கண்ணீர்த் துளிகளை உகுத்தாள்.

அவ்வளவுதான்; பானுவின் கண்ணீரைக் கண்ட ராமலிங்கத்தின் கண்களில் நீர் துளித்தது; அவ

னது உறுதி தளர்ந்து விலகிக் கொண்டது; உள்ளம் திருப்பத்தூர் பருப்பு மாதிரி குழைந்தது; அவனது நெகிழ்ந்த நெஞ்சில் பானு இடம்பெற்று விட்டாள்.

அன்று இரவு அவளுக்குத் தான் தங்கியிருந்த அறையில் இடம் அளித்து விட்டு, அவன் வெளியில் படுத்துக்கொண்டான். பானுவை அங்கேயே வைத்துக் கொண்டிருப்பது சாத்தியமல்ல; ஆகையினால் மறுநாளே அவளை மூர்த்தியின் வீட்டுக்கு அழைத்து வந்து விட்டான்.

ராமலிங்கம் பானுவைக் கல்யாணம் செய்து கொள்ள நிச்சயித்துப் பெற்றோர்களின் சம்மதத்தைப் பெற்று விட்டதாகக் கூறியதைக் கேட்டதும் மூர்த்திக்கு அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியாயிருந்தது. இந்த அதிர்ச்சி பற்றற்ற அவன் மனதில் சிறிது பாசத்தை உண்டாக்கியது; அந்தப் பாசத்திலிருந்து அவன் மனைவி சுசிலாவிடம் நேசம் பிறந்தது; நேசம், மறந்து போன அவனது கடமையை நினைவூட்டியது; கடமையில் தவறி விட்ட ஏக்கத்தோடு அவன் சுசிலாவைப் பார்த்தான்; அப்பொழுது காதல் பிறந்தது.

** ** **

“சுசிலா, வந்திருப்பவர்களைக் கூடக் கவனியாமல் என்ன அப்படி ஒரேயடியாகச் சிந்தனையில் ஆழ்ந்து விட்டாய்! நீ சினிமாவுக்கு வரவில்லையா!” என்ற பானுவின் இனிமையான குரலைக் கேட்டுச் சுசிலா தன் சுய நினைவைப் பெற்றாள். தனக்காக எல்லோரும் காத்துக் கொண்டிருப்பதைப் பார்க்கச் சுசிலாவுக்கு வெட்கமாய்ப் போய் விட்டது. எல்லோருக்கும் தட்டுகளை எடுத்து வைத்து டிபன் பரிமாறினாள். காப்பி சாப்பிட்டு முடிந்ததும், நாணத்தினால் முகம் சிவக்க அவளும் அவசரம் அவசரமாக உடைகளை 'அணிந்து கொண்டு அவர்களுடன் புறப்படத் தயாரானாள்.

# குப்பண்ணாவும் ஹெலென் கெல்லரும்

"மிளகு"

வழக்கம்போல் சில நாட்களாகக் காணாமல் போன குப்பண்ணா திடீரென்று பிரசன்னமானான்.

"நீ எங்கே மறுபடி கண்ணிலே படவில்லை கொஞ்ச நாளாக! ஆந்திராவுக்குத்தான் போய் விட்டாயோ என்று பார்த்தேன்!" என்றேன்.

"நீ எதிர்பார்த்ததில் ஒன்றும் தப்பில்லை. ஆந்திரா தேர்தலுக்குப் பிறகு மன சகோதருள லாரு எலாகா உன்னாருன்னு போய்ப் பார்க்கலாம் என்றுதான் விஜயவாடா வரைக்கும் போனேன்! அங்கே நாலா பக்கங்களிலே யிருந்தும் வந்து குவிந்து கொண்டிருந்த கதர் குல்லாய்களைப் பார்த்தேன். சரிதான், நம்ம குல்லாய்க்கு இங்கே இடமேது என்று தோன்றி விட்டது. போதாக் குறைக்குப் பம்பாயிலிருந்து வேறு ஒரு 'ஸ்பெஷல் பிளேன்' வந்ததா! அதில் வேறு படே படே ஆசாமிகள் வந்தார்களா! இங்கே இருந்தால் நமக்கு ஆபத்துத்தான் என்று நான் என் ஸ்பெஷல் மனோப்ளேனில் திரும்பி இங்கு வந்து குதித்து விட்டேன்" என்று குப்பண்ணா கூறினான்.

"அது வாஸ்தவம்! நீ அங்கு இருந்தால் உன் பாடு ஆபத்துத்தான். அங்கே குல்லாய் போட்டு மகுடாபிஷேகத்துக்குப் பெரிய தலைதேடிக் கொண்டிருக்கிறார்கள். உன் தலையில் வந்து அது எங்கேயாவது விழுந்து வைத்தால் அப்புறம் நம் தமிழ் நாட்டுக் கல்லவா நஷ்டம்! குப்பண்ணா குப்புடு காரு வாகி விட்டால்—அரே, தேவுடா!" என்று நினைக்கத் தகாத எண்ணத்தை வெளியிட்டேன்.

"ஆமாம் அப்பா! அதற்குத்தான் பயந்து வந்து விட்டேன். ஆந்திராவில் அடித்திருக்கும் காங்கிரஸ் வெற்றி பிரளயத்தில் திக்குமுக்காடிக்கொண்டிருக்கிறார்கள். அந்த பிரளயம் அரிவாள், செம்மட்டி, செங்கொடி எல்லாவற்றையும் ஓரேயடியாக அடித்துக் கொண்டு போய் இருக்கிற இடம் தெரியாமல் புதைத்து விட்டது!" என்றான் குப்பண்ணா.

"நம் ஆந்திர சகோதரர்களே மனசு வைத்தால் எல்லாவற்றையும் பிரளயமாக்கி விடுவார்கள்!" என்று ஒத்துப் பாடினேன்.

"இனி, பிரளயத்துக்குப் பின் குட்டை குழப்பாமல் இருக்க வேண்டுமே என்றுதான் கவலையாக இருக்கிறது. அவர்கள் தேர்தெடுக்கும் தலைவர் எல்லோருக்கும் சம்மதமான மனுஷனாக இருக்க வேண்டும்!"

"அதற்கு நீதான் சரியான ஆசாமி! ஆனால் அது எங்கே அவர்களுக்குத் தோன்றப் போகிறது! நீதான் அவர்கள் கண்ணில் கூடப் படாமல் தப்பி வந்து விட்டாயே!"

"கண் இருந்தும் சிலர் அதைச் சரியாக உபயோகிப்பதில்லை. ஆனால் கண் இல்லாமலே எல்லாவற்றையும் பார்க்கக் கூடிய சக்தி ஒருவருக்கு இருந்தால் அதை நீ என்ன சொல்லுவாய்!" என்று புது 'லயனி'ல் பாய்ந்தான் குப்பண்ணா.

"அமானுஷ்யமான சக்தி என்றுதான் சொல்வேன்" என்று பதிலளித்தேன்.

"அந்தமாதிரி ஒரு ஆத்மா நம் ஊருக்கு வந்திருந்தாரே, தெரியுமா!"

"ஓ! டாக்டர் ஹெலென் கெல்லரைச் சொல்கிறாயா!" என்று 'டக்'கென்று குப்பண்ணாவுக்குப் பதில் சொன்னேன்.

"தேவலையே! நீகூட உன் அமானுஷ்ய சக்தியை உபயோகப் படுத்தி விட்டாயே! இந்த கெல்லர் அம்மணி இருக்கிறார்களே! அவர்கள் வாழ்க்கை வரலாற்றைக் கேட்டுக் கேட்டு எனக்கு ஒரே அதிசயமும், ஆச்சரியமும், அந்த அம்மணியிடம் அபார மதிப்பும்தான் ஏற்பட்டு விட்டது. நேரில் நீ அந்த அம்மணியைப் பார்த்திருந்தால் நீயும் அப்படி அதிசயத்திலும் திகைப்பிலும் மூழ்கியிருப்பாய். ஒரு மனிதருக்குக் கண் மட்டும் குருடாக இருந்தால் காதால் கேட்டு, வாயால் பேசி ஒருவாறு சமாளிக்கலாம். காது மட்டும் கேட்காமல் இருந்தால் கண்ணால் பார்க்கலாம்; படிக்கலாம்; பேசலாம். விஷயங்களை எப்படியோ தெரிந்து கொண்டு விடலாம். வாய் மட்டும் ஊமையாக இருந்தால் கண், காது இரு அவயவங்களின் உதவியால் சமாளித்து விடலாம், எழுதலாம், படிக்கலாம். ஆனால் வாழ்க்கையில் மனிதருக்கு மிக அவசியமான இந்த மூன்று அவயவங்களும் ஊனமாக இருந்தால், அது ஒரு பேரிருளடைந்த உணர்ச்சியற்ற உயிரற்ற வாழ்க்கையாகத் தானே ஆகி விடும்! இந்த டாக்டர் கெல்லர் அம்மணி குழந்தைப் பருவத்திலேயே கண், காது இரண்டின் உபயோகத்தையும் இழந்து விட்டார். அதனால்தானோ என்னமோ வாயினாலும் பேச முடியாமல் இருந்தார். ஆனால் அவர் இப்போது அவரது எழுபத்தைந்தாவது வயதில் உலக மெல்லாம் சுற்றுகிறார். தன்னைப் போல் கண், காது, நா இவற்றை இழந்த அபாக்கியசாலிகளுக்காகப் பெரும் சேவை செய்து வருகிறார். பல புத்தகங்கள் வெளியிட்டிருக்கிறார். இன்னும் செயற்கரிய காரியங்களைச் சாதித்திருக்கிறார்! அதற்கு என்ன சொல்லுகிறாய்!"



டாக்டர் ஹெலென் கெல்லர் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களுக்கு பத்ம பூஷண பதக்கம் அளித்த சமயம் தமது அன்புப் பாராட்டைத் தெரிவித்துக் கொண்டார்.

"தெய்வப் பிறவி' என்றுதான் சொல்வேன்."

"இன்னும் கேளப்பா! இந்த அம்மாள் பிரசங்கங்கள் செய்கிறார். புஷ்பங்களைத் தொட்டமாத்திரத்தில் என்னென்ன புஷ்பங்கள் என்று அவரால் சொல்ல முடியும். அன்று கவர்னர் மாளிகையில் இன்னிசை கூட 'கேட்டு' ரஸித்தார்."

"இவ்வளவும், கண் காதுகளின் உதவி இல்லாமல் அவரால் எப்படி முடிகிறது!"

"மானிட வாழ்க்கைக்கு முக்கியமான அவயவங்களை இழந்த அவர் ஒரு அபாரமான, அமானுஷ்யமான வேறு தனி சக்தியைப் பெற்றிருக்கிறார், கை விரல்களினாலேயே பிறர் பேசும் வார்த்தைகளைத் தெரிந்து கொள்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளேன்!"

"அவரே ஒருவருடைய உதவியில்லாமலே இப்படிச் செய்கிறாரா!"

"இல்லை! அவருடன் இருக்கும் மிஸ் பாலி தாம்ஸன் என்னும் பெண்மணியின் உதவியால் பிறர் பேசுவதை அவர் தெரிந்து கொள்ள முடிகிறது-கை விரல் பாஷையினால். ஆனால் அவரே பேசுபவர் முகத்தில் தம் விரலால் தொட்டு, உதடு அசைவதிலிருந்து பேசுவதைத் தெரிந்து கொள்கிறார். பேச்சு முதலிய சப்தங்களால் உண்டாகும் அதிர்ச்சிகளாலும் இவற்றை உணர்கிறார்."

"அந்த அம்மாள் பிரசங்கம் செய்கிறார் என்றாயே! அதெப்படி முடிகிறது!" என்று கேட்டேன்.

"அவர் ஒரு மாதிரி பேசுகிறார். அது நமக்கு எளிதில் புரிகிறதில்லை. அவர் கூடவே பல வருஷங்கள் பழகி இருக்கும் பாலி தாம்ஸன் அம்மணி அவர் பேசுவதைத் தெளிவாகத் திருப்பிச் சொல்கிறார்!"

"இந்த அம்மாளும் பெரிய ஆசாமி போலிருக்கிறது. அவர் இல்லாமல் டாக்டர் கெல்லர் இவ்வளவு சாதிக்க முடியாது என்று சொல்! அந்த அம்மாள் இவர் பெண்ணா!"

"பாலி தாம்ஸன் டாக்டர் கெல்லருக்கு உறவுமில்லை, ஒன்றுமில்லை. இளம் வயதில்—முப்பது வருஷத்துக்கு முன் டாக்டர் கெல்லரிடம் சேவை புரியும் நோக்கத்துடன் வந்து சேர்ந்தாராம். அது முதல் அவர் வாழ்க்கையையே, டாக்டர் கெல்லருடன், அந்த சேவையில் ஈடுபடுத்தி விட்டார்!"

"நாம் பார்த்துக் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயம் இது! தியாகம் என்றால் இதுவல்லவா தியாகம்!" என்று நானும் மெச்சினேன்.

"ஆமாம்! டாக்டர் கெல்லரின் சேவை ஒரு வகையில் மிகப் பிரமாதமானது. தாமே விடா முயற்சியாலும் நம்பிக்கையாலும் பெற்றிருக்கும் ஒரு சக்தியைத் தம்மைப் போல் ஊனமடைந்தவர்களுக்காகப் பயன்படுத்தித் தம் வாழ்க்கையை அர்ப்பணித்திருக்கிறார். இந்தத் திருப்பணியில், அவருக்கு உதவியாக அவருடைய குரலாக பாலி தாம்ஸன் தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார். இவர்கள் உண்மையில் மகா தியாகிகள்—இலட்சிய மாதரசிகள்!"

"இப்படிப்பட்ட மகான்களை, அவர்கள் எந்த நாட்டவர்களாக இருந்தாலும், நாம் வணங்கிப் பாராட்ட வேண்டியது தான்" என்று மனப்பூர்வமாகச் சொன்னேன்.

"இவ்வளவாயிற்றே! அந்த கெல்லர் அம்மையார் நம் நாட்டைப் பற்றியும் நம் நாட்டின் தந்தையைப் பற்றியும், நமது தலைவர் ஜவாஹர்ஜியைப் பற்றியும் எப்படிப் பாராட்டுகிறார் தெரியுமா! அப்படியே பரவசப்படுகிறார். உலகத்தில் சமாதானமும் நல்வாழ்வும் நிலவ வேண்டும் என்று டாக்டர் கெல்லர் போகும் இடங்களில் எல்லாம் வற்புறுத்திச் சொல்லி வருகிறார்."

"உண்மையில் பெரியோர்கள் எல்லாம் அதைத் தானே விரும்புவார்கள்!...அடேடே! எங்கே திடுதிப்பென்று வழக்கம்போல் கிளம்பி விட்டாய்? விஜயவாடாவா! அங்கு போய் அனாவசியமாக மாட்டிக் கொள்ளாதே..." என்று சொல்லி முடிப்பதற்குள் குப்பண்ணாவைக் காணோம்.

# பனித்துளி

"சென்னை மெரீனா கடற்கரையில் மரங்களுக்கு இடையே செல்லும் அழகான பாதையை ஏன் "காதலர் பாதை" என்று அழைக்க வேண்டும் என ஒரு அங்கத்தினர் ஒரு மந்திரியைக் கேள்வி கேட்டார். 'இது தர்ம சங்கடமானது' என்று கூறி மந்திரி மலைத்துப் போனார்." —செய்தி

காதலர் பாதை எப்போதும் அப்படித்தான். அதில் மந்திரி மலைத்துப் போனதில் அதிசயம் இல்லை!

●

"காப்பி சாப்பிடுவதை விட்டு விடப் போகிறேன்!" —தீவிரவாதி

"வயிற்றுக்குள்தானே!" என்கிறார் சந்தேகப் பேர்வழி ஒருவர்.

●

"அமைதியாக இணைந்து வாழா விட்டால், சேர்ந்து அழிவதொன்றே உலகத்தின் முன்னுள்ள இன்றையப் பிரச்னை." —அரசியல்வாதி

வாழ்வதற்குச் சேராதவர்கள் அழிவதற்கு மட்டும் எப்படிச் சேருவார்கள் என்பதுதான் தீராத பிரச்னை என்கிறார் ஒரு தர்க்கவாதி.

"சம்பந்திகளுடைய கல்யாணப் பேச்சு வார்த்தைகளில் ஏற்படும் அநாவசியமான கால தாமதத்தைப் போக்க வயது வந்த ஆண், பெண் ஆகியோரின் 'கார்டியன்'கள் கூட்டத்தில், ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது."

—நாகபுரிச் செய்தி

சம்பந்திகளுக்குப் பதிலாக இனி, கமிட்டி கால தாமதம் செய்யட்டுமே என்பது அவர்கள் கருத்தாயிருக்கலாம்.

●

"அசெம்பிளியில் மொழிப் பிரச்னை!"

—பத்திரிகைத் தலைப்பு

"தலைப்பிலேயே அந்தப் பிரச்னை தெரிகிறதே!" என்கிறார் மொழி ஆராய்ச்சியாளர் ஒருவர்.

●

"சீர்குலைந்து கிடக்கும் நாட்டின் பொருளாதாரத்தை மேன்மையுறச் செய்வதற்கு ஏராளமாகவுள்ள மனித சக்தியைப் பயன்படுத்த வேண்டும்." —காங்கிரஸ் தலைவர்

பொருளாதாரம் சீர்குலைந்து விட்டால் அப்புறம் மனிதனுக்குச் சக்தி எங்கிருந்து வரும் என்று சந்தேகிக்கிறார் ஒரு மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவர்.

# வீணாக்க வேண்டாம்!

## உங்கள் நேரத்தை, உங்கள் உழைப்பை அடுப்பு எரிக்கும் பண்டத்தை



ப்ரஸ்டீஜ் ப்ரஷர் குக்கர் நீராவியைக் கொண்டு அதிகமான உஷ்ணத்தை உண்டாக்குவதால் ஒரு சில நிமிஷங்களிலேயே உணவு பக்குவமாகிறது. அரிசி, பருப்பு, மற்ற தானியங்கள் 5 முதல் 12 நிமிஷங்களிலும், காய்கறி பதார்த்தங்கள் 3 முதல் 8 நிமிஷங்களிலும் பக்குவமாகிறது.

**ப்ரஸ்டீஜ் ப்ரஷர் குக்கர்** சமையல் செய்வதில் ஏற்படும் சிரமங்களை வெகுவாகத் தவிர்க்கிறது. ஏனெனில் அது எல்லா உணவு பதார்த்தங்களையும் குறுகிய கால அளவிலேயே பக்குவப்படுத்துகிறது.



ப்ரஸ்டீஜ் குக்கர் உபயோகிப்பதால் எரி பொருள் செலவில் மிகச் சிக்கனம் உண்டாகிறது. அறுசுவை உணவை அரை மணி நேரத்திலே தயார் செய்து விடலாம்.

***மின்சாரம், காஸ் அல்லது கரி இவைகளில் உபயோகிக்கலாம்***

**Prestige** PRESSURE COOKER

## ப்ரஸ்டீஜ் ப்ரஷர் குக்கர்

**சில நிமிஷங்களிலேயே ருசி மிகுந்த உணவைத் தயார் செய்கிறது**

★

*சோல் ஏஜண்டுகள்:*

## டி. டி. கிருஷ்ணமாச்சாரி அண்டு கோ.

மதராஸ் ★ பம்பாய் ★ கல்கத்தா ★ புதுடில்லி

*த.பெ.200 த.பெ.1008 த.பெ.884 த. பெ. 162*



EVEREST T.T.K. 54. 3




**யா**னை தேய்ந்து பூனை ஆயிற்று! ஒரு காலத்தில் உலகப் பிரசித்தி பெற்று விளங்கிய இந்தியக் கைத்தொழில் நிபுணர்கள் கஞ்சிக்கும் வழியின்றிக் கண்ணீர்விட நேர்ந்தது. சித்திர விசித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய பீதாம்பரங்கள் செய்வதில் உலகிலேயே இணையற்ற தேர்ச்சி பெற்ற நம் நாட்டுக் கைத்தறி நெசவாளர்கள் தெருக்களில் பிச்சை எடுக்கும்படி நேர்ந்த பரிதாபக் காட்சியைக் கண்டோம். ஆசியா நாடுகளும் ஐரோப்பிய நாடுகளும் போட்டி போட்டுக் கொண்டு வாங்கிய இந்தியக் கைத்தறி ஜவுளிகள் கேட்பாரற்றுக் கிடந்த அலங்கோலத்தை யாரும் மறக்க முடியாது.

எகிப்தில் நாலாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகப் பாதுகாக்கப்பட்டு வரும் மன்னர்களின் உடல்கள், அக்காலத்திய இந்திய மஸ்லின் துணிகளால் மூடப்பட்டிருக்கின்றன. பதினெட்டாவது நூற்றாண்டில் இந்தியக் கைத்தறி ஜவுளிகள் இங்கிலாந்து உள்பட ஐரோப்பிய நாடுகளுக்கும், ஆப்பிரிக்கா, சீனா, ஜப்பான், பர்மா, அரேபியா, பாரசீகம் முதலிய நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டதாகச் சரித்திரங்கள் கூறுகின்றன. ஏன், பருத்தி ஜவுளிகள் பிறந்த இடமே பாரத நாடுதான் என்பதை ஒப்புக்கொள்ளாதவர்கள் இல்லை. நெசவு யந்திரங்களே இல்லாத காலத்தில் இந்தியக் கைத்தறி நெசவாளர்கள் உலகில் உள்ள பல நாடுகளுக்கும் தாங்கள் உற்பத்தி செய்த ஜவுளிகளை அனுப்பி வந்தது பாரத மக்கள் பெருமிதம் அடைய வேண்டிய விஷயம் அல்லவா?

உலக மக்களின் வியப்புக்குக் காரணமான டாக்கா மஸ்லின் துணிகளைப் பற்றிய கதைகளைப் பலரும் அறிவர். வான வில் போன்ற வர்ணங்களுடனும் சித்திர வேலைப்பாடுகளுடனும் இந்தியக் கைத்தறி நெசவாளர்கள் உற்பத்தி செய்த துணிகள் உலக மக்களையே பிரமிக்க வைத்தன. எனவே, உலக மக்களாலும் இந்தியாவில் ஆட்சி புரிந்த மகா ராஜாக்களாலும் ஆதரிக்கப்பட்டும் போற்றப்பட்டும் வந்த நமது கைத்தறி நெசவாளர்கள் பரம்பரையாகத் தொழில் நிபுணர்களாக இருந்ததைக் குறித்து, ஆச்சரியப்படுவதற்கில்லை.

அவ்விதம் அற்புதமான துணிகள் உற்பத்தியில் தனிச் சிறப்பு வாய்ந்த இந்தியக் கைத்தறி நெசவாளர்களின் வாழ்வில் மண்ணைப் போட இரண்டு பெரும் சக்திகள் வந்து சேர்ந்தன. அவற்றில் ஒன்று அன்னிய ஆட்சி; மற்றொன்று அன்னிய நாடுகளிலிருந்து வந்த நெசவாலைகள்.

பாரத நாட்டில் அன்னிய ஆட்சியும் அதைத் தொடர்ந்து நெசவு யந்திரங்களும் வந்த பின்தான், கைத்தறி நெசவுத் தொழில் நாளுக்கு நாள் தேய்ந்து மறையத் தொடங்கியது. அதன் விளைவாக, இந்தியக் கைத்தறி நெசவாளர்களின் குடும்பங்கள் வறுமை, பட்டினி, பிணி முதலிய சகிக்க முடியாத கொடுமைகளுக்கு இலக்காயின.

குறிப்பாக, இரண்டாவது மகா யுத்தத்துக்குப் பின் அவர்களுடைய நிலைமை படுமோசமாகியது. சுதந்திர இந்தியா சமாளிக்க வேண்டிய பெரிய பிரச்னைகளில் கைத்தறி நெசவாளர் விஷயமும் ஒன்றாகியது.

* * *

**தொ**ழில் துறைகள் யாவும் யந்திர மயமாகியுள்ள இக்காலத்தில்கூட இந்தியாவில் கைத்தறி நெசவு விவசாயத்துக்கு அடுத்தபடியாக இரண்டாவது ஸ்தானத்தை வகிக்கிறது. ராக்ஷச யந்திரங்களால்கூட கைத்தறி நெசவாளர்களின் சக்தியையும் திறமையையும் நசுக்க முடியவில்லை!

நம் நாட்டில் ஒன்றரைக் கோடி மக்கள் கைத்தறி நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். எனவே, அவர்களுடைய ஜீவனமும் நல் வாழ்வும் மேற்படி தொழிலின் சுபிட்சத்தையே பொறுத்திருக்கின்றன.

இந்த உண்மையை இந்திய சர்க்காரும் ராஜ்ய சர்க்கார்களும் உணர்ந்து கைத்தறி நெசவாளர்களுக்கு உதவியாகப் பலமுறைகளைக் கைக்கொண்டு வருகிறார்கள்.

இந்தியாவில் ஆட்சி புரிந்த அன்னிய சர்க்கார் கைத்தறி நெசவாளர்கள் விஷயத்தில் சிறிது அக்கறை காட்டியிருந்தாலும், அவர்களும் அவர்களுடைய குடும்பத்தினரும் சொல்லொணாக் கஷ்ட நஷ்டங்களுக்கு உட்படும்படி நேர்ந்திராது.

1928-ம் ஆண்டில் நியமிக்கப்பட்ட விவசாயக் கமிஷன், கூட்டுறவு முறையை அடிப்படையாகக் கொண்டு கிராமக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்று வற்புறுத்தியது. அப்படியிருந்தும் மிகவும் இன்றியமையாத கிராமக் கைத்தொழிலான கைத்தறி நெசவுத் தொழில் சம்பந்தமாக இந்திய சர்க்கார் யாதொரு முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை.

ஆறு ஆண்டுகளுக்குப் பின், 1934-ல் தான் இந்திய சர்க்கார் விழித்துக் கொண்டனர். அவர்களாக விழித்துக் கொள்ளவில்லை. முதலாவது மகா யுத்தத்துக்குப் பின் ஏற்

பட்ட நெசவுத் தொழில் நெருக்கடி, இந்திய சர்க்காரின் கண்களைத் திறந்தது.

அந்த யுத்தத்துக்குப் பின் இந்தியாவில் நெசவாலைகள் அதிகமாயின. வெகு காலமாகக் கைத்தறி நெசவாளர்கள் உற்பத்தி செய்து வந்த வர்ணப் புடவைகள் போன்ற துணிகளைக்கூட ராக்ஷச யந்திரங்கள் உற்பத்தி செய்யத் தொடங்கின. யந்திரங்களுக்குச் சலுகைகள் அதிகமாகவே, அவைகளுடன் போட்டி போட முடியாமல் கைத்தறி நெசவுத் தொழில் க்ஷீணிக்கலாயிற்று. போதாக்குறைக்கு 1929-30ல் ஏற்பட்ட உலகப் பொருளாதார மந்தம் கைத்தறித் தொழிலை இருந்த இடம் தெரியாமல் மறைத்து விட்டது.

எனவே, இந்திய சர்க்கார் கைத்தறி நெசவுத் தொழிலின் அபிவிருத்திக்கான முறைகளைக் கைக்கொள்ள முன் வந்தனர். அதற்காக, மாகாண சர்க்கார்களுக்கு வருஷத்துக்கு ஐந்து லட்சம் ரூபாய் வீதம் ஐந்து வருஷத்துக்கு உதவித் தொகை கொடுப்பதென்றும் தீர்மானித்தனர். அதேசமயம் மாகாண சர்க்கார்களும் மேற்படித் தொழிலை உத்தாரணம் செய்வதற்காக உதவித் தொகைகள் ஒதுக்கி வைக்க முன் வந்தனர்.



ஏரியில் பெருங்காயம் கரைத்தது போல், கைத்தறி நெசவாளர்கள் வாழ்வதா, வீழ்வதா என்ற மகத்தான பிரச்னையைத் தீர்க்கும் விஷயத்தில் சர்க்கார் அளிக்க முன் வந்த உதவித் தொகைகள் மிகவும் சொற்பமாகும். எனினும், சர்க்கார் அவ் விஷயத்தில் காட்டிய அக்கறை கைத்தறி நெசவாளர்களுக்கும் ஓரளவு நம்பிக்கையை உண்டு பண்ணியது. அதன் பலனாக, சென்னையில் கைத்தறி நெசவாளர் மாகாணக் கூட்டுறவு சங்கம் என்ற ஸ்தாபனம் ஏற்பட்டது.

1934-லிருந்து 1941-ம் வருஷம் முடிய இந்திய சர்க்கார் கைத்தறி நெசவுத் தொழிலின் உத்தாரணத்துக்காக ரூ. 30,48,700 உதவியளித்தனர். அதன் பலனாக, 1926-ல் சுமார் 95 கோடி கெஜமாக இருந்த கைத்தறி ஜவுளி உற்பத்தி 1939-ல் 194 கோடி கெஜமாக, அதாவது இரண்டு மடங்கு அதிகமாயிற்று. எனினும் அதனால் கைத்தறி நெசவுத் தொழிலாளர்களுக்கு அதிக லாபம் எதுவும் கிடைக்கவில்லை. 1939-ல் துணிகளின் விலை மிகவும் குறைந்து விட்டதே அந்நிலைமைக்குக் காரணம்.

கைத்தறி நெசவாளர்களின் கஷ்ட நஷ்டங்களைப் பரிசீலனை செய்து, தகுந்த பரிகார முறைகளைக் கைக்கொள்வதற்காக 1945-ல் இந்திய சர்க்கார் அகில இந்தியா கைத்தறி சபை (All India Handloom Board) ஒன்றை அமைத்தார்கள். கைத்தறி நெசவாளர்களுக்கு மூலப் பொருள் விநியோகிப்பது, கைத்தறி ஜவுளிகளின் விற்பனைக்கு வழிவகைகளைச் செய்வது, சர்க்கார் அளிக்கும் உதவித் தொகைகளை நிர்வகிப்பது,—இவை தான் அந்தச் சபையின் அலுவல்களாகும். அதன் பலனாகக் கைத்தறி நெசவாளர்களுக்குச் சிற்சில வசதிகள் கிடைத்தனவாயினும், அவர்களுடைய பிரச்னை கணிசமான அளவு திருவதற்கு வழி பிறக்கவில்லை.

இரண்டு வருஷங்களுக்குப் பிறகு மேற்படி கைத்தறி சபை கலைந்து விட்டது. இரண்டாவது மகாயுத்தத்துக்குப் பிறகு கைத்தறி நெசவாளர்களின் நிலைமை மறுபடியும் மோசமான கட்டத்தை அடைந்தது.

ஒரு புறம் கைத்தறி ஜவுளிகள் குவிந்தன. மற்றொரு புறம் அந்த ஜவுளிகளைக் கேட்பார் யாருமில்லை. அதனால் கைத்தறி நெசவாளர்களின் நிலைமை பரிதாபமாகியது.

எனவே, 1952ல் இந்திய சர்க்கார் ஸ்ரீ டி. சுவாமிநாதன் ஐ. ஸி. எஸ்., அவர்களின் தலைமையில் மீண்டும் அகில இந்தியா கைத்தறிசபையை அமைத்தார்கள். மிகவும் தீவிரமான முறைகளைக் கைக்கொண்டாலன்றி, கைத்தறி நெசவாளர்களின் பொருளாதார நிலைமை சீர்பட முடியாது என்பதை அச் சபையினர் உணர்ந்தனர். அதன் பலனாகவே கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கங்கள் உருவாயின. அந்தச் சங்கங்களின் மூலம் கைத்தறி நெசவாளர்களுக்குப் பல்வேறு வசதிகள் கிடைத்தன.

கைத்தறி ஜவுளிகளின் விற்பனையை அதிகப் படுத்துவதற்காக கொழும்பு, ஏடன், சிங்கப்பூர் முதலிய நகரங்களில் பண்டக சாலைகள் ஆரம்பிக்கப் பட்டுள்ளன. வெளி நாடுகளில் உள்ள மற்றும் பல இடங்களிலும் கைத்தறி ஜவுளி பண்டகசாலைகளை ஆரம்பிக்கத் தீர்மானித்திருக்கிறார்கள்.

பாரத மக்களின் சுபிட்ச வாழ்வாகிற ரதத்தின் சக்கரங்களில் கைத்தறித் தொழிலும் ஒன்று. மற்ற சக்கரங்களைப் போல் இந்தச் சக்கரமும் சுழன்றால்தான், இந்திய மக்களின் சுபிட்ச இலட்சியம் நிறைவேறும்.

**இமையை நூற்றுநல் லாடைசெய் வீரே...**
**மேவிப் பார்மிசைக் காப்பவர் நீரே**

என்று கவிச் சக்கரவர்த்தி பாரதியாரால் போற்றப்பட்ட கைத்தறி நெசவாளர்களுக்குப் பாரத மக்களின் ஏகோபித்த ஆதரவு கிடைக்கும் என்பது நிச்சயம்.

# இந்தியத் தயாரிப்பு
# இந்தியாவிலேயே தலைசிறந்தது

NATIONAL INSULATED CABLE CO. OF INDIA LTD.

**நிக்கோவின் தயாரிப்புகள்**

காப்பர் கண்டக்டர்கள் சாலிட், ஸ்ட்ராண்டட், அலுமினியம் கண்டக்டர்கள், ரப்பர் இன்ஸுலேட்டட் கேபிள்கள், ப்ளெக்ஸிபிள்ஸ், நூல் சுற்றப்பட்ட ஒயர்கள், எனுமல்டு ஒயர்கள் முதலியன.

*யாவும் திட்டப்படி சரியான முறையில் தயாரானவை!*



**NICCO**

**CABLES & WIRES**

LIFE LINES OF THE NATION

*இந்திய அரசாங்கம் மற்றும் அத்துடன் இணைக்கப்பட்டுள்ள ஸ்தாபனங்களுக்கும் அங்கீகரிக்கப்பட்ட ஜாபிதாவில் சேர்க்கப்பட்டு "நிக்கோ" தேவைகளுக்கு சப்ளை செய்து வருகிறது.*




## நேஷனல் இன்ஸுலேடட் கேபிள் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்

ஸ்டீபன் ஹவுஸ், 4, டல்ஹவுஸி ஸ்கொயர், கல்கத்தா

இந்தியாவெங்கும் ஏஜண்டுகளும் கிளை ஆபீஸ்களும் உள்ளன

# ரோஜா முள்

ரஸவாதி

அவன் தான்!

யாரைப் பற்றிய நினைவை என் உள்ளத்திலிருந்து அகற்றவும், எந்த முகத்தை மறந்து விடவும் இந்த நான்கு வருஷங்களாக மிகவும் சிரமத்துடன் முயன்று வருகிறேனோ அவனே தான்!

பம்பாயிலிருந்து ஒரு மாத லீவில் சொந்த ஊராகிய தென்காசிக்குப் போய்க் கொண்டிருப்பவன் நான். திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் சாதாரணமாக இருபது நிமிஷங்கள் விருதுநகர் ஜங்ஷனில் நிற்கும் என்பது என் ஞாபகம். ஒரு கப் காப்பியை உள்ளே தள்ளி விட்டு வரலாம் என்கிற உத்தேசத்துடன் வண்டியிலிருந்து இறங்கி 'ஸ்டால்' பக்கமாக நடந்தேன். காசைத் தந்து விட்டுத் திரும்பும்போது தான் எதிர்ப் பக்கம் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த திருநெல்வேலி வண்டியின் பக்கம் அகஸ்மாத்தாக என் பார்வை சென்றது. திடுக்கிட்டுப் போனேன், அதில் அமர்ந்திருந்த அவளைப் பார்த்து. என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை!

நல்ல வேளை! என்னை அவள் கவனிக்கவில்லை. கையிலிருந்த பத்திரிகையில் முகத்தைப் புதைத்துக் கொண்டேன், நெருப்புக்கோழி போல. அந்த இடத்தை விட்டு உடனே அகன்றுவிட வேண்டும் என்கிற உணர்வு என்னை ஆட்கொண்டது. நெஞ்சும் கால்களும் நடுங்கின. அந்த நிலையில் எப்படி என் இடத்துக்கு வந்து சேர்ந்தேன் என்பது ஆச்சரியப்பட வேண்டிய விஷயம்தான்.

அவள் எப்படி, ஏன் இங்கு வந்தாள்! எதிர்பாராதவிதமாக அவளை இங்கு சந்திக்க நேரும் என்று நான் நினைக்கவே யில்லை!

அவள்—நான்கு வருஷங்களுக்கு முன்பு அன்று பார்த்தது போலவேதான் இன்றும் இருக்கிறாள். இன்னும் கூடக் கொஞ்சம் அழகாக, கவர்ச்சிகரமாக இருக்கிறாள் என்றுதான் சொல்ல வேண்டும்!

ஒரு காலத்தில் அவளை மணம் செய்து கொள்ள இருந்தவன் நான். என் மனத்தில் எத்தனை இன்ப நினைவுகளை அவள் எழுப்பி யிருந்தாள் தெரியுமா! ஆனால்—இப்போது எட்டாத பழமாகிவிட்டாள்.

எப்படியோ—என்னிடமிருந்து அவள் பல காதங்கள் தள்ளிப் போய் விட்டதாக ஒரு உணர்ச்சி என் உள்ளத்தில் உறைத்தது.

ஆவலைக் கட்டுப்படுத்த முடியாதவனாக எதிரிலிருக்கும் வண்டியின் பக்கம் பார்வையை ஓட்டினேன். அவளுடைய முதுகுப் புறத்தில்தான் போய் நிலைத்தது அது. எங்கோ என் மன ஆழத்தில் புதைந்துகிடந்த நினைவுகளை அலைத்து என்னைக் குழப்பிவிட்டு நிம்மதியாக அந்த வண்டியில் அவள் அமர்ந்திருக்கிறாளே என்கிற தாபம் என் இதயத்தை அரிக்க ஆரம்பித்தது.

அன்று அவளை—சகுந்தலாதான் அவள் பெயர்—என் சகோதரியுடன்—'பெண்பார்க்க' என்று போன் மாலைக்குப் போய் விட்டு வந்து ஒரு வாரம் ஆகியிருந்தது. அவள் அழகும் இனிமையான குரலும் காந்தமாக என்னை ஆகர்ஷித்து விட்டிருந்தன. சம்மதத்தைக் கூட ஜாடையாக அப்போதே தெரிவித்து விட்டேன் நான்! கல்யாணத்துக்கு நாள் முதற் கொண்டு நிச்சயமாகி விட்டதாக அத்திம்பேர் மூதல் நான் எழுதியிருந்த கடிதத்திலிருந்து தெரியவந்தது. என் மனம் அதைப் படித்ததும் சந்தோஷத்தால் துடித்த துடிப்பு என்னென்பேன்!

அன்று மாலை வெளியே கிளம்பலாம் என்று எண்ணி என் அறையைப் பூட்டிக் கொண்டு படி இறங்கிய போதுதான் எதிர்பாராத விதமாக, முன்பின் நான் பார்த்திராத அந்த வாலிபன் என்முன் வந்து நின்றான்.

"ஸார்! மூர்த்தி என்பது......"

"நான்தான்! நீங்கள் யார்! என்ன வேண்டும்!" என்று கேட்டேன்.

சிறிது நேரம் அவன் தயங்கினான். பிறகு சுற்று முற்றும் பார்த்தபடி, "சற்று உங்கள் அறைக்கு வருகிறீர்களா! ரகசியமான விஷயம் ஒன்று உங்களிடம் பேச வேண்டும்!" என்றான்.

எனக்கு யோசனையாகப் போய் விட்டது. எவனோ அறிமுகமே இல்லாத ஆசாமி ஒருவன் எதிரே வந்து நின்று கொண்டு 'உன்னுடன் ரகசியம் பேச வேண்டும். கதவைத் திற' என்று சொல்கிறதானால் எப்படி இருந்திருக்கும்!

ஆனால் என்னை ஏதோ ஒரு சக்தி பணிய வைத்துப் பூட்டின அறையைத் திறந்து அவனை உள்ளே அழைத்துப் போகும்படி செய்தது. சுவாதீனமாகத் தானே ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அவன் பேச ஆரம்பித்தான்.

"சகுந்தலாவை நீங்கள் கல்யாணம் செய்து கொள்வதாக நிச்சயமாகி ஏற்பாடுகள் எல்லாம் நடந்து வருவதாகக் கேள்விப்பட்டேன்."

எனக்கு இது இரண்டாவது அதிர்ச்சி! எதிர்பாராமல் நுழைந்த அந்த வாலிபன் இப்படிச் சொன்னது என்னை வியப்பினால் திக்குமுக்காடச் செய்து விட்டது.

"நீங்கள் யார்! எங்கிருந்து வருகிறீர்கள்! எதற்காக இதெல்லாம் என்னைக் கேட்கிறீர்கள்! ஏதோ ரகசியம் என்றீர்களே அது என்ன!" கேள்விகள் மடமடவென்று கண்டிப்பான தொனியில் என்னிடமிருந்து கிளம்பின.

"தயவு செய்து அவசரப்பட்டு அனாவசியமான சந்தேகங்களுக்கு இடம் கொடுக்காதீர்கள்! விஷயத்தைச் சொல்லத்தானே உங்களைத் தேடி வந்திருக்கிறேன், நண்பன் என்கிற முறையில்!"

கனிவுடன் கலந்திருந்த இந்த வார்த்தைகள் என்னைச் சமாதானப்படுத்தி விட்டன ஓரளவுக்கு. வாலிபன் மேலே பேசினான்.

"இந்த சகுந்தலாவுக்கு—ரமணி என்னும் என் நண்பனிடம்—அவனுக்கும் உறவுதான் ஒரு வழியில்—ஈடுபாடு உண்டு. காதல் என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்களேன்! அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் மணப்பதாகத் தீர்மானம் செய்து கொண்டிருக்கிறார்கள்!"

மூன்றாவது தடவையாக நான் அதிர்ச்சியுற்றேன். பேச்சா அது! ஒவ்வொரு வார்த்தையும் ஒரு நெருப்புப் பந்தம் போலல்லவா கிளம்பி வந்தது! நெருப்பின் தகிப்பை என் உடல் அணு அணுவாக உணர்ந்தது.

"இந்தக் கட்டத்தில் நான் சகுந்தலாவின் நெருங்கிய உறவினன் என்பதைச் சொல்லிவிட வேண்டும். இல்லாவிட்டால் உங்கள் சந்தேகம் அதிகமாகும்" என்றான் அந்த வாலிபன்.

என் மனக் குழப்பத்தை என்னுடைய அசாதாரண மௌனத்தின் மூலம் தெரிந்து கொண்டு அவன் மேலே தொடர்ந்தான்.

"ஆனால் அவளுடைய பெற்றோர்களுக்கு இதில் சம்மதமில்லை. காரணம் அந்த இரண்டு குடும்பத்துக்கும் சிறிய தகராறு ஒன்று பெரியதாக முற்றிப் போய் விட்டதுதான். அந்த ரமணி ஏதாவது கலாட்டா செய்து விடுவானோ என்கிற சம்சயத்தின் பேரில் வியவகாரத்தைச் சட்டுப் புட்டென்று முடித்துவிடப் பறக்கிறார்கள் அவர்கள்."

என் மௌனம் கலைந்தது. அவன் சொன்னது உண்மையா இல்லையா என்று தெரியாத நிலையில் என் மனம் தத்தளித்துக் கொண்டிருந்தது.

"அப்படியா! அப்போது துளிக்கூட இஷ்டமில்லாமலா தன்னை வந்து 'பெண் பார்க்க' என்னை அவள் அனுமதித்தது! கல்யாணத்துக்குச் சம்மதம் என்று சொன்னாள் என்பதாகக் கூடக் கேள்விப் பட்டேனே!"

அந்த வாலிபன் ஒரு புன்னகை புரிந்தான்.

"அதில் தான் அவள் சாமர்த்தியம் முழுவதும் இருக்கிறது. வெறும் நடிப்பு அதெல்லாம்! பெற்றவர்கள் மனம் கோணாம லிருப்பதற்காக, அவர்கள் கட்டாயத்தின் பேரில்தான் அன்று அவள் உங்கள் எதிரே பாடியது, நடந்துகொண்டது இவை யெல்லாம்! அந்தப் பெண் எப்படியாவது பெண் பார்க்கும் கட்டத்துக்கு ஒப்புக்கொள்வது போல ஆட்டம் காட்டிவிட்டுப் பிறகு சமாளித்து விடலாம் என்று நினைத்திருந்தாள்."

"விளையாட்டாக இருக்கிறதே இது!" என் பேச்சிலிருந்த உஷ்ணம் அவனைப் பலமாகத் தாக்கியிருக்க வேண்டும்.

"அப்படி யெல்லாம் சொல்லி விடாதீர்கள், ஸார்! அநாவசியமாக இதனால் தன் குடும்பத்துக்குக் கெட்ட பெயர் வருவதை அவள் விரும்பவில்லை. கூடியசீக்கிரத்தில் பெற்றோர்கள் மனத்தை எப்படியாவது மாற்றி, தான் ரமணியை அடைந்து விடலாம் என்கிற நம்பிக்கை அவளுக்குத் திடமாக இருந்தது. ஆனால் அவர்கள் பிடிவாதமாக மேற்கொண்டு கல்யாண ஏற்பாடுகளில் இறங்கவே பயந்து போய் விட்டாள். பெண் தானே! எல்லா விவரமும் அறிந்திருக்கும் உறவினனை என்னிடம் சொல்லிக் கண்ணீர் வடித்தாள். துரதிர்ஷ்டவசமாக ரமணியும் ஏதோ அவசர வேலையாகக் கல்கத்தா போய் விட்டான். சமாசாரம் தெரிந்து நேற்றுதான் அவன் ஒரு தந்தி கொடுத்திருக்கிறான் எனக்கு, எப்படியாவது நல்லதனமாக உங்களிடம் சொல்லி இந்தச் சம்பந்தத்தை நிறுத்தும்படி. அதனால்தான் உங்களைத் தேடிக்கொண்டு சென்னைக்கு ஓடோடியும் வந்திருக்கிறேன்!" அந்த வாலிபன் தன் பையிலிருந்த அந்தத் தந்தியை எடுத்து நீட்டினான்.

வியப்பு, ஆத்திரம், ஏமாற்றம் முதலிய உணர்ச்சிகள் என் உள்ளத்தில் நிரம்பி வழிந்தன.

"இதை நிரூபிக்க முடியுமா உங்களால்!"

"ஓ, பேஷாக! சகுந்தலாவை விட்டே சொல்லச் செய்கிறேன், போதுமா!"

மீண்டுமொரு அதிர்ச்சி எனக்கு! என் கேள்வியில் அந்த வாலிபன் மடங்கி விடுவான் என்று நான் நினைத்ததற்கு மாறாகக் கடைசி அடியாக என்மீது அடித்தான் அந்த வாலிபன்!

"திருச்சிக்கு ஒரு நடை வாருங்கள்! எப்பாடுபட்டாவது அவளை உங்களுடன் தனியாக ஒரு இரண்டு நிமிஷம் சந்தித்துப் பேசச் செய்கிறேன். ருக அப்போதுதான் புலனாகும்!" உள்ளங்கையால் மேஜை மீது அறைந்து பேசினான் அவன்.

எனக்கு அது விபரீதமாக, செய்யத் தகாத காரியமாகத் தோன்றியது.

"ஏன்! அவளுடைய பெற்றோர்கள் எதிரில் கேட்டால் என்ன!"

"ஸார்! அப்படி ஏதாவது செய்து காரியத்தைக் கெடுத்து விடாதீர்கள்! அதனால் ஒரு பயனும் இராது. குணத்தில் கவரி மான் ஸார், அவள்! பெற்றோர்கள் எதிரில் கௌரவக் குறைவாகப் பேசவே மாட்டாள்!"

மன உளைச்சல் தாங்காமல் கூண்டுப் புலிபோல அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலவினேன்.

"ஒன்று மறியாத நீங்கள் அனாவசியமாக ஒரு பெண்ணின் பாவத்தைக் கட்டிக் கொள்வதிலிருந்து உங்களைத் தப்புவிக்கத்தான் வந்தேன்!"

எந்த நிமிஷத்தில் மயங்கிக் கீழே விழுந்து விடுவேனோ என்கிற நிலை எனக்கு ஏற்பட்டது.

"வருகிறேன் ஸார்! நான் சொன்னது ஞாபகத்தில் இருக்கட்டும்!"



அந்த வாலிபன் போய் விட்டான். அவனை நிறுத்தி வைத்து இன்னும் ஏதேதோ கேட்கவேண்டும் என்று நான் துடித்தேன். ஆனால் ஏனோ தொண்டையிலிருந்து சப்தமே கிளம்பவில்லை.

அவன் சொன்னது அவ்வளவும் உண்மையாக இருக்குமோ! அப்படியானால் என் இதய பீடத்திலிருந்து வலுக் கட்டாயமாக அவளை இறக்கிவிடத்தான் வேண்டுமா! ஆனால்—அந்த ரமணிக்கும் அவளுக்கும் பரஸ்பரம் அன்பு இருக்கும் பட்சத்தில் நான் ஒதுங்குவதுதானே நியாயம்!

ஆனால் வதந்தி உண்மையாகவே இருந்து, இந்த எச்சரிக்கையையும் மீறி அவளை நான் மணந்து கொண்டால்!—சந்தேகமில்லாமல் வாழ்க்கை நரகமாகத்தான் போய் விடும், இருவருக்கும்.

மறுநாள் காலை திருச்சியில் என் சகோதரியின் வீட்டில் சொல்லாமல் நான் போய் நின்றபோது அவர்கள் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். மெதுவாக, நிதானத்தை இழக்காமல் அவர்களிடம் சமாசாரத்தை நான் சொன்னபோது அவர்களது வியப்பு இன்னும் அதிகமாயிற்று.

வெகு நேர யோசனைக்குப் பிறகு அத்திம்பேர் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். அதன்படி நான் மட்டும் அன்று மாலை பொன்மலைக்குப் போக வேண்டும். பெற்றோர்களின் சம்மதத்துடன் அந்தப் பெண்ணிடம் இரண்டு வார்த்தைகள் பேச வேண்டும். தனிமையில் அவளிடமிருந்து இந்த வதந்தி உண்மையா இல்லையா என்று நான் தெரிந்து கொள்ள வேண்டியது.

இந்த ஏற்பாட்டின்படி நான் அவர்கள் வீட்டை அடைந்தபோது நன்றாக இருட்டி விட்டது.

"வாருங்கள்! எப்போது வந்தீர்கள்!"

எதிர்பாராத விதமாக என்னைக் கண்டதும் திகைப்பு, சந்தோஷம் முதலிய உணர்ச்சிகளால் அவர்கள் திணறிப் போனதை நான் முகக் குறியிலிருந்தே நன்கு தெரிந்து கொண்டேன்.

"உட்காருங்கள்! வீட்டில் எல்லோரும் சௌக்கியந்தானே!" என்ன பேசுவது என்று புரியாத ஒருநிலையில் தடுமாற்றத்துடன் மாமனாராகப் போகிறவர் பேசினார்.

விஷயத்தை எப்படி ஆரம்பிப்பது என்ற தயக்கம் எனக்கு உண்டாயிற்று. மென்று விழுங்கிக் கொண்டே மெதுவாகப் பேசத் தொடங்கினேன்.

"ஒரு சமாசாரம்! நான் உங்கள் பெண்ணுடன் தனிமையில் ஒரு ஐந்து நிமிஷம் பேச அனுமதி கொடுக்க வேண்டும்!"

தைரியமாக இதைச் சொல்லிவிட்டு அவர் முகத்தைப் பார்த்தேன். மனைவியின் பக்கம் அவர் திரும்பினார். சில வினாடிகள் ஒரே அமைதி! பக்கத்து அறையிலிருந்து கதவிடுக்கு வழியாக இரு கண்கள் என்னைத் துளைத்தெடுப்பதை அப்போதுதான் உணர்ந்தேன் நான்!

"எதற்காக! என்ன பேச வேண்டும் என்று தெரிவித்தால் நானே அவளிடம் கேட்டுச் சொல்கிறேன்!" என்றார் அவர், சிரிப்பை வலிய வரவழைத்துக் கொண்டு.

"ஒன்றுமில்லை! சும்மாத்தான்......!" என்று மழுப்பினேன் நான்.

புடவைத் தலைப்பை நன்றாக இழுத்துப் போர்த்திக்கொண்டு அந்தம்மாள்—சகுந்தலாவின் தாயார் தான்—உள் வாசற்படியிலிருந்து மிகுந்த அடக்கத்துடன் பேசினாள்.

"நம்ப குடும்பத்தில் இதுவரையில் அம்மாதிரி நடந்து வழக்கமில்லை போலிருக்கிறதே! கல்யாணமாவதற்கு முன்பு புது மனிதரிடம் பேசிப் பழகுவது நமக்குக் கௌரதை இல்லை என்று எனக்குப் படுகிறது. அவரிடம் சொல்லுங்களேன்!"

கணவனைப் பார்த்துத்தான் அவள் பேசினாள். ஆனாலும் சமாசாரம் எனக்குத்தானே!

"இதில் தவறு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை எனக்கு!" என்றேன் அசட்டுச் சிரிப்புடன்.

"தவறுக்காக இல்லை—ஆனால் உங்களுக்கு என்ன பேச வேண்டும்! என்னிடம் சொல்லுங்களேன். நான் சகுந்தலாவிடம் கேட்டுப் பதில் வாங்கி வருகிறேன்!" — சாதாரணமாகத்தான் கேட்டார் அவர்.

"மன்னிக்க வேண்டும்! நேரே தனிமையில் பேச வேண்டும் என்பதுதான் என் விருப்பம்!" என்றேன் தீர்மானமாக.

தம்பதிகளின் முகக் குறி மாறியது போல எனக்குப் பட்டது.

தொண்டையைக் கனைத்து விட்டுக் கொண்டு தைரியத்தை யெல்லாம் வரவழைத்தேன். "சரி! அப்போது நான் வருகிறேன். என்னுடைய இந்தச் சிறிய ஆசையைக் கூடப் பூர்த்தி செய்யாத இடத்தில் சம்பந்தம் செய்து கொள்வது என்பது என் வரையில் யோசனைக்குரிய விஷயமாகத்தா னிருக்கிறது! எனக்கு உங்கள் பெண்ணை மணக்கப் பிராப்தமில்லை என்றுதான் தோன்றுகிறது. நமஸ்காரம்!" என்று பளிச்சென்று கேலியாகச் சொல்லி விட்டு எழுந்தேன்.

அவர்கள் ஏன் மறுக்க வேண்டும் என்னுடைய இந்தச் சிறிய வேண்டுகோளுக்கு! அப்படியானால் நான் கேள்விப்பட்ட வதந்தி அவ்வளவும் உண்மை தானா! இல்லை—வாஸ்தவமாகக் குலக் கௌரவத்துக்குப் பழுது வரக் கூடாதே என்பதற்காகத் தான் அப்படி நடந்து கொண்டார்களா!

வாசற்படி இறங்கும்போது 'ஆவல் கட்டுக்கடங் காமல் என்னையும் மீறிக் கண்கள் உள்பக்கம் திரும்பின. அந்தப் பெண், இவ்வளவுக்கும் காரணமானவள், அறையை விட்டுக் கூடத்துக்கு வந்து என்னையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண் டிருந்தாள். ஒரு வினாடி நின்று நிதானமாக அந் அழகுப் பதுமையைப் பார்த்தேன். அவள் விழி களில் நன்றி யுணர்ச்சி பிரதிபலிப்பது போன் ஒரு பிரமை எனக்கு உண்டாயிற்று.

கடைசியில் கல்யாணம் நின்றுதான் போயிற்று எனக்கும் அன்று முதற்கொண்டே நிம்மதியு போய் விட்டது. தியாகம் செய்ததாகப் பெருமை பட்டுக் கொண்டேனே ஒழிய, தியாகி ஒருவனுக்கு இருக்க வேண்டிய மன அமைதி மட்டு எனக்கு ஏனோ வரவே யில்லை. அவளைப் பற்றி சிந்தனைகளையே அகற்றும் நோக்கத்துடன்தான் வட நாட்டில் ஒரு உத்தியோகத்தைத் தேடி கொண்டு உயிருக்குயிரான சகோதரியின் வார் தையையும் தட்டி விட்டுப் போய் விட்டேன்.

நான்கு வருஷங்களுக்குப் பிறகு இப்போ தான் தெற்கேயே வருகிறேன், முதன் முறையாக எத்தனை நாட்கள் கழித்து அவளைப் பார்க்கிறேன் அதுவும் பொன்மலை எங்கே! விருதுநகர் எங்கே அவன் எங்கு போகிறான்!......

ரயில் 'கூ' வென்று கத்தியதில் கல் விழுந்த கா கைக் கூட்டம் போல என் சிந்தனைகள் சித யோடி விட்டன. இரு வண்டிகளும் ஏக கால தில் கிளம்பின. ஸ்டேஷனிலிருந்து நீண்ட தூர இரண்டு இருப்புப் பாதைகளும் அருகருகே செ ன்றன என்பது எனக்குத் தெரியும்! அவ இன்னொரு முறை பார்த்தால் என்ன!

என் ஆதங்கத்தை உணர்ந்தது போல நா செல்லும் வண்டி வேகத்தை அதிகப்படுத்தி கொண்டது. ஜன்னல் வழியே நான் எதிர் வ

18-3-55 வெள்ளிக்கிழமை குதூகல ஆரம்பம்

# சென்னை பிளாஸாவில்

தினசரி 3 காட்சிகள்

பிலிமிஸ்தான் தயாரித்த மகோன்னத சங்கீதச் சித்திரம்

பம்பாய் லிபர்ட்டி மற்றும் இந்தியாவின் முக்கிய நகரங்களில் ஓடிக்கொண்டிருக்கும் இப்படம் வெள்ளி விழா கொண்டாடப் போகிறது



# நாகின்

நடனங்கள் கேவாகலரில் பிடிக்கப்பட்டிருக்கிறது

நடிகர்கள்:

வைஜயந்திமாலா ★ பிரதீப் குமார் ★ ஜீவன் ★ முபாரக்

இதுவரை வெளிவந்த திரைப் படங்களை விட பல அம்சத்திலும் வெற்றி பெற்றுள்ள மிகச் சிறப்புடைய படம்

கேவாகலரில் எடுக்கப்பட்டுள்ள வைஜயந்திமாலாவின் மிடுக்கான அற்புத நடனம் பார்ப்பவர்களை பிரமிக்கச் செய்யும்

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்

பிலிமிஸ்தான் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் (இந்தியா) லிட்.

ப்ப் பார்த்துக்
ண்டு இருந்தேன்.
ரயில்களிலும்
்கும்சிறுவர்கள்—
பெரியவர்களும்
த்தான்! — குது
ாகக்கையை ஆட்
கொண்டு இந்தப்
ட்டியில்எந்தரயில்
 க்கும் பார்க்கலாம்
ு ஆவலுடன்
த்தனர். இதோ
ிருக்கும் பெட்டி
ங்கி விட்டது!
ருவரும் நேருக்கு
சந்தித்தோம்!
ணம்! ஆம், ஒரு
ம் தான் இருவர்
ளும் கலந்தன!
னத் தெரிந்து
ண்டாள்என்பதை
தக் கண்களில்
ன்றி மறைந்த
ப்பு காட்டிக்
டுத்து விட்டது.
விநாடிகள்தான்
்கே முடிந்தது என்
ம் அந்தக் காட்சி
மனத்தின் ஆழத்
பதிந்து விட்டது.
ன லோரமாகச்
தலா அவள் மடி
அதே ஜாடையில்
ஹடைய அச்சே
ன்றதந்த விக்ர
ஆம், குழந்தை
! அருகே அவனை
ரத்தாற்போல ஒரு
பன், கணவனைத்
ருக்க வேண்டும்!
ளவுதான் நான்
்ந்தது.
னவின்சுழலில்என்
குழப்பம் அதிக
துதான் பிச்சம்
ளவு காட்களு
பிறகு ஏன் எக்
டய கண்ணிக
் தென்பட்டான்
ு வேதனையடைக்
.—ஆனல் பிசகு
ீதுதானே! புண்
றி ஆற்றுவது
ல அப்பொழுதே
ிந்து உண்மையை
்களிடமே கேட்டு
்து கொண்டிருக்
ஒருவேளை





சென்ற ஒன்பதாம் தேதி சென்னை ராஜாஜி மண்டபத்தில் தமிழ்நாடு ஹரிஜன சேவா சங்கத்தின் ஆதரவில் மதுரை ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் நினைவு நாள் கொண்டாடப்பட்டது. இந்தக் கூட்டத்துக்கு கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா தலைமை தாங்கினர். தலைவர் ராஜாஜி, திரு ஷெஷண்முகம் பிள்ளை, திரு பாஷ்யம் ஐயங்கார், திரு கே. பி. லக்ஷ்மண ராவ், திரு வெங்கடசாமி நாயுடு முதலியோர் திரு வைத்தியநாதய்யர் அவர்களின் தேச பக்தியைப் பற்றியும் தியாகத்தைப் பற்றியும், உயர்ந்த குணங்களைப் பற்றியும் சிறப்பாகப் பேசினர்கள். ஸ்ரீ வைத்தியநாதய்யருக்குத் தங்கள் அஞ்சலியைச் செலுத்தச் சென்னை நகர மக்கள் திரளாக வந்து கலந்து கொண்டதையும் கூட்ட நிகழ்ச்சிகள் சிலவற்றையும் மேலே படத்தில் காணலாம்.

் என்னுடையவள் ஆகி யிருப்பாளோ
ளவோ! யார் கண்டது!
ோஜா மலரின் காம்பிலுள்ள முள்போல அந்த
தி—ஆம்! நிச்சயமாகத் தெரியாத வரையில்
மை என்றோ அல்லது அபவாதம் என்றோ
ாறு கூற முடியும்! அந்த வதந்தி நான்
ள அடையும் வழியில் நின்றது. முள்ளுக்குப்
து நான் மலரை விட்டே எட்டிப் போய்

நின்று கொண்டேன். யாரோ ஒருவன்—லாகவமாக ரோஜாவைப் பறிக்கத் தெரிந்த அதன் சொந்தக்காரனே அல்லது முள்ளையும் லட்சியம் செய்யாமல் அதை முரட்டுத்தனமாகக் கிள்ளி எடுத்தவனே—இப்போது அந்த ரோஜாவின் சுகந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறான். கொடுத்து வைத்தவன்! சிந்தனை கலைந்து பார்த்த போது அந்த ரயில் தூரத்தில் போவது தெரிந்தது.




பேராசிரியர் ரா.பி.சேதுப்பிள்ளை

## 11. காயல்மா நகரம்

ஏறக்குறைய அறுநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னே பாண்டி நாட்டிற்கு வந்தார் ஓர் இத்தாலிய மேதை. அவர் பல நாடு கண்டவர்; 'மார்க்கோ போலோ' என்னும் பெயருடையவர். அவர் வந்த காலத்தில் சுந்தரபாண்டியன் மதுரையில் அரசு வீற்றிருந்தான். அவன் உடன் பிறந்தவர் நால்வர்; அவர் பாண்டி நாட்டின் பல பகுதிகளில் ஆட்சி புரிந்தனர்.

மார்க்கப் போலர், தாம் கண்ட காட்சிகளையும் கேட்ட செய்திகளையும் முறையாக எழுதி வைத்தார். பாண்டி நாட்டின் பண்பாட்டையும் பழக்க வழக்கங்களையும் அவர் எழுதிய குறிப்புக்களால் நன்கு அறிந்துகொள்ளலாம்.

அவர் வந்த காலத்தில் கொற்கைத் துறைமுகம் அழிந்து போயிற்று. குணகடல் அதைவிட்டு நெடுந்தூரம் விலகி நின்றது. பொருநையாற்று முகத்தில் அமைந்த 'காயல்' என்னும் துறையில் அலைமோதிக் கொண்டிருந்தது. அத் துறைமுகத்தில் தலையெடுத்து நின்ற காயல் நகரத்தைப் அவர் சுற்றிப் பார்த்தார். அதன் பரப்பும் சிறப்பும் அவர் உள்ளத்தைக் கவர்ந்தன. "பெருமையும் மேன்மையும் வாய்ந்த நகரம் என்று*" என்று அந்நகரத்தைப் பாராட்டியுள்ளார் அவ் அறிஞர்.

* "Cael (Kayal) is a great and noble city"- Marco Polo.

அயல்நாடுகளிலிருந்து குதிரைகளை இறக்மதி செய்யும் வழக்கம் தமிழகத்தில் நெடுகாலமாக உண்டு. சோழ நாட்டுத் துறைமாகிய காவிரிப்பூம் பட்டினத்தில் கடல் வயாக வந்து இறங்கிய குதிரைகளை,

"நீரின்வந்த நிமிர்பரிப் புரவி"

என்று பட்டினப்பாலை குறிக்கின்ற, பாண்டி நாட்டுத் துறைமுகத்திலும் குரைகள் இறக்குமதி செய்யப் பட்ட என்பது மார்க்கப் போலரின் குறிப்புகளால் தெரிகின்றது.

"பாண்டிய மன்னர்கள் குதிரைபடையை வலுப்படுத்தும் கருத்தோபெரும் பொருள் செலவிடுகின்றார்கள். ஆண்தோறும் ஐயாயிரம் குதிரைகள்வரை இறக்மதி செய்கின்றார்கள். ஆயினும் அவற்றைபேணி வளர்க்கும் முறை பாண்டி நாட்டாகுப் பிடிபடவில்லை. அக் குதிரைகளுக்இந்த நாடும் ஒத்துக் கொள்ளவில்லை. அலால் அவை வலியிழந்து, வாழும் தோமாகி, ஒல்லையில் இறந்து விடுகின்றன. காயதுறையில் குதிரை வாணிபம் செய்வோஆண்டுதோறும் கொள்ளை ஊதியம் அஇன்றார்கள்" என்ற செய்தி அவர் குறிப்பிகாணப்படுகின்றது.

இன்னும், தென்பாண்டி நாட்டு மக்களபழக்க வழக்கங்களைக் கூறுமிடத்தில் தாம்

லம் போடும் பழக்கத்தை அவர் விளக்கமாக எழுதியுள்ளார். வெற்றிலை போடும் பழக்கம் தொன்று தொட்டு இந்நாட்டில் நிகழ்ந்து வருகின்றது. தமிழ் நாட்டார்க்கு வெற்றிலையில் உள்ள விருப்பம் வேறு எப்பொருளிலும் இல்லையென்றே சொல்லலாம். செல்வர் மாடங்களில் வெற்றிலைச் செல்லமுண்டு. ஏழையர் மடியிலும் வெற்றிலைப் பை உண்டு. 'இலையமுது' என்ற சிறப்புப் பெயர் பெற்றது வெற்றிலை. பாடுபட்டுப் பிழைக்கும் ஏழை மக்கள் வயிறு காய்ந்தாலும் வெற்றிலை போடாதிருக்க மாட்டார்கள். வெற்றிலைக்கும் விதியில்லாத வறியவனை 'வெறுவாய்க்கு இலை கெட்டவன்' என்று வசை கூறுவர். 'அடை' என்ற பெயரும் வெற்றிலைக்கு உண்டு. அதனாலேயே 'அடைப்பை' என்பது வெற்றிலைப் பையைக் குறிக்கின்றது. அடையோடு போடும் காயாகிய பாக்கு அடைக்காய் என்று சங்க நூல்களில் வழங்குகின்றது. அதுவே ஆங்கிலத்தில் 'அரிக்கனட்' என்று சிதைந்துள்ளது. தமிழ் ஒலியாகிய டகரம் மேலை நாட்டார் நாவில் சரியாக வருவதில்லை. கொள்ளிடம் என்ற பெயரை 'கொலரோன்' ஆக்கியது போலவே அடைக்காயை அரிக்கனட் ஆக்கினர். திருமணத்துக்கு அடைக்காய் வைத்து அழைக்கும் பழக்கம் இன்றும் தமிழ் நாட்டில் உண்டு.

மார்க்கப் போலர் தென்னாட்டுக்கு வந்த காலத்தில் 'தாம்பூலம்' என்ற சொல் நாடெங்கும் வழங்கி வந்ததாகத் தெரிகின்றது. கலித்தொகையிலும் காளிதாஸன் கவிதையிலும் எடுத்து ஆளப்பட்டுள்ளது இச் சொல். தாம்பூலத்தால் எவ்வாயும் செவ்வாயாக மார்க்கப் போலருக்குக் காட்சி யளித்தது.

இந்நாட்டுப் பண்பாட்டின் அடியாக எழுந்த சில பழக்க வழக்கங்கள் மேலை நாட்டவராகிய மார்க்கப் போலருக்குப் பெரு வியப்பை விளைத்தன. "இந்நாட்டில் ஆண்களும் பெண்களும் நாள்தோறும் குளிக்கின்றார்களே! தண்ணீர் குடிக்கும் கிண்ணத்தைத் தலைக்கு மேல் தூக்கிப் பிடித்துக் கொண்டு நீரைப் பருகுகின்றார்களே! இரு கையாலும் உணவை எடுத்து உண்ணாமல் ஒரு கையால் எடுத்து உண்கின்றார்களே! வீடு வாசல்களைச் சாணத்தால் மெழுகுகின்றார்களே! அரையில் உடுத்த ஆடையோடு வெளியே திரிகின்றார்களே!" என்று அவர் எழுதியுள்ள குறிப்புக்கள் மேலை நாட்டாருக்கும் கீழை நாட்டாருக்கும் உள்ள வேற்றுமைகளை நன்கு உணர்த்துகின்றன.

இவ்வாறு தென் பாண்டி நாட்டுப் பழக்க வழக்கங்களை விரித்தெழுதிய மார்க்கோ போலர் 'காயலி'ன் அருகே யிருந்த முத்துச் சலாபத்தையும் விளக்கமாகக் குறித்துள்ளார். "வேனிற் காலத்திலே முத்துக் குளிக்கும் வேலை தொடங்கும். கடலுள் மூழ்கிப் பழகிய பரதவர், படகுகளில் ஏறிச் செல்வர். முத்துச் சிப்பிகள் விளையும் இடந் தெரிந்து, படகை நிறுத்திப் பணி செய்வர். படகிலே கட்டிய கயிற்றைப் பற்றிக் கொண்டு, பரதவன் நீரினுள்ளே இறங்குவான். அகப்பட்ட முத்துச் சிப்பிகளை வாரி எடுத்து இடுப்பிற் கட்டிய பையில் இடுவான். மூச்சு முட்டும் பொழுது கயிற்றை அசைப்பான். படகின் மீது நிற்கும் தோழர்கள் உடனே கயிற்றை இழுத்து அவனைப் படகின் மேல் ஏற்றுவர். எடுத்த சிப்பிகளைப் படகிலே கொட்டி விட்டு, சிறிது இளைப்பாறி மீண்டும் கடலினுள்ளே இறங்குவான். இவ்வாறு நாள் முழுதும் பணி செய்து முத்துச் சிப்பிகளைக் கடற்கரையில் கொண்டு குவிப்பர். அவற்றைப் பங்கிடும் பொழுது பத்தில் ஒரு பாகம் பாண்டிய மன்னர்க்கு இறைப் பொருளாக வழங்கப்படும். கடலுள் மூழ்கி முத்து எடுக்கும் பரதவரை மீன்கள் கடித்து விழுங்கி விடாமல் அவற்றின் வாயை மந்திரத்தால் கட்டிக் காக்கும் மறையவர்க்கு இருபதில் ஒரு பாகம் மந்திரக் கூலியாகக் கொடுக்கப்படும். எஞ்சிய சிப்பிகள் பாடுபட்டவருக்குரிய பங்காகும்" என்று மார்க்கோ போலர் கூறுகிறார்.

தமிழ்நாட்டு மன்னர் நீதியும் அவர் எழுதிய குறிப்புக்களால் நன்கு விளங்குகின்றது. 'நாட்டைக் காப்பது அரசு: அவ்வரசைக் காப்பது நீதி' என்பது இந்நாட்டுக் கொள்கை.

"இறைகாக்கும் வையக மெல்லாம், அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்"

என்று திட்பமாகக் கூறினர் திருவள்ளுவர். "சமன்செய்து சீர்தூக்கும் கோல் போல்" அமைந்து குற்ற நற்றங்களை நன்கு ஆராய்ந்து நீதி செலுத்தினர் பழங்காலத் தமிழ் மன்னர்கள். நீதி மன்றத்தில் இன்னான் என்றும் இனியான் என்றும் பார்ப்பதில்லை. உடையான் என்றும் இல்லான் என்றும் உணர்வதில்லை. குற்றத்துக்கேற்ற தண்டனையைக் கூசாமல் விதித்தனர் கொற்றவர். இவ்வாறு மன்னர்கள் கடைப்பிடித்து ஒழுகிய நெறி முறையைக் கண்டு மகிழ்ந்தார் மார்க்கப் போலர்.

கடன் கொண்டவன் கொடுத்தவனிடம் நேர்மையாக நடந்து கொள்ளும் பழக்கமொன்று அவர் குறிப்பிலே காணப்படுகின்றது. வாங்கிய கடனை வாக்களித்த நாளில் செலுத்தா விட்டால் கடனாளியைப் பின் தொடர்ந்து சென்று அவன் நிற்குமிடத்தைச் சுற்றி ஒரு கோடு கீறுவான், கடன் கொடுத்தவன். அக் கோட்டைக் கடந்து கடன்பட்டவன் தப்பி ஓட வழி தேடுவதில்லை. கீறிய கோட்டுக்குள்ளே நின்று கடனைத் தீர்க்க முயல்வான். பணம் கிட்டாதாயின் தக்கார் ஒருவரைக் கடனுக்காகப் பிணைப்படுத்துவான். இப்படிச் செய்யாமல் கீறிய கோட்டைத் தாண்டினுல் கடனாளி கொலைத் தண்டனைக்கு உள்ளாவான். அரசன் முதலாக ஆண்டி ஈறாக எல்லோரும் இந் நெறி முறையில் அடங்கி நின்றனர். நாடாளும் அரசனும் இவ் வழக்கத்திற்குக் கட்டுப்பட்டு நடந்ததைக் கண்கூடாகக் கண்டார் மார்க்கப் போலர்.

அயல்நாட்டு வணிகன் ஒருவனுக்கு அரசன் ஒரு சிறு தொகை கொடுக்கக் கடமைப்பட்டிருந்தான். அவ் வணிகன், பல முறை கேட்டும் பணம் வரவில்லை. ஒரு நாள் அரண்மனையினின்றும் வெளிப்பட்டுக் குதிரைமீது சென்று கொண்டிருந்த அரசனைக் கண்டான் அவ் வணிகன். அவனைப் பின்தொடர்ந்து சென்றான். குதிரை நின்ற வேளை பார்த்து அதைச் சுற்றி ஒரு கோடு கீறினான். அது கண்ட அரசன் அங்கேயே நின்று விட்டான். வணிகனுக்குரிய கடனைத் தீர்த்த பின்னரே அவனிட்ட கோட்டைக் கடந்து மாளிகையை அடைந்தான். இக் காட்சியைக் கண்ட பொது மக்கள் "அறங் காக்கும் அரசன்" என்று அவனை வாயாரப் புகழ்ந்து வாழ்த்தினர் என்ற செய்தியை மார்க்கப் போலர் எழுதியுள்ளார்.

அவர் கண்ட காயல் துறைமுகமும் சில நூற்றாண்டுகளில் தூர்ந்து போயிற்று. காயலையும் கடல் கைவிட்டு அகன்றது. இப்பொழுது சிறிழந்த சிற்றூராகக் காணப்படுகின்றது காயல். ஆயினும் அவ்வூரிலே வீரபாண்டிய கட்டபொம்மன் கட்டிய மண்டபமொன்று இன்றும் காட்சியளிக்கின்றது. வெள்ளையரோடு வெம்போர் விளைத்த கட்டபொம்மன் திருச்செந்தூர் முருகனைக் குல தெய்வமாகக் கொண்டவன். அங்கு நடைபெறும் பூசையைப் பாஞ்சாலங் குறிச்சியில் இருந்து கொண்டே அறிந்து தொழுவதற்காக நாழிகை வழி தூரத்துக்கு ஒரு நகரா மண்டபம் கட்டி இருந்தான். அவை ஒன்றினின்று ஒன்று எடுத்து இயம்பும் ஓசையால் அவன் பூசை வேளையைத் தெரிந்து கொள்வான். திருச்செந்தூருக்கும் பாஞ்சாலங் குறிச்சிக்கும் இடையேயுள்ள பாதையில் பாழடைந்த சில நகரா மண்டபங்கள் இன்றும் காணப்படுகின்றன. காயலில் உள்ள பிள்ளையார் கோவிலுக்கு எதிரே காணப்படும் சதுர மண்டபம் அவற்றுள் ஒன்றாகும். பாஞ்சாலங் குறிச்சியில் விடுதலைக் கொடி நாட்டிய வீரக்குடியின் சீலத்திற்கு ஒரு சான்றாக விளங்கும் மண்டபத்தைப் பாதுகாத்து வைத்திருக்கும் காயலைக் காண்பதும் நன்றே.

காயலும் தூர்ந்த பின்னர் தென்னாட்டில் தூத்துக்குடி துறைமுகமாயிற்று. பொருநை ஆறும் கருங் கடலும் பெரும்போர் புரிகின்ற துறையை விட்டு நெடுந்தூரம் விலகியிருத்தலால் தூத்துக்குடி இன்றும் சிறந்த துறைமுகமாகத் திகழ்கின்றது. முன்னாளில் கொற்கைத் துறையிலும் காயல் துறையிலும் நிகழ்ந்த முத்துச் சலாபம் இப்பொழுது பல ஆண்டுகளுக்கு ஒரு முறை தூத்துக்குடியில் நடைபெறுகின்றது.

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்



## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது. வீரிய குளோரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்தமாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக்கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது

சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.



### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாது காக்கலாம்.




CTP98

## குழந்தைக்கு எப்பொழுது

# டூமெக்ஸ்

## பால் உணவைக் கொடுக்க

## ஆரம்பிக்க வேண்டும்?

தாய்ப் பால் குறைந்து புட்டிப்பால் கொடுக்க நேரிடும் போது மட்டுமே யன்றி இதற்கு முன்பு இல்லை. விளம்பரங்களில் என்ன சொல்லப்பட்ட போதிலும் குழந்தைக்குத் தாய்ப்பாலைப் போல் வேறு எதுவும் ஆகாது. தாய்ப்பாலுக்கு அடுத்ததாக டூமெக்ஸ் பால் உணவே மிகவும் நல்லது என்று நீங்கள் சந்தேகமின்றி கொடுக்கலாம். குழந்தைக்கு புட்டிப்பால் கொடுக்க அவசியம் ஏற்படும் போது டூமெக்ஸ் பால் உணவையே கொடுக்க ஆரம்பியுங்கள். இது நிர்பயமானது. போஷாக்கு அளிக்க வல்லது. உங்கள் பணத்திற்கு முழு பொறுமானம். ஆகவே எப்போதும் டூமெக்ஸ்ஸையே வாங்குங்கள்.

**டூமெக்ஸ்**
**பால் உணவு**

**உங்கள் குழந்தைகளுக்கு டூமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களின் வளர்ச்சியைக்கவனியுங்கள்**

கல்கியின்

# அமரதாரா

அத்தியாயம் 48

## சுடர் வீசும் தாரகை

டைரக்டர் என்று எனக்குச் சுலோசனா ஒரு நெட்டையான மனிதரைக் காட்டினாள். அவர் குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டு அங்கு அமைக்கப் பட்டிருந்த காட்சி ஜோடனையைக் கவனித்துக் கொண்டிருந்தார். சில சமயம் ஒரு கண்ணை மூடிக் கொண்டு பார்த்தார். தூரத்தில் நின்று பார்த்தார். பிறகு அருகில் வந்து ஒரு பையனைக் கூப்பிட்டு, "குளத்தில் ரொம்ப புஷ்பங்கள் அதிகமாக இருக்கின்றன. எடுத்து விடு. கொஞ்சம் இருந்தால் போதும்" என்றார். இப்படிப் பல மாறுதல்கள் செய்த பிறகு அருணாதேவியைப் பார்த்து, "ரிஹர்ஸல் ஆரம்பிக்கலாமா?" என்றார். அருணாதேவி உடனே எழுந்திருந்து குளக் கரையில் சென்று உட்கார்ந்து கொண்டு கால்களைத் தண்ணீரில் தொங்க விட்டுக் கொண்டார்.

ஒத்திகை ஆரம்பித்தது. தோழிப்பெண்கள் வந்து ஏதோ நடனமாடினார்கள்.

பிறகு அடுத்தடுத்துச் சில காட்சிகள் படமாக எடுக்கப்பட்டன. கதாநாயகன் குதிரைமேல் தன் தோழனுடன் வருகிறான். தோழிப் பெண்கள் நிற்பதைப் பார்த்து ஆத்திரப்படுகிறான்.

"என் இதய வானில் ஒளிவீசித் திகழும் ராஜகுமாரி சந்திரிகாவைச் சந்திக்க நான் வரும் போதெல்லாம், இத்தனை பேர் அவளைச் சூழ்ந்து கொண்டு நிற்கிறார்களே? இதற்கு ஒரு வழி செய்யக் கூடாதா?" என்றான்.

"நான் என்ன செய்வது, பிரபோ? சந்திரனைச் சுற்றித் தாரைகள் மின்னுவது சகஜந்தானே?"

"நீ மனம் வைத்தால் ஏதேனும் தந்திரம் செய்யலாம். அவர்களை எப்படியாவது கொஞ்ச தூரம் அழைத்துக் கொண்டு போய் விடு. உனக்கு என்ன வேண்டுமானாலும் நான் செய்வேன்."

"ஆமாம் ஆமாம்! தெரியுமே, உங்கள் சமாசாரம். காரியம் ஆகிற மட்டும் கெஞ்சுவீர்கள். அது கிடக்கட்டும். நான் இவர்களை எப்படியாவது காட்டில் கொஞ்ச தூரம் அழைத்துக் கொண்டு போய் விடுகிறேன். சரியாக அரை மணி நேரம்தான் தருவேன். அதற்குள் நீங்கள் உங்கள் சந்திரிகையைப் பார்த்துப் பேசி விட்டு மறுபடியும் ஒளிந்து கொண்டு விட வேண்டும். நீங்கள் இங்கேயே இருங்கள்" என்று சொல்லி விட்டுக் குதிரையிலிருந்து நடந்து செல்கிறான் நண்பன். அது வரை ஒரு காட்சி படமாயிற்று.

பிறகு கதாநாயகியும், கதாநாயகனும் குளக்கரையில் சந்தித்துப் பேசும் காட்சி படமாக்கப் பட்டது.

இப்படி ஏதோ நடந்து கொண்டிருந்தது. நான் என் மனோராஜ்யத்தில் ஆழ்ந்து விட்டேன். அருணாதேவி நடிப்பதை விட நான் இயற்கையாக நடிக்க முடியும் என்று நினைத்தேன். நான் இன்னும் அழகாக இருப்பேன், இன்னும் உணர்ச்சியோடு நடிப்பேன் என்று எண்ணினேன். ரங்கதுரையும் நானும் சேர்ந்து அந்தச் சூழ்நிலையில் நிற்பதாகக் கூடக் கற்பனை செய்து பார்த்தேன்.

ஒருவாறு அந்தக் காட்சி எடுக்கப் பட்டது. எல்லோரும் சற்று நேரம் உட்கார்ந்தார்கள். எல்லோரும் சூடான டீ சாப்பிட்டோம்.

"உங்களுக்கெல்லாம் என்ன ஆனந்தமான வாழ்க்கை! சிரிப்பும் களிப்பும் ரொமான்ஸும் ஆக ஒரே உற்சாகமாக இருக்கிறீர்கள்!" என்றாள் சுலோசனா.

"ஆமாம், ஆமாம்! எல்லாம் ஒரு நாள் படப்பிடிப்பு பார்த்தால் அப்படித் தான் தோன்றும். அந்தக் கண்ணைக் கூசும் வெளிச்சத்தில் வியர்க்க வியர்க்க நிற்கும்போது எப்படி உணர்ச்சி பொங்கி வரும்






என்று அங்கே நின்று பார்த்தால் தான் தெரியும்!'' என்றார் சந்துரு.

கதாநாயகனை சம்பத்குமார், "உண்மையில் இப்படி நடித்து நடித்து இயற்கையாக எப்படி இருப்பதென்றே மறந்து போய் விட்டது!'' என்றார்.

பிறகு சந்துரு என்னைப் பார்த்து, "உங்களுக்கு நல்ல முக வெட்டு இருக்கிறது. நீங்கள் மாத்திரம் மனம் வைத்தால் சுடர் வீசும் தாரகையாக விளங்கலாம்'' என்றார்.

சுலோசனா, "பார்த்தாயா, இந்து? எனக்கும் நாம் இருவரும் சினிமாவில் நடிக்க ஆரம்பித்தால் தேவலை என்று தோன்றுகிறது!'' என்றாள், புன்னகையுடன். எனக்கும் அது பெருமையாகத் தான் இருந்தது. ஆனால் நான் அதை அப்போது ரொம்பப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. ஏதோ உபசாரமாகக் கூறிய வார்த்தை என்றுதான் நினைத்தேன். ஆனால் அதை அவள் திரும்பத் திரும்பக் கூறினாள்.

படப்பிடிப்பு முடிந்து நாங்கள் அனைவரும் வீட்டுக்கு வந்தபோது காலை நான்கு மணி ஆகிவிட்டது. கண்களில் ஒருவித எரிச்சல் ஏற்பட்டிருந்தது. காலையில் தலை ஒரே கனமாக இருந்தது.

காலை ஏழு மணிக்கு எழுந்திருந்தேன். அதற்கு மேல் எனக்குத் தூங்கப் பிடிக்கவில்லை. மற்றவர்கள் எல்லோரும்
தூங்கிக் கொண்டிருந்தனர். தோட்ட
துக்குப் போய்ப் புஷ்பங்களைப் பார்க்கல
மென்று போனேன். கண்களைக் கவரு
வண்ண மலர்களைப் பார்த்து ரசித்து
கொண்டே, பனியால் ஈரமாக இருந்
பசும்புல் தரையில் நடந்து கொண்டிரு
தேன். முத்து முத்தாகப் பனித் துளிக
பச்சை நிறப் புல்லின் மீது பதிந்திரு
தது ஏதோ இந்திர ஜால வித்தையா
இருந்தது. "ஒவ்வொரு பனித்துளியினு
ளும் ஒரு சூரியன். பனித் துளியி
காதலனோ இந்த ஆதவன்? பனித்து
ஆதவனின் மேல் காதல் கொண்ட
அந்தக் காதல்தான் அதற்கு எப்பேர்
பட்ட சக்தியை அளித்து விட்டது? சி
னஞ் சிறு பனித்துளிக்குள் கதிரவனி
உருவம் அப்படியே அடங்கி விட்டதே
என்ன ஆச்சரியம்? அன்புக்குத்தா
என்ன சக்தி? எவ்வளவு பெரியவ
சூரியன்? அந்தச் சூரியனைத் தன் சி
னஞ் சிறு இதயத்தில் சிறைப் பிடித்
விட்டதே 'இந்தப் பனித்துளி?'' எ
றெல்லாம் எண்ணிக் கொண்டிருக்கு
போதே ஒரு பனித்துளியைக் கான
வில்லை. "ஆதவனின் அன்புக் கர
களினால் அரவணைக்கப்பட்டு அவனுட
ஒன்றாகக் கலந்து விட்டது போலும்'' என்று எண்ணினேன்.



ரியமூர்த்தியைப் பார்த்து, "உன்னிடம் அன்பு வைத்த ந்தச் சின்னஞ் சிறு பனித் துளியை நீ அன்புடன் ற்றுக் கொண்டாய். என்னை என் அன்பருடன் சேர்த்து வைக்க வேண்டும்" எனப் பிரார்த்தித்தேன். என் தந்தை னக்குச் சொல்லிக் கொடுத்திருந்த "ஆதித்ய ஹ்ருதய" லோகங்களை வாயை விட்டு மெதுவாகச் சொல்லிக் காண்டே நின்று கொண்டிருந்தேன்.



"ஏதோ ஒரு வன தேவதை வழி தவறி இங்கு வந்து ற்பதாக நினைத்தேன். இந்துமதிதானே?" என்று குரல் கேட்டுத் திரும்பினேன். ரமேஷ் நின்று கொண்டிருந் தார். நான் ரமேஷிடம் சகஜமாகப் பேசிப் பழக ஆரம் பித்திருந்தேன். ஆனால் சுலோசனா தன் பெற்றோர்களின் ம்பாஷணையைப் பற்றி என்னிடம் சொன்னதிலிருந்து னக்கு ரமேஷிடம் பேசவே தயக்கமாக இருந்தது. வறான எண்ணம் எதற்கும் இடங் கொடுத்து டக் கூடாதே என்று மிகக் கவலையாக இருந் தது. ஆனால் அப்போது என்ன செய்வதென்று ரியாமல் விழித்தேன்.

நான் மௌனமாக இருக்கவே, "உன் வத்தை நான் கலைத்து விட்டேன்போலிருக் றது. ஸாரி!" என்று கேலியாகக் கூறினார் மேஷ். உண்மையிலேயே பர்வத ராஜகுமாரி ரமேசுவரனுக்காகத் தவம் செய்தது போல்

# கோ-ஆப்டெக்ஸ்

| | |
|---|---|
| பங்கு முதலீடு (28-2-55 வரை) ரூ. | 6,07,400 |
| சேமிப்புகள் (28-2-55 வரை) ரூ. | 29,92,746 |
| 28-2-55-ல் சென்னை ராஜ்யத்தில் உள்ள எம்போரியங்கள், டெப்போக்கள் ... | 177 |
| சென்னை ராஜ்யத்திற்கு வெளியில் இந்தியாவில் உள்ள டெப்போக்கள் ... | 13 |
| இந்தியாவுக்கு வெளியில் உள்ள எம்போரியங்கள் ... | 3 |
| இணைக்கப்பட்ட சிறிய நெசவாளர் கோஆபரேடிவ் ஸொஸைடிகள் ... | 714 |
| தறிகளின் எண்ணிக்கை ... | 1,18,000 |
| இந்தியாவில் இருக்கும் டெப்போக்கள், எம்போரியங்கள்மூலம் சராசரி மாத விற்பனைத் தொகை | ரூ. 8,40,802 |

# Co-optex

murli




சென்னை ராஜ்ய கைத்தறி நெசவாளர்
கூட்டுறவு சங்கம் லிட்.
34, பாந்தியன் ரோடு ..... எழும்பூர்.. சென்னை. 8.

நானும் தவம் செய்து கொண்டிருந்தேன் என்பது அவருக்கு எப்படித் தெரியும்?

உள்ளே போக என்ன சாக்குக் கிடைக்கும் என்று யோசித்தேன். சட்டென்று ஒன்றும் தோன்றவில்லை. என்ன பேசுவது என்றும் தோன்றவில்லை.

"ஏன் இந்து ஏதோ மாதிரி இருக்கிறாய்? . நான் வந்தது பிடிக்கவில்லையா உனக்கு?" என்று கேட்டார்.

இதற்குப் பதில் சொல்லாமலிருக்க முடியவில்லை. "அதெல்லாம் ஒன்றும் இல்லை" என்றேன்.

"பின்னே ஏன் இப்படிப் பேசாமல் மௌனமாக இருக்கிறாய்?"

"அப்பாவின் நினைவு வந்தது. பாவம் அவர் தனியாக இருப்பாரே? நாம் இப்படி உட்கார்ந்திருக்கிறோமே! என்று தோன்றியது. அவ்வளவுதான். வேறு ஒன்றுமில்லை. ஊருக்குப் போனால் தேவலை" என்று சொன்னேன்.



"ஏன் இங்கே இருக்க உனக்குப் பிடிக்கவில்லையா?" என்றார்.

"ரொம்பப் பிடிக்கிறது. ஆனால் என் அப்பாவை விட்டுவிட்டு எத்தனை நாட்கள் இங்கு இருப்பது? நான் இல்லாவிட்டால் அவர் ரொம்பவும் சிரமப்படுவார்" என்றேன்.

"நீ இங்கே இல்லாவிட்டால் எங்களுக்குத் தான் சிரமமாக இருக்கும்" என்றார் ரமேஷ்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. என்னசொல்வதென்று யோசிப்பதற்குள் ரமேஷ் "நீ காப்பி சாப்பிட்டாயோ, அம்மா?" என்று கேட்டார்.

இதுதான் தருணம் என்று, "இன்னும் இல்லை. இதோ போய்க் காப்பி சாப்பிட்டு விட்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் பறந்தோடி விட்டேன்.

உள்ளே சென்ற போது கோமளவல்லி அம்மாள் காய்கறிகள் நறுக்கிக் கொண்டிருந்தார். நானும் உட்கார்ந்து கொண்டு நறுக்க ஆரம்பித்தேன்.

ஏதோ பேசிக் கொண்டிருந்தோம். திடீரென்று கோமளவல்லியம்மாள், "இந்து! நீ ரொம்பக் கெட்டிக்காரப் பெண்ணென்று எனக்குத் தெரியும். ஆனால் இந்த சினிமா, இனிமா இதிலெல்லாம் உனக்கு ரொம்ப ஆசையிருப்பது போலத் தோன்றுகிறது. இதெல்லாம் எப்போதாவது பொழுது போக்காக வைத்துக் கொள்ளலாமே தவிர, இதே வேலையாக வைத்துக் கொள்ளக்கூடாது. நீ சமர்த்து என்று எனக்குத் தெரிந்திருப்பதால் சொல்லுகிறேன். சுலோசனாவுக்கும் கூட இப்படியெல்லாம் உஷாருமிருக்கும்படி நீ சொன்னால் எனக்கு ரொம்பப் பிடிக்கும்" என்றார்.

"சுலோசனா என்ன உளறினாள்?"

"நேற்று இரவு அந்தச் சந்துருவிடம் நீங்கள் இருவரும் சினிமாவில் சேர்ந்து விட்டால் ரொம்ப நன்றாக இருக்கும் என்று சொல்லிக் கொண்டிருந்தாளே, அது சரியா? நீயே சொல்லு!" என்றார்.

என் நெஞ்சு துணுக்குற்றது. நான் தன் மகளை விட அழகென்று சந்துரு கூறியது அவருக்குப் பிடிக்க வில்லை என்று நினைத்தேன்.

அதற்குள் காய் கறி நறுக்கி முடிந்தது. சுலோசனா அப்போது பாதிக் கண்களைத் திறந்து கொண்டே வந்தாள். "காலேஜுக்குப் போய்த் தொலைக்கணும்" என்று அலுப்புடன் சிணுங்கினாள்.

பிற்பகல் எனக்குக் கடிதம் வந்தது. கடிதத்தை ஆவலுடன் பிரித்தேன். என் தந்தைதான் எழுதியிருந்தார்.

"அருமைக் கண்மணி இந்துவுக்கு, ஆசிகள். உன் கடிதம் வந்தது. உன்னை நான் வந்து அழைத்துக் கொண்டு வர வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். இங்கு இருக்கும் பல வேலைத் தொந்தரவுகளினால் வர முடியவில்லை. இன்னும் இரண்டு மூன்று நாட்களில் வந்து விடுகிறேன்.

"நீ ரொம்ப சமர்த்தாக மாமி மனம் கோணாமல் நடந்து கொள். எனக்கு இங்கே நீ இல்லாமல் பொழுதே போகவில்லை. வீடே வெறிச்சென்றிருக்கிறது.

"உனக்குச் சகல மங்களங்களையும் கொடுக்க வேண்டுமென்று கருணா மூர்த்தியான இறைவனிடம் பிரார்த்திக்கிறேன்" என்று எழுதியிருந்தார்.

இரண்டு நாட்கள் சென்ற பிறகு அன்று படமாக்கப்பட்ட காட்சியைத் திரையில் பார்க்க அழைத்திருந்தார்கள். நான் மலைத்துப் போனேன். எத்தனை தரம் சிரமப்பட்டு, எத்தனை மணி நேரம் கண் விழித்து, எத்தனை பேர் வேலை செய்து எடுத்த படம் சில நிமிஷங்கள்தான் இருந்தன. ஒரே வியப்பாக இருந்தது. இன்னும் என்ன ஆச்சரியம் என்றால் சந்துரு அந்தத் தோழிகளையெல்லாம் கதாநாயகியிடமிருந்து பிரிப்பதற்காகச் செய்யும் தந்திரத்தையும் காட்சியாக எடுத்துச் சேர்த்திருந்தார்கள். அதற்குள் நாயகனும் நாயகியும் பேசிக் கொள்கிறார்கள். இதையெல்லாம் மாற்றி மாற்றிப் பார்த்த போது எனக்கு மலைப்பாக இருந்தது. அதைப் பற்றி ஓயாமல் சொல்லிச் சொல்லி ஆச்சரியப்பட்டேன். சுலோசனா எனக்குச் சினிமா எடுப்பதைப் பற்றி விவரமாகக் கூறினாள். ஆனால் கோமளவல்லி அம்மாள் எதிரில் நான் அதைப் பற்றி அதிகமாகப் பேசுவதற்கு விரும்பாமல் நிறுத்திக் கொண்டேன்.

## அத்தியாயம் 49

# வேதனை சூழ்ந்தது

சுலோசனா காலேஜுக்குப் போக ஆரம்பித்த பிறகு எனக்கு அந்த வீட்டில் பொழுது போவது சிரமமாக இருந்தது. மீராவும் பள்ளிக் கூடம் போய் விடுவாள். எத்தனை நேரம் கோமளவல்லி அம்மாளுடன் பேசிக்கொண்டிருப்பது? எனக்கு அவருடன் பேசி அலுத்துப் போய் விட்டது. முதலில் சென்னையைப் பற்றி ரொம்பப் பிரமாதமாக நினைத்தேன். ஆனால் சில நாட்களிலேயே குங்குமத் துறையின் இயற்கை எழிலுக்கு எதையுமே ஈடு இணை கூற முடியாது என்று தெரிந்து போய் விட்டது.

கண்களுக்குக் குளுமையான பசிய நிறம் பொருந்திய மலைகளின் அழகுக்கு ஈடாக, பட்டணத்துத் தார் ரோடுகளைக் கூற முடியுமா? அல்லது மலைச் சோலைகளில் பூத்துக் குலுங்கும் புன்னை, சண்பகம், சரக்கொன்றை, மரமல்லிகை முதலியவற்றின் அழகுக்கு ஈடாகச் சுலோசனா வீட்டுச் செயற்கைத் தோட்டத்தைத்தான் கூற முடியுமா? அங்கங்கே ஆலமரங்களில் செக்கச் சிவந்த பழங்கள் கோடிக்கணக்கில் கொத்துக் கொத்தாகப் பழுத்திருக்குமே. அதைப் பார்த்துக் கொண்டே இருந்தால் சிருஷ்டியின் ரகசியத்தையே அறிந்து கொண்டு விடலாமென்று தோன்றுமே! அருவிக்கரையோரங்களில் கடம்ப மரங்களில் குங்கும வர்ணமுடைய புஷ்பங்கள் பூத்து மண்டிக் கிடக்குமே. காற்றடிக்கும் போது பொல பொலவென்று அவை ஓடை நீரில் உதிர்ந்து, எங்கேயோ வெகு அவசரமாகச் செல்வது போல் விழுந்தடித்துக் கொண்டு ஓடுமே. அந்த அழகுக்கு ஈடாக எதைத்தான் சொல்ல முடியும்? இவ்வாறு ஒரு நாள் சுலோசனாவின் அறையின் ஜன்னலருகில் உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்தேன். ஊருக்கு உடனே போய் அப்பாவைப் பார்க்க வேண்டுமென்று தோன்றியது.

“இந்து அக்கா!” என்று மீராவின் குரல் கேட்டது. நான் எழுந்து சென்றேன். மீரா மாடிப் படியேறி வந்து கொண்டிருந்தாள். அவளுடைய கண்களில் கண்ணீர் படிந்திருந்தது. “என்னம்மா!” என்று பதற்றத்துடன் கேட்டேன். “கீழே விழுந்துட்டேன், அக்கா. காலிலே நன்னா அடி பட்டுடுத்து. ரத்தம் கூட வந்துடுத்து” என்று விசித்தாள் குழந்தை. எனக்குப் பரிதாபமாக இருந்தது. அவளைத் தூக்கி எடுத்துக்கொண்டு அவளுடைய படுக்கையில் கொண்டு உட்கார வைத்தேன்.

“அம்மா எங்கே, அக்கா?” என்று கேட்டாள் மீரா.

“அம்மா எங்கேயோ வெளியில் போயிருக்கா, கண்ணு. எங்கே, அடிபட்ட இடத்தைக் காட்டு. நான் பார்க்கிறேன்” என்றேன்.

முழங்காலில் நன்றாக அடிபட்டிருந்தது. “எப்படியம்மா அடிபட்டது?”

“இல்லேக்கா! ஸ்கூல்லே லீலா, கீதா, கமலி எல்லாரும் நொண்டி பிடிச்சு விளையாடிண்டு இருந்தோம். நான் ஓடறச்சே, கீதா என்னைக் கீழே தள்ளிட்டா. ரொம்ப வலிக்கிறது, அக்கா.”

“ஆமாம்! நீ எப்படி இப்போ வந்தே?”

“நான் அம்மாகிட்டே போகணும்னு ரொம்ப அழுதேன். அதனாலே டீச்சர் என்னைக் கொண்டு விடச் சொன்னா. இங்கே வந்தா அம்மா இல்லை.” அவள் குரலில் ஏமாற்றம் தொனித்தது. எனக்கும் என்னுடைய அம்மாவின் ஞாபகம்

வந்தது. 'நானும் இப்படித்தான் துளி காயம் பட்டாலும் அம்மாவைத் தேடு வேன். அவள் என்னை அணைத்துக் கொண்டு ஆறுதல் சொன்னால்தான் சமாதானமாக இருக்கும். ஆனால் இனி மேல் எனக்கு ஏதேனும் வந்தால் நான் யாரைத் தேடிச் செல்ல முடியும்?' இப் படி நினைத்ததும் என் கண்களில் ஜலம் வந்து விட்டது.

மீரா, "என்ன அக்கா! நீ எதுக்கு அழுறே? எனக்குக் காயம் பட்டதுக்கா?" என்று கேட்டாள். எனக்குக் கண்ணீ ரைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை. அடிபட்ட இடத்தை ஈரமான பஞ்சினால் துடைத்தேன். பிறகு சுலோவின் அறை யில் இருந்த மருந்தைப் போட்டு, துணி யால் கட்டினேன். வேதனை மாத்திரம் குறையவே யில்லை. அம்மாவின் நினை வாகவே இருந்தது. மீரா தலை யணையில் சாய்ந்து கொண்டே, "ஏன் அழுறே இந்துக்கா?" என்று பல தடவை கேட்டுக் கொண்டே இருந்தாள்.



கடைசியில் நான், "என்னு டைய அம்மாவின் ஞாபகம் வந்தது. கண்ணு! உன்னாட்டமா நான் சின்னவளாக இருக்கிற போது, ஒரு நாளைக்கு அருவி யைப் பார்க்கிறதுக்காக நானும் எங்கம்மாவும் போனோம். வெள் ளம் பொங்கிக் கொண்டு ஓடி யது. அப்போது ஒரு அழகான புஷ்பம் ஜலத்திலே மிதந்து வந்தது. அதை எடுக்கறதுக் காகக் குனிஞ்சேன். தொப கடீர்ன்னு ஜலத்திலே குப்புற விழுந்துட்டேன். எங்கம்மாவும் திடீர்ன்னு ஜலத்திலே குதிச்சுட்டா. அவளுக்கு நீஞ்சத் தெரியாது. இருந்தா லும் எங்கிட்ட இருந்த ஆசையினாலே அவளுக்கு ஜலத்திலே குதிச்சு என்னை எப்படியாவது காப்பாத்தி விடணும் என்று தோணித்து போலே இருக்கு. எனக்கு அது ஞாபகம் வந்தது. அவ் வளவு என்மேலே ஆசையா யிருந்த அம்மா இப்போ என்னை விட்டுட்டுப் போயிட்டாளென்று நினைச்சா ரொம்ப வருத்தமா யிருக்கு" என்றேன்.

மீராவின் கண்களிலிருந்து இரண்டு கண்ணீர் முத்துக்கள் உருண்டோடித் தலையணையின் மீது விழுந்து மறைந்தன. என்னாலும் அழுகையை நிறுத்த முடிய வில்லை. புடவைத் தலைப்பினால் முகத்தை மூடிக் கொண்டு சற்று நேரம் கண்ணீர் பெருக்கினேன். ரங்கதுரையை நினைத் துக் கொண்டேன். 'அம்மா அவரிடம் என்னை ஒப்புவித்து விட்டுப் போயிருக் கிறாள். அவரோ என்னை அடியோடு மறந்து விட்டார். அப்பாவுக்கும் ஏதா வது நேர்ந்து விட்டால் என்னை அணைத்து ஆறுதல் சொல்ல யார் இருக்கிறார்கள்?' என்று நினைத்தேன். எந்த வேளையில் தான் அவ்வாறு நினைத்தேனோ?

சகுனம் பார்ப்பது, ஜோசியம் பார்ப் பது முதலியவற்றி லெல்லாம் எனக்கு நம்பிக்கை கிடையாது. ஆனால் சில சமயம் நம்மையுமறியாமல் மனோவேதனை ஏற்படுகிறது. காரணம் தெரியாமல் அழுகை வருகிறது. உள்ளம் குமுறு கிறது. நெஞ்சம் பதைக்கிறது. காரணம் என்ன வென்று தெரிவதில்லை. ஆனால் பிறகு நேரிடும் சம்பவங்களைப் பார்த்து அன்று நாம் வேதனைப் பட்டதின் காரணத்தைத் தெரிந்து கொள்கிறோம். இதெல் லாம் ஏன் நடக்கிறது? உண் மையா, பொய்யா? என்பதைப் பற்றியெல்லாம் நான் ஆராய்ச்சி செய்யவில்லை. ஆனால் அன்று என் மனம் குமுறிக் காரண மில்லாமல் நான் வேதனைப்பட் டதையும் பின்னால் நடந்ததை யும் எண்ணிப் பார்க்கும்போது ஏதோ ஒரு பொருத்தம் இருப்ப தாக எனக்குத் தோன்று கிறது. ஆனால் அது அவ்வளவு முக்கியமில்லை. நடந்த சம்பவங் களைத் தொடர்ச்சியாக எழுது வதுதான் முக்கியம்.

நான் கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்த போது மீரா தூங்கியிருந்தாள். கண்களின் ஓரத்தில் கண்ணீர் காய்ந்து போயிருந்தது. மீராவின் மீது எனக்கு அன்பு பொங்கிக் கொண்டு வந்தது.

தூங்கும் மீராவை மீண்டும் ஒருதரம் பார்த்தேன். அவள் முகம் மிக அழகாக இருந்தது. பால் வடியும் சாந்தமான முகம். பட்டு ரோஜாப் போன்ற கன்னங்கள். கருமையான நீண்ட இமைகள் அவ ளுடைய முகத்துக்கு மிகவும் சோபை அளித்தன. இரண்டு பக்கமும் தலையணை யின் மேல் சிவப்பு நாடா வைத்துப் பின் னிய பின்னல்கள் கிடந்தன. கொத்துக் கொத்தாகப் பூப்போட்ட 'கௌன்' அணிந்து கொண்டிருந்தாள். என் மனம் சிறகு கட்டி ஆகாயத்தில் பறந்தது.

## காலமானார்



ரேயான் டிரேடர்ஸ் லிமிடெட், எம். சிடி அண்டு சன்ஸ் லிமிடெட், ரிலையன்ஸ் மோட்டார் கம்பெனி லிமிடெட் முதலிய கம்பெனிகளின் டைரக்டரும், சென்னை, எஸ். ஆர்எம். சிடி. எம். கம்பெனியின் ஏஜண்டுமான **ஸ்ரீ கே. ஆர். கருப்பன் செட்டியார்** அவர்கள் 1955 மார்ச் மாதம் 7-ந் தேதி திங்கட்கிழமை அதிகாலையில் இறைவன் திருவடி சேர்ந்தார். அவர் தொடர்பு கொண்ட கம்பெனிகள் அனைத்தும் அன்னாரின் மறைவுக்கு அநுதாபம் காட்டும் முறையில் அன்றைய தினம் மூடப்பட்டன.

"ரங்கதுரையும் நானும் இந்த மாதிரி ஒரு வீட்டில் இருப்போம். என்னுடைய குழந்தைக்கு நான் அலங்காரம் செய்து விடுவேன். 'இந்து! உன் அழகையும், என் கெட்டிக்காரத் தனத்தையும் சேர்த்து ஒன்றாக்கியதுபோல் நம் கண் மணி இருக்கிறாள்' என்று ரங்கதுரை சொல்லுவார். 'ஓ! நான் கெட்டிக்காரி இல்லை என்று சொல்கிறீர்களா?' என்று நான் சண்டை பிடித்துக் கொண்டே என் கண்மணியைத் தூக்கி அவரிடம் கொடுப்பேன். அவர் கொஞ்சுவதைப் பார்த்துப் பூரிப்பேன்." இப்படிப்பட்ட எண்ணங்களுடன் நான் மீராவைப்பார்த் தேன். அவளுடைய பட்டுப் போன்ற கன்னங்களைப் பார்த்ததும் முத்தமிட வேண்டுமென்று தோன்றியது. குனிந்து கன்னத்தில் முத்தம் கொடுத்தேன்.

மீரா சட்டென்று கண்களைத் திறந்து இரண்டு கைகளாலும் என் கழுத்தைக் கட்டிக் கொண்டாள். அப்போது அவள் முகத்தில் தோன்றிய புன்னகையின் அழகை என்னால் மறக்கவே முடியாது. "இந்துக்கா! நீ இங்கேயே இருந்து விடேன்" என்றாள்.

"எனக்கு எங்கப்பாவைப் பார்க் கணும்போலே இருக்கு, கண்ணு!"

"உங்கப்பாவையும் இங்கே வரச் சொல்லி விடலாம்."

அந்தப் பரிசுத்தமான குழந்தையின் உள்ளத்துக்கு அது முடியாது என்பதை எப்படிப் புரிந்து கொள்ள முடியும்?

ஆனால் ஒன்று தெரிந்து கொண்டேன். நம்மோடு பழகுபவர்களால் நேசிக்கப் படுகிறோம் என்ற எண்ணம் மனத்துக்கு இன்பமளிப்பது போல் எதுவுமே இன்ப மளிப்பதில்லை. குழந்தையாக இருந்தா லும், பெரியவர்களாக இருந்தாலும் நம்மை விரும்புகிறார்கள் என்று நினைக் கும்போது நெஞ்சுக்கு எவ்வளவு இத மாக இருக்கிறது?

மீராவை நான் கொஞ்சிக் கொண்டே இருந்த போது கோமளவல்லியம்மாள் வரும் சப்தம் கேட்டது. மீராவைத் தூக் கிக்கொண்டு கீழே போனேன். அவரிடம் விஷயத்தைச் சொல்லி விட்டு மீராவுக் குப் பழங்கள் கொண்டு வரச் சென்றேன்.

நான் பழங்கள் கொண்டு வருவதற் குள் மீரா தன் அம்மாவிடம் நான் அழுததைப் பற்றிச் சொல்லியிருக்கிறாள் போலிருக்கிறது.

என்னைப் பார்த்ததும் கோமளவல்லி அம்மாள், "என்ன இந்துமதி! அம்மாவை நினைத்துக் கொண்டு ரொம்ப அழு தாயாமே? என்னை உன் அம்மாவாக நினைத்துக் கொள், அம்மா! இனிமேல் இப்படியெல்லாம் அழக்கூடாது. சமர்த் தாக இருக்கணும், தெரியறதா?" என் றார். அப்படிச் சொன்னவர், பின்னால் என்னை எவ்வளவு கேவலமாக நடத்தி னார்? மனித இயல்பே பச்சோந்தி சுபாவ முடையது போலும்!

அன்றிரவு முழுதும் எனக்குத் தூக் கமே வரவில்லை. தவிப்பாக இருந்தது. அப்பாவின் நினைவு ரொம்ப வந்தது. என்னுடைய உண்மைத் தந்தை காசி லிங்கத்தைப் பற்றிக்கூட நினைவு வந்தது. ஆகா! அவர் மாத்திரம் என் அன்னையைச் சரியாகக் கவனித்துக் கொண்டிருந்திருந் தால் இப்படி அவள் இறந்து போயிருப் பாளா? காசிலிங்கத்தின் பேரில் எனக்கு அளவிலாத கோபம் வந்தது. உடனேயே பரிதாப உணர்ச்சியும் தோன்றிற்று. அவர்தான் என்ன செய்வார்? அவர் எப்பேர்ப்பட்ட கஷ்டங்களில் சிக்கியிருந் தாரோ? அதையெல்லாம் தெரிந்து கொள்ளாமல் ஆத்திரப்படுவதில் என்ன நியாயம் இருக்கிறது? அவரே இன்னும் உயிருடன் இருக்கிறாரோ இல்லையோ, யார் கண்டார்கள்?

சுலோசனா "இந்துமதி! ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்?" என்று கேட்டாள். நான் பதில் சொல்ல வில்லை. அவள் எழுந்து வந்து கட்டிலில் என் அருகில் உட்கார்ந்து கொண்டாள். "என்ன இந்து? என் னிடம் சொல்லேன்" என்றாள்.

"ஒன்றுமில்லை, சுலோ! காரணம் தெரியாமல் வேதனையாக இருக்கிறது. அழுகை அழுகையாய் வருகிறது. ஏன் என்று எனக்கே தெரிய வில்லை."

"தெரியாமலிருக்காது, நான் கண்டு பிடித்து விடுகிறேன், பார். ஆனால் நான் கேட்கும் கேள்விகளுக்கு நீ மறைக்காமல் பதில் சொல்ல வேண்டும்."

"சரி, சொல்கிறேன்."

"சற்று முன் நீ பெருமூச்சு விட் டாயே, அப்போது என்ன நினைத்துக் கொண்டிருந்தாய்?"

"என் தாயாரைப் பற்றியும், தகப்ப னாரைப் பற்றியும் நினைத்துக் கொண் டிருந்தேன். என் தந்தை ஒழுங்காக இருந்து என் அன்னையைச் சரியாகப் பாதுகாத்திருந்தால் இப்படி இறந்து போயிருப்பாளா என்று எண்ணினேன்."

"சரி. உன் தாயாரைப் பற்றி ஏன் நினைவு வந்தது?"

"நல்ல கேள்வி? மத்தியானம் மீரா காயம் பட்டுக் கொண்டு வந்து 'அம்மா

எங்கே?' என்று கேட்டாள். எனக்கு எங்கம்மாவின் நினைவு வந்தது. எனக்கு ஏதேனும் கஷ்டம் வந்தால் நான் யாரைத் தேடுவது என்று நினைத்தேன்."

"நான் சொல்லட்டுமா? உனக்கு உன் எதிர்கால வாழ்க்கையைப் பற்றிக் கவலை யாக இருக்கிறது. அம்மா இல்லை. காதலரின் சமாசாரம் தெரியவில்லை. ஆகவே நமது எதிர்காலம் என்ன ஆகும் என்று கவலைப் படுகிறாய். அவ்வளவுதான். உன்னை வளர்த்த தந்தைக்கும் வயதாகிக் கொண்டு வருகிறது."

அப்படியே சுலோவின் மடியில் தலையை வைத்துக் கொண்டு கதறி அழுது விட்டேன். சுலோ என் தலையை மெதுவாகத் தடவிக் கொண்டே சற்று நேரம் பேசாமலிருந்தாள். என் விம்மல் ஓய்ந்த பிறகு, "இந்து! இப்படி அழுவது முட்டாள்தனம். கவலைப்படுவது சரி தான். ஆனால் அதற்குச் சரியான ஏற்பாடுகள் செய்வதற்கு யோசனை செய்ய வேண்டுமே தவிர அழுவதால் என்ன லாபம்?" என்றாள்.

நான் கட்டிலின் மேல் நிமிர்ந்து உட்கார்ந்தேன். "என்ன செய்ய வேண்டும்? சொல்லேன்!" என்றேன்.

"ரமேஷைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு இங்கேயே இருந்து விடு. அவனுக்கும் உன்னைப் பிடிக்கிறதாம். உனக்கும் கவலையே இல்லை."

"சீ, என்ன சுலோ இப்படிப் பேசுகிறாய்? அவரைத் தவிர என் நெஞ்சில் வேறு யாருக்கும் இடமே கிடையாது. இதை உனக்கு எத்தனை தடவை நான் சொல்ல வேண்டும்?"

"என்ன ஆனாலும் சரி. நான் அனாதையாகப் போனாலும் சரிதான். நான் வேறு யாரையும் மணந்துகொள்ளமாட்டேன்."

சுலோவின் முகம் சற்று வாட்டமடைந்தது. ஆயினும், "இந்து உன் இலட்சியம் மிக உன்னதமானது. ஆனால் மிகவும் கடினமானது" என்றாள்.

அந்த சமயத்தில் பத்மனாபன் "சுலோசனா!" என்று பெரிதாகச் சத்தம் போட்டுக் கூப்பிட்டார். சுலோவும் நானும் கதவைத் திறந்து கொண்டு ஓடினோம். பத்மனாபனின் கையில் தந்தி ஒன்று இருந்தது.

"மந்திரமூர்த்திக்கு உடம்பு சரியில்லையாம். உடனே இந்துவை அழைத்துக் கொண்டு வரும்படி அய்யாக்குட்டி தந்தி அடித்திருக்கிறார்" என்றார்.

எனக்குத் தலை சுற்றியது. (தொடரும்)

## சிறுவர்கள் சித்திரப் போட்டி

### பரிசு ரூபாய் 20

○●○

- சிறுவர்களுக்கு இயற்கையிலேயே சித்திரங்கள் வரைவதற்கு ஆவல் இருப்பது இயல்பல்லவா? அந்த ஆவலைத் தூண்டி அவர்களை ஊக்குவிப்பதற்காகவே இந்த "சிறுவர்கள் சித்திரப் போட்டி"யை ஆரம்பித்திருக்கிறோம்.
- இந்தப் போட்டியில் பன்னிரண்டு வயதுக்கு உட்பட்ட எல்லாச் சிறுவர்களும் சிறுமிகளும் கலந்து கொள்ளலாம்.
- தங்களுக்குத் தோன்றிய எந்த உருவத்தையும், எறும்பில் இருந்து ஏரோப்ளேன் வரை, குருவியில் இருந்து கோபுரம் வரை, எதை வேணுமானாலும் வரைந்து அனுப்பலாம். வரையும் படங்களுக்கு அடியில் தங்கள் பெயரையும் வயதையும் மறந்து விடாமல் குறிப்பிட வேண்டும். படங்களைக் கறுப்பு மையில் வரைந்து அனுப்ப வேண்டும்.
- பிரசுரத்துக்கு உரிய படங்கள் ஏப்ரல் 17உ கல்கி இதழில் இருந்து ஒவ்வொரு இதழிலும் தொடர்ச்சியாகப் பிரசுரிக்கப்படும்.
- ஒவ்வொரு மாதம் முடிவிலும் அந்த மாதத்தில் வெளியான மூன்று சிறந்த படங்களுக்குப் பரிசுகள் வழங்கப்படும். முதற் பரிசு பத்து ரூபாய். அடுத்த இரண்டு பரிசுகள் ஒவ்வொன்றும் ஐந்து ரூபாய்.
- படங்கள் அனுப்பும் உறையின்மீது "சிறுவர் சித்திரப் போட்டி" என்று குறிப்பிட்டு, "ஆசிரியர், கல்கி, சென்னை — 10" என்ற விலாசத்துக்கு அனுப்ப வேண்டும்.

# பாதுகாப்புக்கும் சிக்கனத்துக்கும்

சாதாரணமாக டயர்கள் உழைப்பதைவிட பயர்ஸ்டோன் கம்-டிப்டு டயர்கள் மிகச் சிறந்த முறையில் உழைக்கின்றன! பயர்ஸ்டோன் டயர்களை பொருத்துங்கள். சாலையில் தக்க பாதுகாப்புடன் செல்லக்கூடிய இணையற்ற கவ்வும் முறைகளைக் கொண்ட பயர்ஸ்டோன் டயர்களைப் பொருத்தி விசேஷ பாதுகாப்பைப் பெறுங்கள். மேலும் நீங்கள் பணத்தை மிச்சப்படுத்துவதுடன் ஒவ்வொரு சூப்பர் கம்-டிப்டு டயரும் வேறெந்த சாதாரண டயரைக் காட்டிலும் உங்களுக்கு அதிக மைல்கள் ஓடி உழைக்கிறது.





# Firestone

## பயர்ஸ்டோன்

## சூப்பர் கம்-டிப்டு டயர்கள்

நினைவிருக்கட்டும் - ஒரு புதிய டயருக்கு ஒரு புதிய டியூப் அவசியமே




திருக்குற்றாலம்
20—7—46

நமஸ்காரம்.

சையன்ஸ் சம்பந்தமாக வார்த்தைகளுக்கென்று அலைந்து நிற்கிற காரியம் பரிதாபமான காரியமே. சூரியனுக்குத் தக்க பிரதிபதம் கிடைக்காமல் போனால் அப்பாவிகள் கண்ணை இறுக மூடிக் கொள்ளுவார்கள். பாஷை உண்டாவதற்கு முன்னும் ஆதிமனுஷன் சூரியனை இனங் கண்டு அனுபவித்துக் கொண்டான். ஏன்–நம்முடைய கண் முன்னாலேயே பக்ஷிகள் சூரியனை இனங் கண்டு கொள்ளுகின்றன. சந்தோஷத்தில் பாடவும் செய்கின்றன. கண்டு ஆனந்தித்துப் பாடுவதை அகராதிக்காக ஒத்திப் போடவில்லை, பறவைகள். நம்முடைய நிபுணர்களாய் இருந்தால் கண்ணை மூடிக் கொண்டு கப்சிப் என்று இருந்து விடுவார்கள்.

சையன்ஸ் சம்பந்தப்பட்ட உண்மைகள் தான் எத்தனை? எந்திரங்கள் தான் எத்தனை? என்ன பெயரை வைத்தாவது அவைகளை நமக்கு ஆக்கிக் கொள்ள வேண்டியதுதானே? பெயர் தெரியாது என்ற காரணத்தால்த் தின்னாமல் விடுவதா, கையிலுள்ள ஹல்வாவை?

நேருக்கு நேராகப் படித்தால்த்தான் படிப்பு. அப்படிப் படிப்பு ஏற்பட்டால் பள்ளிக்கூடத்தில்ப் பிள்ளைகள் ஒரு மணி நேரத்துக்குமேல் இருந்து தொலைக்க வேண்டாம்!

சொற்களுக்காக இவ்வளவு கஷ்டம் எல்லாம் படவேண்டுமா என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. டெக்ஸ்ட் புத்தகங்கள் சையன்ஸை சொல்லிக் கொடுத்து விடுமா? இதுவரையும் அவைகள் ஒன்றையும் சொல்லிக் கொடுக்கவில்லை என்றால் மிகையல்ல. டார்வின், எடிசன் முதலியவர்கள் நம்முடைய மாணவர்கள் மாதிரி டெக்ஸ்ட் புத்தகங்களையா கட்டிக் கொண்டு அழுதார்கள். விஷயங்களோடு நேர் நேராகக் கலந்தார்கள். அந்த சன்னிதியில் நின்றே தியானித்தார்கள். ஒளி பிறந்தது. ஒளியைப் பிறக்க ஒட்டாமல் அமிழ்த்திவிட அல்லவா செய்து விடுகின்றன டெக்ஸ்ட் புக்குகள்!

உடல்க் கூறுகள் சம்பந்தமாக மாணவர்கள் டெக்ஸ்ட் புக்குகளை வாசித்துக் கஷ்டப்பட்டு இருட்டில் மூழ்கித் திண்டாடுவதை நான் பார்த்திருக்கிறேன். நேர் நேராகக் கற்றாலோ வெகு சுலபம். தலை கண் மூக்கு என்னும் உறுப்புகள், கண் முன்னும் பிறகு மனக்கண் முன்னும், நின்று விட்டால் எந்தப் பதமும் அவைகளில் லகுவாய் ஒட்டிக் கொள்ளும். தமிழோ, வடமொழியோ, ஆங்கிலமோ, லத்தீனோ, கிரீக்கோ எந்தப் பதமும் ஒட்டிக் கொள்ளும்.

கொஞ்சம் என்னை மன்னிக்க வேண்டும்.

பள்ளிக்கூடங்களில் உள்ள ஆசிரியர்களுக்கும், ஆசிரியராய் இனி அமரப்போகும் மாணவர்களுக்கும், விஷய அனுபவம் என்பது இல்லாதபோது வார்த்தையை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்றுதான் கேட்கிறேன். பள்ளிக்கூடங்களில் சையன்ஸை கற்பிக்கவில்லை. கற்பிப்பது எல்லாம் அப்பாவி மாணவர்களுக்குள் வார்த்தைகளைத் திணிப்பதுதான்.

குருட்டுப் பள்ளிக்கூடத்தில் விண்மீன்களையும் வானவில்லின் தத்துவங்களையும் பற்றிப் பேசி என்ன செய்ய! பெயர்களையும் இலக்கணச் சூத்திரங்களையும் பாராமல்ப் படித்துக் கொட்டி விடுவார்கள் குருடர்கள்!

அதுபோலத்தானே பள்ளிக்கூடங்களில் சையன்ஸ் பாடங்கள் நடக்கின்றன. அறிவைக் கெடுக்கிற காரியம் என்றால்க் குற்றமில்லை.

இதெல்லாம் சாபமோ என்று கூடச் சொல்லத் தோன்றும்.

சரியான முறையில் சின்னஞ் சிறு விஷயமாகச் சில சையன்ஸ் அம்சங்களையாவது நேரில்ப் பார்த்து ஆராய்ந்து அனுபவித்திருந்தால் 'குழப்பம்' 'கலக்கம்' 'அந்தகாரம்' 'சாபம்' என்றெல்லாம் பேச நேர்ந்திருக்குமா?

எல்லாம் நேர்முகமான கல்வி முறை இல்லாததால்த்தான். அது வந்து விட்டால் கலைச்சொல் ஆக்கம் பயன்படும்.

டி. கே. சிதம்பரநாதன்



## மிக்க எழிலுடன் இருப்பதற்கு ஏற்ற சமயம்!

புதுமையுடன் நறுமணம் கமழும்

# அப்கான் ஸ்னோ

நாரீமணிகளின் அழகை பாதுகாத்து, மேலும் மேலும் சிறப்பிக்கச் செய்கிறது. நாள் முழுதும் சருமத்தை மிருதுவாகப் பட்டுப் போன்று சோபிக்கச் செய்கிறது.




**அப்கான் ஸ்னோ**

பாடன்வாலா

வாசனைகள், அழகுச் சாதனங்களுக்கு



DUP-A-2/3

---

FZY-34 TAM.

# உலகின்
# மகோன்னத
# சமன
# ஒளஷதம்




வெட்டுப்புண், தீப்புண், சிராய்ப்பு,

**காயங்களுக்கு மிகுந்த பாதுகாப்புள்ள மிக நிச்சயமான சிகிச்சை**

விபத்துகளை முன்னிட்டு ஜாம்-பெக்கை எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள். ஜாம்-பெக் இதமளிப்பது விஷத்தடுப்பு குணமுள்ளது காயங்களில் அபாயகரமான கிருமிகள் பரவாமல் தடுக்கும் ஜாம்-பெக் சீக்கிரத்தில் காயங்களை ஆற்றும். இதர மதிப்புவாய்ந்த ஒளஷதப் பொருள்களைத் தவிர ஜாம்-பெக்கில் க்ளோரோபில் சேர்ந்திருப்பதால் அதன் சமனகுணம். தசை நார் போஷாக்கு மற்றும் இதர பயன்களும் கிடைக்கும். ஜாம்-பெக்கை எக்ஸிமா முதலிய சரும நோய்களின் நிவாரணத்திற்கும் வலியுடன் சோர்வுற்று ரணமடைந்த கால்களுக்கு சமனமூட்டி குணமாக்கவும் மூலநோயின் வலியையும் அரிப்பையும் நிறுத்தவும் உபயோகிக்கலாம். ஜாம்-பெக்கில் மிருகக் கொழுப்பு சேரவில்லை என்பதற்கு உத்திரவாதம்.

**ஜாம்-பெக்—எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.**

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்

# ஆரோக்கிய வாழ்வு

சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 11. மத்ஸ்யாசனத்தின் பலன்

விபரீதகரணி ஆசனத்தைப் பழகுவதால் ஏற்படும் இன்னும் சில நலன்களையும் தெரிந்து கொண்டு மத்ஸ்யாசனத்தின் பலனைப் பற்றி அறிந்து கொள்வோம்.

முதுகெலும்பின் மேல் பாகம் நன்கு பின்னுக்கு வளைக்கப்படுவதால் அதன் வழியே வரும் சிம்பதெடிக் நரம்புகளும், வேகஸ் நரம்புகளும் ஊக்குவிக்கப் படுகின்றன. சிரசுக்கும் இரத்தம் போவதால் பிட்யூடரியும் ஊக்குவிக்கப்படுகிறது. அதில் வந்து முடியும் முதுகுத்தண்டின் நீரில் பிட்யூடரி ரசம் கலந்து அந்த நீரின் வேகம் அதிகப்படுகிறது. ஆக எல்லாம் சேர்ந்து உடல் முழுதுமே நல்ல ஒரு புதிய உற்சாகம் அளிப்பதுடன், நுரை ஈரலிலுள்ள காற்றுக் குழாய்கள் சற்று விரியவும் மார்க்க மேற்படுகிறது. ஆஸ்துமாக்காரர்களுக்கு வேண்டியதும் அதுதானே. அதாவது பிட்யூடரின் ஊசியும், அட்ரினேலின் ஊசியும் என்ன வேலை செய்யுமோ, அது ஓரளவு இந்த மத்ஸ்யாசனத்தினால் கிடைக்கிறது.

இந்த ஆசனம் சர்வாங்காசனம் செய்த பின்பு கட்டாயம் செய்ய வேண்டும். அதைப்போலவே விபரீதகரணி செய்த பின்பும் செய்ய வேண்டும். மேற்சொன்ன இரண்டிலும் முதுகெலும்பு முன் பக்கம் வளைக்கப்பட்டு வெகுநேரம் இருப்பதினால் இந்த மத்ஸ்யாசனம் செய்து முதுகெலும்பைப் பின்பக்கம் வளைத்தல் வேண்டும். தவிர, இந்த மத்ஸ்யாசனத்திலும் ஆஸ்துமாவுக்கு ஓரளவு நல்ல பலன் இருப்பதால் இந்த ஆசனத்தை அசட்டை செய்வதற்கில்லை.

ஆரம்பத்தில் ஒரு சில விநாடிகள்தான் சிலரால் மத்ஸ்யாசனத்தில் இருக்க முடியும். சிலருக்குப் பத்மாசனம் போட்டால் கால் வலிக்கும்; சிலருக்கு உச்சி வலிக்கும்; சிலருக்கு இடுப்பு வலிக்கும். இவைகளெல்லாம் பழகப் பழக மறைந்து விடும். முதல் வாரத்தில் முடிந்த நேரத்தில், மூன்று தடவைகள் செய்யலாம். பின் வாரம் ஒரு நிமிட வீதம் அதிகமாக்கிக் கொண்டு போகலாம். ஆக விபரீத கரணி செய்த நேரத்தில் மூன்றில் ஒரு பங்கு, நான்கில் ஒரு பங்கு நேரம் செய்யவேண்டும். சர்வாங்காசனத்துக்கும் இந்தக் கணக்குப் படியே செய்ய வேண்டும். ஐந்து நிமிட வீதம் மூன்று தடவைகளில் ஆக பதினைந்து நிமிடம் விபரீதகரணியோ, சர்வாங்காசனமோ பழகினால், மத்ஸ்யாசனமும் ஒன்றரை நிமிட வீதம் மூன்று தடவைகள் பழக வேண்டும். அதாவது ஒரு தடவை விபரீதகரணி செய்து விட்டு மத்ஸ்யாசனம் செய்ய வேண்டும். பின் மறுபடியும் விபரீதகரணி செய்துவிட்டு மத்ஸ்யாசனம் செய்ய வேண்டும். இவ்வாறே மூன்றாவது தடவையும்.

விபரீதகரணி செய்து விட்டு மத்ஸ்யாசனம் செய்தால் உடனுக்குடன் முதுகெலும்புக்குச் சிரம பரிகாரம் உண்டாகும். மேற்கொண்டு விபரீதகரணியைப் பழகவும் உற்சாக முண்டாகும்.

** ** **

சிலருக்கு மத்ஸ்யாசனத்தைப் பழகும்போது இருமல் வந்து தொந்தரவு செய்யும். சுத்தப் பிராணவாயு நுரை ஈரலுக்குள்ளே தாராளமாய் நுழையவும் காற்றுக் குழாய்களின் சுவர்களில் அடைந்துள்ள சளி அறுபடுகின்றது. அந்தச் சளியை வெளியேற்றவே இருமல் இயற்கையாய் உண்டாகிறது. அவ்வாறு இருமல் வந்தால் அல்லது வரும்போல் இருந்தால் உடனே ஆசனத்தைக் கலைத்து அதாவது திருப்பியுள்ள தலையை நிமிர்த்திச் சாதாரணமாய்க் காலை மடித்தபடியே முதுகைக் கீழே தாழ்த்திப் படுத்தவாறே சில நிமிடம் அல்லது வேண்டிய நேரம் இருந்து பின் மத்ஸ்யாசனம் செய்யலாம்.

பொதுவாய் ஆஸ்துமாக்காரர்களுக்கு ஆசனங்களைப் பழகத் துவங்கினதும் சற்று இருமல் அதிகமாகிச் சளி அதிகமாய் வெளிவரும். இவ்வாறு முதல் வாரம்தான் இருக்கும். சிலருக்கு இரண்டாவது வாரமும் இருப்பதுண்டு. பின் சளி குறைந்து இதமாய் இருக்கும். இம்மாதிரி சமயங்களில் முன்புவிட இருமலும், சளியும் அதிகமாய் இருக்கின்றதே என்று சிலர் பயந்து விடுவார்கள். பயப்பட வேண்டிய பிரமேயமே கிடையாது. தைரியமுடனும், பொறுமையுடனும் இடையிடையில் வேண்டிய ஓய்வு எடுத்துக் கொண்டு பழகி வந்தால் சில நாட்களில் அவர்களே திருப்திப் படும்படியான அபிவிருத்தியைக் காண்பார்கள்.

தமிழ் அறிந்தவர்கள் நம் பாரதியை அறியாதார் யாரும் இருக்கவே மாட்டார்கள். அவர்கள் எதைப் பாடினார்களோ, சொன்னார்களோ அதைச் செயலிலும் காட்டினவர், மற்றவர்களுக்கும் அவருக்குமுள்ள பெரும் வித்தியாசம் அதுவே. இக் காலத்தில் ஹரிஜனங்களை எல்லா இடத்துக்கும் தடை சொல்லாமல் விடவேண்டும் என்ற சட்டமே உண்டு. அக்காலத்தில் தீண்டாமை எவ்வளவு கடுமையானது என்று சுமார் முப்பது, நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்களே அறிவர். ஆனால் பாரதியார் தீண்டாமையை ஒழிக்க வேண்டும் என்றார். எல்லோரும் ஓர் இனம் என்றார்; அதை நடை முறையிலும் நடத்திக் காண்பித்தார். கீழ்க்கண்ட கடிதம் வரைந்த ஸ்ரீ கனகலிங்கம் என்பவர் ஒரு ஹரிஜன். பாரதியார் அவரை அக் காலத்திலேயே வீட்டில் வைத்து ஆதரித்தார். சம பந்தி போஜனமும் நடத்தியிருக்கிறார். ஸ்ரீ கனகலிங்கம் அவர்கள் பாரதியாருடன் நெருங்கிப் பழகியவர்; அவருக்கு வயது 65. அவர் வரைந்துள்ள கடிதத்தைக் கண்டாலே நேயர்களுக்கு மேலும் ஆசனங்களின் பேரில் உறுதியான நம்பிக்கை உண்டாகும்.

“ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி அவர்கள் ஆற்றி வரும் பணியை ‘கல்கி’ பத்திரிகை மூலம் வாசித்துப் பார்த்த வகையால், அவரைக் காண அவர் பங்களாவுக்குச் சென்றிருந்தேன். அப்போது காலை ஒன்பது மணி இருக்கும். என்னை அன்புடன் வரவேற்று அமரும்படி சொன்னார். சற்று நேரம் பாரதியாரைப் பற்றி வார்த்தையாடிய பின்னர் “பலகாரம் சாப்பிட்டீர்களா!” என்று கேட்டார். “எல்லாம் முடித்துக் கொண்டுதான் வந்தேன். இப்போது தாகவிடாயாயிருப்பதால் காப்பி மட்டும் தந்தால் நலமாயிருக்கும்” என்றேன். “நாங்கள்

காப்பி சாப்பிடும் பழக்கமில்லை. பால், மோர், வெந்நீர் இவைகளைத்தான் அருந்துவது வழக்கம். உமக்கு மூன்றில் எது வேண்டும்!'' என்றார். ''மோர் வேண்டும்'' என்றேன். வெள்ளி டம்ளர் நிறைய ஒருவர் மோர் கொண்டு வந்து கொடுத்தார். நல்ல பசு மோரானதினால் சாப்பிடுவதற்கு ரொம்ப அருமையாக இருந்தது. எனது ஆஸ்துமா நோயையும் பொருட்படுத்தாமல் மோர் முழுவதையும் ஒரே மொட்டாக மொட்டி விட்டேன். என் தாக விடாயும் தீர்ந்தது. ''நானே இரவு புதுவைக்குப் போகிறேன்'' என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டு என் ஜாகைக்கு வந்து சேர்ந்தேன்.

மோர் சாப்பிட்டதின் காரணமாக அன்றிரவே எனக்குக் குளிர் ஜுரம் கண்டு, படாத கஷ்டப் படுத்தி விட்டது. மறு நாள் காலை இருமலும், இழுப்பும் என்னை வாட்டின. இதனால் என் பயணமும் நின்று விட்டது. என் பயணம் தடைப் பட்டுப் போனதை ஓர் கடிதம் மூலமாக ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி அவர்களுக்குத் தெரியப் படுத்தினேன். சற்று குணமடைந்த பின்னர் வீட்டுக்கு வந்து போகும்படி கடிதம் கொண்டு போன ஆள் வசம் சொல்லி அனுப்பினார். இரண்டொரு நாள் சென்று நோய் குணமானது. சொல்லி அனுப்பியபடி அவரிடம் சென்றேன். ''எதற்காக சுரம் கண்டது!'' என்று கேட்டார்.

''நான் ஆஸ்துமா நோயுடையவன். மூன்று வருட காலமாக அந்நோயால் கஷ்டப்படுகிறேன். இரவில் நல்ல நித்திரை கிடையாது. சற்று தொலை தூரம் நடந்தால் மேல் மூச்சு காணும்'' என்ற குறிப்புகளையெல்லாம் அவரிடம் விளக்கிச் சொன்னேன். ''அப்படி இருக்கும் போது எதற்காக நீங்கள் மோர் சாப்பிட வேண்டும்!'' என்று கேட்டார். ''யோசிக்காமல் செய்து விட்டேன்'' என்று கூறினேன்.

''எத்தனை வருட காலமாக இந்த நோயினால் கஷ்டப்படுகிறீர்!'' என்று கேட்டார். ''சுமார் மூன்று வருட காலமாகக் கஷ்டப்படுகிறேன்'' என்றேன். ''இப்போது தங்களுக்கு வயது என்ன!'' என்று கேட்டார். அறுபத்திரண்டு வயது நடக்கிறது என்றேன். 'மருந்து ஏதாகிலும் உட்கொண்டீரா' என்றார்.

''அநேக வைத்தியர்களிடம் சூர்ணம், பஸ்பம் முதலியவை சாப்பிட்டேன். ஆஸ்பத்திரியில் ஊசி போட்டுக் கொண்டேன். கண்டங் கத்திரிக்காயின் உலர்ந்த விதையைத் துணியில் சுருட்டிப் புகை பிடித்துப் பார்த்தேன். எல்லாம் சில நாளைக்குத் தான் குணமாகத் தெரிகிறது. பின்னர் குளிர்ச்சியான ஆகாரம் ஏதாகிலும் உட்கொண்டால் பழையபடி அந்நோய் ஆரம்பித்து விடுகிறது'' என்றேன். ''நான் சொல்லித் தரும் முறைப்படி ஆஸனத்தை அப்பியாசம் செய்து வந்தால் உங்களுக்குற்ற நோய் குணமாகும். ஆனதால் நீங்கள் வீட்டுக்குப் போய்க் காலை ஏழு மணிக்குள் ஒன்றுமே சாப்பிடாமல் வந்து சேரவும்'' என்றார்.

அவ்வண்ணமே அடுத்தநாள் காலை ஏழு மணிக்கெல்லாம் அவர் பங்களாவுக்குச் சென்றேன். ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி அவர்கள் ஓர் சிறுவனை அழைத்துத் தரையில் ஓர் ஜமக்காளத்தை விரிக்கச் சொல்லிச் சர்வாங்காசனம் செய்யும் விதத்தைக் காண்பித்துக் கொடுத்தார்.

சுமார் மூன்று மாதங்கள் வரை விடாமல் மேற்படி ஆசனத்தைச் செய்து வந்தேன். காலை வேளைகளில் ஆஸனம் போட்டு அப்பியசிக்கும் போது சொல்லவொண்ணாத கோழை வெளிவந்து கொண்டே இருந்தது. இப்போது மேற்படி ஆசனத்தால் சூரியனைக் கண்ட பனிபோல எனக்குற்ற துன்பங்கள் எல்லாம் நீங்கி நல்ல சுகத்துடன் இருந்து வருகிறேன்.

இப்போது பூசணிக்காய், சுரக்காய், பீர்க்கங்காய் முதலான கறி வகைகளையும், இரவில் மோர், தயிர், குளிர்ந்த ஜலம் முதலானதும் அருந்தி வருகிறேன். ஒன்றுமே செய்யவில்லை. அந்த நோய் எங்கு ஓடிப்போய் மறைந்ததோ, எனக்கே மிகவும் ஆச்சரியமாய் இருக்கிறது.

என் நோயைக் குணப்படுத்திய காலஞ்சென்ற ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்திக் கொள்ளுகிறேன். ஆஸ்துமா நோயினால் கஷ்டப்படும் அன்பர்கள், அவருக்குப் பின் அவருடைய தரும பத்தினி ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி குமாரஸ்வாமி அவர் விட்டுச் சென்ற பணியைத் தொடர்ந்து நடத்தி வருவதால் சிறிதும் பயப்பட வேண்டிய அவசியமில்லை.

புதுச்சேரி ரா. கனகலிங்கம்
ஹரிஜன, பாரதி பக்தன்

## பால பிருந்தாவனம்

இந்த நாட்டின் எதிர்கால மன்னர்கள் அல்லவா நம்முடைய குழந்தைகள். அவர்களைப் பொறுப்புணர்ந்த மக்களாக வளர்ப்பதைவிட சிறந்த தேசத்தொண்டு வேறென்ன இருக்கிறது? இந்த உயர்ந்த நோக்கத்துடன் ''பால பிருந்தாவனம்'' என்ற பெயரில் சென்னை காந்தி நகரில் சிறு குழந்தைகளுக்கான பள்ளிக்கூடம் ஒன்று ஆரம்பிக்கப்பட்டு நல்ல முறையில் நடந்து வருகிறது. இந்தப் பள்ளிக்கூடத்தின் உதவி நிதிக்காகப் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த சின்னஞ் சிறு குழந்தைகளைக் கொண்டே ஒரு சுதம்ப நிகழ்ச்சி நடத்தினார்கள். சென்ற மாதக் கடைசி வாரத்தில் மைலாப்பூர் சுந்தரேஸ்வரர் மண்டபத்தில் நடைபெற்ற இந்தக் கதம்ப நிகழ்ச்சிக்குச் சகோதரி சுப்புலக்ஷ்மி அம்மாள் அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பித்ததுடன் சிறு குழந்தைகளின் கதம்ப நிகழ்ச்சியைப் பாராட்டித் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்.

ஸ்ரீமதி கௌசல்யாவிடம் பரதநாட்டியம் பயின்ற குமாரி நளினியின் பரதநாட்டியம் கதம்ப நிகழ்ச்சியில் ஒரு நிகழ்ச்சியாக இருந்தது. தன்னுடைய மணியான பரதநாட்டியத்தின் மூலம் பலமுறை சபையாரின் பாராட்டைப் பெற்றாள் குமாரி நளினி.

அன்றைய தினம் நடந்த கதம்ப நிகழ்ச்சியின் சில முக்கியமான காட்சிகளை எதிர்ப் பக்கத்தில் உள்ள படங்களில் காணலாம் :

1. கதம்ப நிகழ்ச்சியில் கலந்து கொண்ட பால பிருந்தாவனத்துப் பச்சிளம் குழந்தைகள். 2. பரதநாட்டியமாடிய குமாரி நளினியைச் சகோதரி சுப்புலக்ஷ்மி அம்மாள் பாராட்டிப் பரிசு வழங்கினார். 3. குழந்தை துருவனைத் தாயார் சுநீதி ஆசீர்வதித்துக் காட்டுக்கு அனுப்புகிறார். 4. பால பிருந்தாவனத்து நிர்வாகக் குழுவினர் சகோதரி சுப்புலக்ஷ்மி அம்மாளுக்கு மாலை சூட்டி வரவேற்றனர். 5. சபையில் ஒரு தோற்றம். 6. உத்தானபாதரின் சபை.

# சமுதாயத்துடன் *நீங்களும் சுபிட்சமடைக!*

உங்கள் சேமிப்புகளை இந்திய அரசாங்கத்தின்

## *சிறு சேமிப்புத்திட்டத்தில்* முதலீடு செய்க

*அதன் மூலம்*
***இந்தியாவின் திட்டங்களுக்கும் உதவிபுரிக***

- ★ சமுதாய அபிவிருத்தித்திட்டம்
- ★ பெரிய நதிகளில் நீர்த்தேக்கத்திட்டங்கள்
- ★ சமூக சுபிட்சத்திட்டங்கள்
- ★ ரயில் மற்றும் ரஸ்தா அபிவிருத்தி

உங்கள் பணத்தை இவ்வசீகரமான
உத்தரவாதம்பெற்ற செக்யூரிடிகளில் ஏதாவதொன்றில் போடுங்கள்

| | |
|---|---|
| 12 வருட நேஷனல் ஸேவிங்ஸ் சர்டிபிகேட்டுகள் | கெடு பூர்த்தியாகும்போது ஆண்டு 1-க்கு 4·16 சத விகிதம் வட்டி பெறும். ரூ 5 முதல் ரூ. 5,000 வரை மதிப்புகளில் கிடைக்கும். தனி நபர் ரூ. 25,000 வரை வாங்கலாம். |
| 10 வருட டிரெஷரி ஸேவிங்ஸ் டிபாஸிட் சர்டிபிகேட்டுகள் | வருடாவருடம் 3½ சத விகித வட்டி பெறலாம். ரூ. 100ன் மடங்குகளாக ரூ. 25,000 வரை கிடைக்கும். தனி நபர் வாங்கக் கூடியது ரூ. 25,000 வரை. |
| 10 வருட நேஷனல் பிளான் சர்டிபிகேட்டுகள் | கெடு பூர்த்தியாகும்போது ஆண்டு 1-க்கு 4½ சத விகிதம் வட்டி கிடைக்கும். ரூ. 25, ரூ. 50, ரூ. 100 & ரூ. 500 மதிப்புகளில் கிடைக்கும். தனி நபர் வாங்கக்கூடிய அளவு ரூ. 1000 வரை. |
| போஸ்டாபீஸ் ஸேவிங்ஸ் பாங்க் அகௌண்ட்ஸ் | டிபாசிட்களின் பேரில் ரூ. 10,000 வரையுள்ள தொகைகளுக்கு 2 சத விகித வட்டியும், அதற்கு மேல் 15,000 வரையுள்ள தொகைக்கு 1½ சத விகித வட்டியுமுண்டு. |

**15 வருட ஆன்னியுடி சர்டிபிகேட்டுகள்**

| | |
|---|---|
| வெளியீடு விலைகள் ரூ. 3,500, ரூ. 7,000, ரூ. 14,000 & ரூ. 28,000. தனிநபர் உயர்ந்த பக்ஷம் ரூ. 28,000 அளவிற்கு வாங்கி வைத்துக் கொள்ளலாம். | அசல் தொகை 3½ சத விகித தொடர்வட்டி சேர்த்து சமமான மாதாந்தரத் தவணைகளில் 15 வருட காலத்தில் திருப்பியளிக்கப்படுகிறது. |

*உங்களுக்கு உத்தரவாதமாக ஒரு*
**சிறந்த லாபம் வருமானவரி கழிவின்றி கிடைக்கிறது.**

[illegible]

# இந்தியாவின் எதிர்காலத்தில் முதலீடு செய்க.

AC 6501



# கொள்ளைக்காரன் தங்கை

டி.எம். வாசுதேவன்

இன்ஸ்பெக்டர் சண்முகசுந்தரம் அந்த வனாந்திரப் பிரதேசத்துக்கு மாற்றலாகி இரண்டு வாரங்கள் தானாகின்றன. அந்த ஊரைச் சுற்றி நான்கு புறங்களிலும் அடர்ந்த காடுகளும், முட் புதர்களும் மண்டிக் கிடந்தன. போதாததற்கு, அந்த ஊருக்கு மிக அருகில் இரு மலைகள் ஒன்று சேரும் கணவாய் ஒன்று இருந்தது. அந்த இரு மலைகளிலும் நீண்டு வளர்ந்த பலவகை மரங்களும், மூங்கில், வேல் முதலிய முள் மரங்களும் பல படியாகச் செழித்து வளர்ந்து கவனிப்பாரின்றிக் கிடந்தன. ஜன சஞ்சாரமற்ற அந்த அடவியில் புலி, சிறுத்தை, ஓநாய் முதலிய கொடிய மிருகங்கள் நிர்ப்பயமாய்ச் சஞ்சரித்துக் கொண்டிருந்தன.

இப்படிப்பட்ட பயங்கரப் பிரதேசத்துக்கு அவன் மாற்றப்பட்டதற்குக் காரணம் அவனிடம் இருந்த அசாதாரணமான திறமைதான்.

அந்த வட்டாரத்தில் பயங்கர வழிப்பறிகள் நடத்தி வந்த கொடுக்கூர் ஆறுமுகம் என்ற கொள்ளைக்காரனைப் பிடிக்க வேண்டிய பிரச்னை எழுந்தபோது, போலீஸ் இலாகாவில் சண்முக சுந்தரத்தைத்தான் ஏக மனதாய்ப் பிரேரேபித்தார்கள். அவனுக்கு நேர் மேலதிகாரியான சூப்பரிண்டெண்ட் சுப்ரமணிய முதலியார் சண்முக சுந்தரத்தை அருகில் அழைத்து அன்போடு தட்டிக் கொடுத்து, ''சண்முகம், உன்மீது அபாரமான நம்பிக்கை வைத்துத்தான் உன்னை அங்கே மாற்ற ஏற்பாடு செய்திருக்கிறேன். இன்னும் இரண்டு மாதங்களில் வேலையிலிருந்து ஓய்வு பெற வேண்டியவன் நான். அடுத்தாற்போல் இந்தப் பதவியை உனக்குத்தான் சிபார்சு செய்துவைக்கப் போகிறேன். பின்னும் என்னுடைய நெடு நாளைய விருப்பப்படி என் ஒரே மகள் லீலாவையும் உனக்கு மணஞ் செய்து வைத்துவிட உத்தேசித்துள்ளேன். உன்னுடைய வீரச் செயலை அவளுக்குக் காட்டுவதற்கும் இது நல்ல வாய்ப்பு ஆகும். இதைக் கவனத்தில் வைத்துக் கொள். நீ வெற்றி

பெற்றால் இவைகளெல்லாவற்றையும் ஒருங்கே அடையலாம். இல்லாவிட்டால் என் முகத்தில் கூட விழிக்க முடியாது. போய் வா" என்று விடைகொடுத்து அனுப்பினார்.

சண்முகசுந்தரம் அந்த அழகிய முகத்தை எண்ணிப் பார்த்தான். அவன் உடம்பு புல்லரித்தது. அடுத்துத் தனக்குக் கிடைக்க இருக்கும் உயர் பதவியை நினைத்தான். உள்ளம் பூரித்தது. 'வெற்றி, இன்றேல் வீர சொர்க்கம்' என்று உறுதி கொண்டான். மேலதிகாரிகளிடம் தன் ஒப்புதலை அறிவித்து விட்டு உரிய காலத்தில் அந்தப் பிரதேசத்துக்கு வந்து பதவியை ஏற்றுக் கொண்டான். அதற்குப் பின்னர்தான், அவன் நினைத்தது போல் அந்த வேலை அவ்வளவு அற்பமானதல்ல என்பதைத் தெரிந்து கொள்ள முடிந்தது.

** ** **

கொடுக்கூர் ஆறுமுகம், மகா மாயாஜாலக் கள்ளன். இதற்கு முன் அவனைப் பிடிக்க முயன்ற இன்ஸ்பெக்டர் சிலர் முடமாயினர்; சிலர் கண் இழந்தனர். சிலர் அவமானப்படுத்தப் பட்டனர். ஓரிருவர் உயிரையும் இழந்தனர். இதையெல்லாம் அறிந்தபோது அவனுக்குத் தன் முயற்சியில் சிறிது மலைப்புத் தோன்றத்தான் செய்தது. ஆனால், லீலாவின் மதிமுகமும், உயர் பதவியும் சோர்ந்த உள்ளத்தைத் தூண்டி விடும் மருந்தாக அமைந்தன. கொடுக்கூர் ஆறுமுகத்தைப் பற்றிய விவரங்களைச் சேகரித்துக் கொண்டும், அவனைக் கைப்பிடியாய்ப் பிடித்துக் கொண்டு போவதற்கான திட்டங்களை வகுத்துக் கொண்டும் வந்தான்.



அவனுடைய ஜாகை, ஊரை விட்டுச் சிறிது தள்ளியிருந்த குன்றின் அடிவாரத்தில் அமைந்திருந்தது. அந்தத் தன்னந் தனியான இல்லத்தில் இருக்க எவரும் அஞ்சுவர். பகற்போதிலேயே அங்கு மயான அமைதி நிலவும். இரவு நேரத்திலோ சொல்ல வேண்டியதில்லை. அப்பயங்கரமான ஜாகையில் அவனும், அவனுடைய வயது சென்ற தாயாரும் வசித்து வந்தனர். அவனுடைய தந்தை அவன் பிறந்தவுடனேயே இறந்து விட்டதாகவும், அவனுடைய அருமைத் தாயார்தான் தன் ஏக புத்திரனைப் படிக்க வைத்து இந்த நிலைக்குக் கொணர்ந்தவள் என்றும் அவன் கேள்விப் பட்டிருக்கிறான். அந்த ஒப்பற்ற தெய்வத்தின்மீது அவனுக்கு எல்லையில்லாத பக்தியும் பிரியமும் இருந்தன. அதேபோல் அத்தெய்வமும் அந்த அருமந்த புத்திரன்மீது தன் உயிரையே ஈடாக வைத்திருந்தது.

** ** **

அன்று இரவு சுமார் பத்து மணியிருக்கும். எங்கும் ஒரே அந்தகாரமாயிருந்தது. தூரத்தில் எங்கேயோ பேரிடி முழங்கியது. தொடர்ந்து நரிகளின் ஊளையும், சிறுத்தைகளின் சீறலும் கேட்டன. சண்முகசுந்தரம் கொடுக்கூர் ஆறுமுகத்தைப் பற்றிப் புலன் விசாரிக்கப் பக்கத்து கிராமத்துக்குச் சென்றிருந்தவன் இன்னும் திரும்பவில்லை. அவன் தாயார் மட்டும் தனித்திருந்தாள். அவளுக்குப் பெரும் பயமாயிருந்தது. கைகளைக் கூப்பிக் கடவுளைத் தொழுது விட்டுப் படுக்கையில் சாய்ந்தாள். உறக்கம் வரவில்லை. ஏதோ இனம் புரியாத வேதனை! வாழ்க்கைப் பாதையில் தான் கடந்து வந்திருக்கும் மைல் கற்களைத் திரும்பிப் பார்த்தாள். நினைவு வெள்ளத்தில் நீந்தியது நெஞ்சம். ஆ! அந்த வெள்ளச் சுழலில் அத்திருப்பம் அவள் இதயத்தில் முள் எனப் பாய்ந்தது.

அவளுக்கு மணமான வரலாறு விசித்திரமானது. அவள் அப்பா அந்த ஊரில் ஒரு மிராசுதார். ஜானகி நல்ல அழகி. ஒன்பதாம் வகுப்பு வரையில் படித்திருந்தாள். யுக்த வயது வந்ததும் அவளுக்கு மணம் செய்விக்க முயன்றார் தந்தை. அவள் துரதிர்ஷ்டமோ, அல்லது அவளைப் பெண் பார்க்க வந்தவர்களின் துரதிர்ஷ்டமோ அவர்கள் அனைவரும் பலவித இன்னல்களுக்கு உள்ளாயினர். முதலில் அவளைப் பெண் பார்க்க வந்திருந்த ராமதுரை என்ற வாலிபன், பெண் தனக்குப் பிடித்திருக்கிறதென்றும், கல்யாணத்துக்கு நாள் குறிப்பிட்டுத் தெரிவிக்கும்படியும் சொல்லி விட்டு வெளியே வந்தான். அவ்வளவுதான்; எங்கிருந்தோ சீறி வந்த நாகம் ஒன்று அவனைத் தீண்டியது. விஷம் விரைவில் பரவத் தலை சாய்ந்து அங்கேயே உயிர் நீத்தான் அவன். தொடர்ந்து வந்த இன்னொரு வாலிபன் லாரி விபத்துக்குப் பலியானான். மற்றொருவன் மரண தண்டனைக்கு ஆளானான். இப்படியாக அவளுக்கெனத் தேர்ந்தெடுக்கப் பட்ட வாலிபர்கள் விபத்துக்கு ஆளாகவே, துரதிர்ஷ்டக்காரியான அவளை மணந்து கொள்ள அதற்குப் பின் எவரும் முன் வரவில்லை. மிராசுதார் மனங் குன்றி நீங்காத கவலையினால் பீடிக்கப்பட்டு மயங்கிக் கிடந்தார். ஏழையோ பாழையோ எவனோ வந்து கைப் பிடித்து அவளை மணந்து கொண்டால் போதும் என்றாகி விட்டது அவருக்கு.

அந்தச் சமயம் பார்த்து வந்தான் ராமசாமி. அவன் பரம ஏழை; படிப்பும் குறை; ஒரு காப்பி ஹோட்டலில் பரிமாறுபவனாக இருந்து வந்தான்.

தன் பெண்ணின் ஜாதக விசேஷத்தைப் பற்றி ஜானகியின் அப்பாவே அவனிடம் சொன்னார். ராமசாமி சிரித்தான். "அன்று என் தலையில் எழுதியவன் அழித்து எழுதப் போவதில்லை. நான் எதற்கும் தயார். விதி என்னை என்ன செய்தாலும் கவலையில்லை. இந்த அழகியை மணக்க என்னுயிரையே தியாகம் செய்ய நேரிட்டாலும் அது எனக்கு இன்பமானதே" என்று உறுதியாக அறிவித்தான். அடுத்து அவர்கள் இருவருக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தது.

## பிரயாணத்தில் குறைந்ததொரு நேரந்தான் . . . அதிக நேரம் உங்கள் குடும்பத்துடன் கழிக்கலாம்.

## ஏயர்-இந்தியா இன்டர்நேஷனல் மார்க்கமாக ஏழே மணி நேரத்தில்

# சிங்கப்பூர்



## பறந்து செல்லலாம்

## சென்னையிலிருந்து வெள்ளிக்கிழமைதோறும் ஸெர்விஸ்

- நான்கு என்ஜின்களுள்ள கான்ஸ்டலேஷனில் மிக சௌகரியமாகவும் பாதுகாப்புடனும் பிரயாணம் செய்யலாம்.
- எவ்வித அசௌகரியமோ தொந்தரவோ இல்லாமல் சிறிது மணிநேரப் பிரயாணம் தான்.
- உங்கள் தேவைகளை கவனிக்க ஹோஸ்டெஸ் மற்றும் பர்ஸர்கள் எப்பொழுதும் ஆஜருண்டு.
- இரவு எங்கும் தங்காது.
- நல்ல ருசியான சைவ போஜனம் அல்லது மாமிச போஜனம்—இலவசம்.
- 12 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு விசேஷ ஏற்பாடுகள், பாதிக் கட்டணம்.
- சிங்கப்பூரிலிருந்து மலாய் நாடுகளுக்கு சௌகரியமான ரயில், விமானத் தொடர்பு வசதிகள்.

புறப்பாடு மதராஸ் வெள்ளிக்கிழமை இரவு 10-45 மணி
வருகை சிங்கப்பூர் சனிக்கிழமை காலை 7-45 மணி
(லோக்கல் டைம்)

### கட்டணம்

| | முதல் வகுப்பு | டூரிஸ்ட் வகுப்பு |
|---|---|---|
| மதராஸ்-சிங்கப்பூர் (ஒற்றைப் பிரயாணம்) | ரூ. 854/- | ரூ. 660/- |

- திரும்பும் பிரயாணத்திற்கு ஒற்றைப் பிரயாண கட்டணத்தின்பேரில் 20% தள்ளுபடியுண்டு; ரிட்டர்ன் டிக்கட் ஒரு வருஷகாலத்திற்கு செல்லுபடியாகும்.
- கூட எடுத்துச் செல்லாத சாமான்களுக்கு விசேஷச் சலுகைக் கட்டணங்கள்.

ஏர்-இந்தியா இன்டர்நேஷனல் மார்க்கமாக சௌகரியத்துடன் பிரயாணம் செய்யுங்கள்.

புக்கிங் மற்றும் இதர பிரயாண விவரங்களுக்கு நேரிலோ கடித மூலமோ விசாரியுங்கள்:



## ஏயர்-இந்தியா இன்டர்நேஷனல்

கனி மான்ஷன், 35, மவுண்ட்ரோட், மதராஸ்-2
டெலிபோன்: 86194

அல்லது இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பொரேஷன்

திருச்சி, திருவனந்தபுரம், கொச்சி, கோயமுத்தூர், பெங்களூர்

AII. 1195




அஜீரணம் வாழ்வையே துன்பமயமாக்கி விடுகிறது; வயதுக்கு மிஞ்சிய வயோதிகத் தோற்றமும் உண்டாக்கிவிடுகிறது. மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் துரிதமான நிவாரணம் தருகிறது. ஏனெனில் அது ஒரு அபூர்வச் சிறப்புடைய பௌடர்; சாஸ்திரீகமான தயாரிப்புத் திட்டப்படி பக்குவமான பொருட்சேர்க்கையுள்ள இந்தப் பௌடர் மூன்று வேலைகள் செய்கிறது—மிருதுவான இரைப்பைக்குச் சமனமூட்டுகிறது; வயிற்றுப் புளிப்பை மாற்றுகிறது; வலியையும் நிறுத்துகிறது.

மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் என்று பெயரைச் சொல்லிக் கேளுங்கள். ஒவ்வொரு பாக்கெட்டிலும் Alex C. Maclean "அலெக்ஸ் ஸி. மக்ளீன்" என்ற உண்மைக் கையெழுத்தும் தத்ரூபமாக அச்சிடப் பட்டுள்ளதா என்று நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள்.




# மக்ளீன்

## பிராண்ட் ஸ்டமக் பவுடர்

**எப்பொழுதும் கையில் ஒரு பாட்டில் வைத்திருங்கள்.**

### ஒரு டோஸ்

அஜீரணத்தாலேற்படும் வயிற்று வலி, உடற்பருமன், இருதய எரிச்சல், வயிற்று மந்தம், வாந்தி இவற்றை சடுதியில் குணப்படுத்தும்.

MSY. 9-TAM

உலக நியதிப்படி விவாகம் முடிந்த பின்னர் சில நாட்கள் தம்பதிகளிருவரும் அன்புடன் இணைந்து இன்பமாக இருந்தனர். தன் துரதிர்ஷ்ட ஜாதகத்தை நம்பி, அவன் உயிரைப் பெரிதாக எண்ணாமல் தன்னை மணக்க முன் வந்த ராமசாமியின் மீது அவளுக்குப் பரிவும் பாசமும் மலையத்தனையாக இருந்து வந்தது.

ஆனால் நாளாக நாளாக அப் பாசம் உருக் குலைந்தது. அவளுக்கு அவன் மீது வெறுப்பு தோன்ற ஆரம்பித்தது. தான் அவசரப்பட்டு அவனை மணந்து கொண்டதாகவும், அப்போதே அந்த வரன் பிடிக்க வில்லை யென்று சொல்லிச் சிறிது காத்திருந்தால் நல்ல படிப்பும் பண்பும் உள்ள ஒருவனை மணாளனாக அடைந்திருக்க முடியும் என்றும் கருதலானாள். ஏமாற்றமும் வெறுப்பும் அவள் நெஞ்சில் நஞ்செனவூறின. விஷ வார்த்தைகளைச் சிந்தி ராமசாமியைச் சதா தூஷித்தாள். இழிவுபடுத்தினாள்.

மானம் உள்ள எந்த ஆண் பிள்ளையும் அந்த வார்த்தைகளைச் சற்றும் பொறுக்க மாட்டான். ராமசாமி அவ்வளவையும் தாங்கிக் கொண்டான். கோழை யல்ல அவன். தான் ஒரு குழந்தைக்குத் தகப்பனாகப் போகிறோம் என்ற பெருமிதமே அவனை அவ்வளவையும் பொறுத்துக் கொள்ளச் செய்தது. நாளடைவில் ஜானகிக்குக் குழந்தை பிறந்தது. அக் குழந்தை செக்கச் செவேல் என்று சுருட்டை மயிரும் அகன்ற கரு விழிகளுமாகக் கொழு கொழு வென்றிருந்தது. அக்குழந்தை அவன் பாசத்தை வளைத்துப் பிடித்தது. சதா காலமும் அக் குழந்தையைச் சுற்றிச் சுற்றி வந்து மகிழ்ந்து கொண்டிருந்தான் ராமசாமி.



அன்று அவளுடைய பள்ளித் தோழி பத்மாவும் அவள் கணவனும் ஜானகியைப் பார்க்க வந்திருந்தார்கள். அவனையும் அவள் கணவனையும் மாறி மாறிப் பார்த்தாள் ஜானகி. அடுத்துள்ள கிராமத்தின் ஜமீன்தார் அவன் என்று பத்மா பெருமையோடு அறிமுகப்படுத்திய போது, ஓட்டல் தொழிலாளியின் வாழ்க்கையோடு இணைந்து விட்ட தன் வாழ்க்கையைக் குத்திக் காட்டுவது போலிருந்தது அவளுக்கு. அவளுடைய கணவனின் நாகரிகப் பாங்கையும், கம்பீரத்தையும் பார்க்கப் பார்க்க ஏமாற்றம் அவள் இதயத்தை எரியும் நெருப்பாக்கியது. "தன்னைவிட அந்தஸ்திலும் அழகிலும் பன்மடங்கு குறைந்த பத்மாவுக்கு இத்துணை அதிர்ஷ்டமா! ராமசாமி தன் வாழ்வில் குறுக்கிட்டிராவிட்டால் அதைவிடப் பெரிய அதிர்ஷ்டம் தனக்கும் கிடைத்திருக்கும்" என்று மனம் புழுங்கினாள். அந்தத் தாபம் உத்தமன் ராமசாமியின் மீது வர்மமாகத் திரும்பியது.

எங்கெங்கோ வெளியே சுற்றித் திரிந்து விட்டு அப்பொழுது தான் வீடு திரும்பிய ராமசாமி குழந்தையைத் தூக்கத் தொட்டிலின் அருகே ஆவலுடன் குனிந்தான். அவன் கையை வெடுக்கென்று உதறித் தள்ளினாள் ஜானகி. அவள் உதடுகள் துடித்தன. "சீ, தரித்திரம்! குழந்தையைத் தொடாதே. உன் தரித்திரமும் மௌடீகமும் குழந்தையையும் தொத்திக் கொள்ளப் போகிறது!"—என்று எரிந்து விழுந்தாள் அவள்.

அமைதியாகச் சிரித்தான் ராமசாமி. "இது உண்மைதானா! அல்லது விளையாடுகிறாயா!"—என்றான் நிதானத்தை இழக்காமல்.

"நிஜமேதான். என் வாழ்வையே அழித்துச் சூன்யமாக்கி விட்டாய் நீ. பசுமை பொலிந்த என் இளமையைப் பாலைவனமாக்கிய பாவி நீ. நீ வஞ்சகன். மகா பாவி" என்று சொல்லிப் பெரிதாக அழ ஆரம்பித்து விட்டாள்.

"அழாதே, ஜானகி! உன் சுக வாழ்க்கைக்கு இனி நான் பாரமாயிருக்க மாட்டேன். உன் ஆசைக் குழந்தைக்கு இந்த அஷ்ட தரித்திரன் தந்தை என்று நீ சொல்லவும் வேண்டாம், இதோ போகிறேன்" என்று கூறி விட்டுச் சரேலென்று வெளியே போய் விட்டான்.

ஒரு பகலாயிற்று, இரவும் போயிற்று. மறு நாளும் தொடங்கியது. இப்படி மூன்று நாட்களாயின. "தன்னை விட்டால் அவனுக்கு வேறு வழி யேது! பிணங்கிக் கொண்டு போய் இரண்டு தினங்கள் கழித்து வெட்கமில்லாமல் தன்னிடமே திரும்பி வந்து விடுவான்" என்று எண்ணியிருந்த அவளது திமிர் பிடித்த மனக் கோட்டையில் மண் மாரி பொழிந்தது. வாரங்கள், மாதங்கள் கடந்து சென்றன. அவன் திரும்பி வரவே இல்லை. அவனைத் தேடிப் பிடிக்க என்னென்னவோ செய்து பார்த்தாள் அவளும். ஏதும் பயனில்லை.

"அவன் ஒரு ரோஷக்காரன். தன் கடு சொல் தாங்காது அவன் தற்கொலை செய்து கொண்டு இறந்திருக்கத்தான் வேண்டும். இதைத் தவிர வேறு வழி இல்லை" என்று அவள் தீர்மானித்தாள். தன்னுடைய மூர்க்கமான போக்குக்கு இப்போது அவள் பச்சாதாபப் பட்டாள். கண்ணீர் விட்டாள். கதறினாள்.

ராமசாமி மறைந்து எத்தனையோ ஆண்டுகளாகி விட்டன. இதோ அவள் குழந்தை சண்முகசுந்தரம் விடுவிடு என்று வளர்ந்து, வாசித்து, காளைப் பருவம் எய்தி, தன் முயற்சியால் உயர்ந்து போலீஸ் இன்ஸ்பெக்டராக வேலை பார்க்கிறான். அவன் தாய் ஜானகி அவனுடைய அறிவிலும் ஆற்றலிலும் மகிழ்ந்து தன் மறைந்து போன கணவனையும் ஓரளவு மறந்து சந்தோஷத்துடனிருந்தாள். எனினும் ஒவ்வோர் இரவு அவளுக்குப் பெரும் வேதனையாகி விடும். அந்தக் காலத்தில் தான் அவனிடம் நடந்துகொண்ட முறையை எண்ணிக் கண்ணீர் விட்டுக் கலங்குவாள்.

வெளியே தடதடவென்று கதவு தட்டப்படும் சத்தம் கேட்டு எழுந்து சென்று கதவைத் திறந்தாள். அவள் எதிர்பார்த்தது போலவே அவள் தனயன் குதூகலத்துடன் நின்று கொண்டிருந்தான். "அம்மா, புலன் விசாரணை நல்ல பலனை

அளித்தது. அந்தப் பக்காத் திருடனைப் பற்றிய எல்லா விவரமும் வெளியாகி யிருக்கிறது. இதில் ஆச்சரியம் என்ன வென்றால் அவனுடைய நண்பனும் ஒருவன். பகைமை காரணமாக இப்போது அவனே அத்திருடனைப் பிடித்துக் கொடுக்க முன் வந்திருக்கிறான்" என்றான் மகிழ்ச்சியுடன்.

தாயின் உள்ளத்தில் புதல்வனின் குதூகலம் இன்ப அலையைப் பொங்க வைத்தது. எனினும் அது பூர்ணமாக இராமல் எங்கோ ஒரு மூலையில் ஒரு சூன்யம் தட்டுப்படுவது போல் உணர்ந்தாள்.

** ** **

அமாவாசையன்று தான் அந்தப் பயங்கரக் கள்ளன் கொடுக்கூர் ஆறுமுகம் தன் ஜாகையில் நாள் முழுவதும் தங்கியிருப்பது வழக்கம் என்று அவனுடைய மலைவாசி நண்பன் சொல்லியிருந்தான். ஆகவே அன்று விசேஷமான போலீசுக்கு ஏற்பாடு செய்திருந்தான் சண்முக சுந்தரம்.

குறிப்பிட்டபடி குறித்த நேரத்தில் அந்த மலைவாசியும் இன்ஸ்பெக்டர் சண்முக சுந்தரத்துடன் வந்து சேர்ந்து கொண்டான். இருவரும் கைகளில் ரிவால்வரைப் பிடித்துக் கொண்டு வெகு ஜாக்கிரதையாக மலைமீது ஏறினார்கள். மலை மீதிருந்த பெரிய பாறைகளையும், பள்ளங்களையும், அநாயாசமாகத் தாண்டிக் குதித்தான் அந்த மலைவாசி. நீர்ச் சுனைகளையும் மலையருவிகளையும் அலட்சியமாகக் கடந்தான். அவனைக் கண்ட துஷ்ட மிருகங்கள் கூடப் பயந்து ஓடின. மலைப் பாம்பின் முதுகில் ஏறினான். சிறுத்தையின் சிரசைச் சிறு துரும்பென மிதித்துத் தள்ளினான். சண்முகசுந்தரத்தின் உடல் நடுங்கியது. அவன் கால்கள் பின்னிக் கொண்டு பின்வாங்கின. இதற்காக அவனை விட்டுவிடவில்லை அந்த மலைவாசி. நடுங்கிய அவனைக் கைப்பிடியாக இரும்புக் குறடெனப் பற்றிக் கரகர வென்று இழுத்துச் சென்றான், தன்னுடன்.

கடைசியில் அவர்கள் ஒரு குகையின்முன் வந்து நின்றார்கள். அந்தக் குகையின் வாயிலை மூடியிருந்த ஒரு பெரிய பாறையை அப்புறப்படுத்தினான் அந்த மலைவாசி. அது நகர்ந்து வழிவிட்டது. "இன்ஸ்பெக்டர் ஐயா, இதோ இதுதான் நாம் வந்து தொண்டிருக்கும் கொடுக்கூர் ஆறுமுகத்தின் குகை. முதலில் நான் உள்ளே போய் அவன் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்துக் குரல் கொடுக்கிறேன். அப்புறம் நீங்கள் வந்து சேருங்கள். இருவரும் சேர்ந்து ஆளைப்பிடித்துவிடலாம்" என்று கூறி விட்டு உள்ளே பாய்ந்தான் நிர்ப்பயமாக.

** ** **

நாள் அந்தப் பயங்கரக் கொள்ளைக்காரனின் முன் நிற்கிறோம் என்று உணர்ந்த போது அவன் தேகம் ஓரளவு அச்சத்தால் நடுக்கமுற்றது. அடுத்து அவனுள்ளத்தில் பல்வேறு உணர்ச்சிகள். லீலாவின் அழகிய முகமும் உயர் பதவியின் குறுகுறுப்பும் உள்ளத்துக்கு உற்சாகத்தை ஊட்டின. கடமை உணர்ச்சி முழு பலத்தோடு அவனை முடுக்கி விட்டது. ரிவால்வரை உறுதியாகப் பிடித்துக் கொண்டான். எந்த க்ஷணத்திலும் சுடுவதற்கு அதைத் தயாராக்கிக் கொண்டான்.

தூரத்தில் ஒரு மலைப் பாம்பு காட்டுப் பறவையொன்றைப் பிடித்துத் தின்னத் தொடங்கியது. அதே சமயம் உள்ளிருந்து மலைவாசியின் குரல் கேட்டது. "இன்ஸ்பெக்டர்! ஓடி வா, ஓடி வா!" என்று அலறியது அது.

குரல் வந்த வழியே ஓடினான், ஓடிக் கொண்டேயிருந்தான். கடைசியில் அந்த குகையின் ஒரு மூலைக்கு வந்து நின்றான். அங்கு ஒரு உயர்ந்த

பாறை மீதிருந்த ஆசனத்தின் மீது அவனுக்கு ஏற்கெனவே அறிமுகமான அந்த மலைவாசி உட்கார்ந்திருந்தான், கம்பீரமாக.

"எங்கே அந்தக் கொள்ளைக்காரன்!"—சண்முக சுந்தரத்தின் கேள்வி துப்பாக்கிக் குண்டின் வேகத்தை விட விரைவுடன் வெடித்தது.

கலகல வென்று சிரித்தான் அவன். இரு கைகளையும் நீட்டி "வா என் மகனே, என் தவப் புதல்வனே வா!" என்றழைத்து, சண்முக சுந்தரத்தை அணைத்துக் கொள்ள யத்தனித்தான்.

சண்முக சுந்தரத்தின் உடல் வெட வெடவென நடுங்கியது. எனினும் தைரியத்தைக் கைவிடவில்லை. அவன், "நில் அப்படியே! நீதான் அந்தப் பயங்கரத் திருடன். உன்னைச் சுடுகிறேன் பார். உண்மையைச் சொல்லி விடு" என்று சீறினான்.

"மகனே, நிதானமாகக் கேள். நான் இப்போது விஷம் சாப்பிட்டிருக்கிறேன். இன்னும் சில நிமிஷங்களேதான் நான் உயிரோடிருப்பேன். அதற்கு முன் சில விஷயங்கள் சொல்லுகிறேன், அவற்றைக் கேள்.

"உன்னுடைய தந்தைதான் நான். பயங்கர கொள்ளைக்காரனான கொடுக்கூர் ஆறுமுகமாக மாறியதும் நானேதான். அந்தக் காலத்தில் விதி பயங்கரமாக விளையாடியது உன் அன்னையிடமும் என்னிடமும். என்னைத் தரித்திரன் என்றாள் அவள்; மௌடீகன் என்று எள்ளி நகைத்தாள். நான் இத்தகையவனாக மாறக் காரணமாயிருந்தவள் அவளே......வாழ்க்கையில் வெறுப்புற்று ஓடி வந்த எனக்கு எதுவும் பிடிக்க வில்லை. பணம்! பணம்!! உன் தாய்க்கு வேண்டியது அது ஒன்றேதான். அதே குறிக்கோளுடன் அலைந்த போது எனக்குத் தோன்றியது இந்த ஒரே வழிதான். அதன் பயனாகக் கொள்ளைக்காரனாக மாறினேன். இன்று நான் லக்ஷாதிபதி, பணத்திலே, வைடூரியங்களின் மத்தியிலே புரளும் மகா பிரபு நான்! மக்கள் கண்டு நடுங்கும் மன்னாதி மன்னனாக இருக்கிறேன். ஆனால் எத்துணைப் பணக்காரனாக இருந்த போதும், கொள்ளைக்காரனாக மாறி விட்ட எனக்குச் சமூகத்தின் முன் தோன்ற நியாயம் ஏது! எனினும் உன் மீது கொண்ட பாசத்தையும் பரிவையும் அகற்ற முடியாமல் தவித்தேன். பல இடங்களில் மறைமுகமாக உன்னைக் கண்டு மகிழ்ந்து வந்தேன். நீ லீலாவை மணந்து கொள்ள விரும்புவதையும், உயர் பதவிக்கும் கௌரவத்துக்கும் ஆசைப்படுவதையும் அறிந்தேன். அந்த நிமிஷமே என்னையே தியாக பலி பீடத்தில் சமர்ப்பிக்க முடிவு செய்து கொண்டேன். என் கடமை முடிந்தது" என்றான்.

"அப்பா!" என்று கதறிக் கட்டிக் கொண்டான் சண்முக சுந்தரம். தனயனின் தழுவலில் இன்பத்தோடு புன்முறுவல் பூக்க உயிர் நீத்தான் கொடுக்கூர் ஆறுமுகம் என்ற ராமசாமி.

* * *

பிரசித்தி பெற்ற கொள்ளைக்காரனான கொடுக்கூர் ஆறுமுகத்தை அழித்து ஒழித்ததற்காகப் பத்திரிகைகளும், பொதுமக்களும், மேலதிகாரிகளும் சண்முக சுந்தரத்தைப் பெரிதும் பாராட்டினர். லீலா தன் ஆசை நிறைந்த கண்களால் அவனைப் பார்த்துத் தன் உள்ளக் குளிர்ச்சியைச் சொல்லாமற் சொன்னாள். அடுத்த மாதமே அவன் உயர் பதவிக்கு மாற்றப்பட்டான்.

இந்த மதிப்பையும் பாராட்டையும் பெறுவதற்கு அவன் என்ன விலை கொடுத்திருக்கிறான் என்பதை யார் அறிவார்! ★★★

# விதியின் கொடுமை

✧ ராமப்ரியா ✧

**ப**ங்குனி மாதத்து வெய்யில் அனலாய்த் தகித்துக் கொண்டிருந்தது. அந்தப் பட படக்கும் வெய்யிலைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் ஒரு சட்டையைப் போட்டுக் கொண்டு வெளியில் கிளம்பினார் கைலாசம்.

"இந்த வெய்யிலில் போக வேண்டுமா! நாளைக்குத்தானே சாமான்கள் வேண்டும். சாயங்கால மாகக்கூட போகலாமே!" என்று மெதுவாகச் சொன்னாள் அவர் மனைவி அகிலாண்டம்.

"மனம் கொதிக்கும் கொதிப்பை விடவா இந்த வெய்யிலின் சூடு உடம்பில் படப் போகிறது! இன்னும் எத்தனை வருஷங்களுக்கு அவளுக்கு இப்படி நாம் செய்யப் போகிறோமோ! சரி! நான் போய் வருகிறேன்!" என்று தழதழத்த குரலில் சொல்லிக் கொண்டே வெளியே போனார் கைலாசம்.

அவர் கூடவே வாசல்வரை சென்ற அகிலாண்டம், "சிவப்புப் புடவையாக வாங்கி வாருங்கள்! அதுதான் அவளுக்கு ரொம்பப் பிடித்தமான நிறம்" என்று கண்களில் நீர் வழியச் சொன்னாள். கைலாசம் வாய் பேசாமல் சரி யென்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டி விட்டு வேகமாகச் சென்றார்.

கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே சென்று ஊஞ்சலில் படுத்தாள் அகிலாண்டம். தன்னைச் சுற்றிலும் ஒரே தனிமை! என்ன பயங்கரத் தனிமை! இந்தத் திக்கற்ற தனிமையை உணர்ந்த நெஞ்சம் திடுக்கிடத்தான் செய்தது. வயது சென்ற நாளில் கணவனும் மனைவியுமாகப் பெருந் துக்கச் சுமையைத் தாங்க வேண்டிய நிலைமை வந்து விட்டது. இரண்டு வருஷங்களுக்கு முன்னால் அவர்கள் பெண் லக்ஷ்மி, இருபது வயது வளர்ந்த புள்ளி மானைப் பறி கொடுத்தவர்களுக்கு மன நிம்மதி எங்கே யிருந்து வரும்! இனி, சாகும் வரை இந்த சோகம் அவர்களை அரித்துப் பிடுங்கிக் கொண்டுதான் இருக்கும். அகிலாண்டத்துக்கு லக்ஷ்மியைத் தவிர இன்னும் இரண்டு பெண்களும் ஒரு பிள்ளையும் இருக்கிறார்கள். இருந்தும் என்ன! ஒவ்வொருவரும் ஒவ்வொரு மூலையில் இருந்தார்கள். பிள்ளை எங்கேயோ வடக்கே ஒரு மூலையில் ராணுவத்தில் இருந்தான். பெண்களும், ஒருத்தி தென் கோடியிலும், இன்னொருத்தி வட கோடியிலும் இருக்கிறார்கள். ஆகக்கூடி பெண்களையும் பிள்ளையையும் பெற்றும் சுக துக்கத்தை அனுபவிக்க அவளுக்கு அவரும், அவருக்கு அவளும் என்று ஆகி விட்டது. நாளைக்குத்தான் லக்ஷ்மி அமரத்துவம் அடைந்து ஒரு வருஷம் பூர்த்தியாகி, இரண்டாவது வருஷ முதல் நாள்!

இதை நினைக்கும் பொழுதே அகிலாண்டத்தின் வயிற்றில் ஏதோ இனம் தெரியாமல் சங்கடம் செய்தது. கண்கள் இருண்டன. தலையைக் 'கிர்' என்று சுற்றியது. பயங்கர நினைவுத் திரைகள், இருள் வளையங்கள் போல் ஒன்றிலிருந்து ஒன்றாய்ப் புறப்பட்டு ஒன்றுடன் ஒன்று கோத்துக் கொண்டு அவளை வளைத்துப் பின்னிக் கொண்டன.

**பெ**ண்களுக்கும் பிள்ளைக்கும் கலியாணம் ஆகி விட்டது. லக்ஷ்மி மட்டும் படிக்கத்தான் விரும்பினாள். அவள் இஷ்டப்படியே கல்லூரியில் படிக்க வைத்தார்கள். கல்லூரிப் படிப்பு முடிந்தவுடன் பெற்றோர்களின் பேச்சைக்கூட கேட்காமல் ஒரு கம்பெனியில் டைப்பிஸ்டாகச் சேர்ந்தாள். கலியாணமே பண்ணிக் கொள்ளப் போவதில்லை என்றாள். பிள்ளை மாதிரி தாய் தந்தையரைக் கடைசி வரையில் தானே காப்பாற்றப் போவதாகப் பெருமையுடன் சொன்னாள். அந்தக் குறுகிய நாட்களில் அகிலாண்டமும் கைலாசமும் பூரித்துப் போனார்கள். லக்ஷ்மி காரியாலயத்துக்குப் போகும் போதுதான் அவள் முகத்தில் எத்தனை பெருமை! பெண் காரியாலயத்துக்குச் செல்லும் அழகை ஆனந்தத்தோடு ரசிப்பார்கள் பெற்றோர்கள்.

அப்பா, அம்மா, என்று நிமிஷத்துக்கு ஒரு முறை கூப்பிட்டுக் கொண்டு காரியாலயத்திலிருந்து வந்தவுடன் மத்தியானம் நடந்த விஷயம் முழுதும் அவர்களிடம் ஒப்புவிப்பாள் லக்ஷ்மி. எப்பொழுதும் வீடு கலகலவென்று நிறைந்து இருக்கும்.



லக்ஷ்மி வேலைக்குச் சென்ற புதிதில் அகிலாண்டத்துக்கு நிமோனியா ஜுரம் வந்து விட்டது. அப்போது லக்ஷ்மி துடித்த துடிப்பு! அப்பப்பா! டாக்டரைத்தான் எப்படிச் சிரமப்படுத்தி விட்டாள்! "டாக்டர்! அம்மாவை இந்த ஒரு முறை காப்பாற்றி விடுங்கள், டாக்டர்! நான் சம்பாதித்து அம்மாவுக்கு எவ்வளவோ செய்ய வேண்டுமே!

அம்மா பிழைப்பார்களா ! உண்மையைச் சொல்லுங்களேன், டாக்டர்!'' என்று கதறினள்.

டாக்டர் சிரித்தவாறு, ''இதென்ன லக்ஷ்மி! படித்த பெண் இப்படி அதைரியப் படுகிருய்! இந்த நாளில் ஒரு வியாதிக்கும் பயம் கிடையாது. எல்லாவற்றிற்கும் தான் மருந்து கண்டு பிடித்து விட்டார்களே. நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே !'' என்று தேறுதல் கூறினர்.

அகிலாண்டமும் ஒரு வாரத்தில் எழுந்து உட்கார்ந்து விட்டாள்.

லக்ஷ்மி முதல் மாதம் சம்பளம் வாங்கிக்கொண்டு வந்தாள் ! ''அம்மா ! இந்த மாதச் சம்பளம் உங்களுக்கு ! ஒரு புடவையும், நாலு ரவிக்கையும் வாங்கிவிடுவது என்று தீர்மானித்து விட்டேன். மீதி பணத்துக்கு உங்களுக்கு என்ன வேண்டுமோ அதை வாங்கிக் கொள்ள வேண்டியது. கிளம்புங்கள் கடைக்கு !'' என்று அகிலாண்டத்தைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு கடைக்குக் கிளம்பி விட்டாள் லக்ஷ்மி.

அகிலாண்டம் என்ன சொல்லியும் லக்ஷ்மி கேட்கவில்லை. அவள் இஷ்டப்படியே கடைக்குப் போய் வந்தாள். அன்று இரவு சாப்பாடு ஆன பின் அகிலாண்டத்தின் மடியில் தலையை வைத்துப் படுத்துக் கொண்டாள் லக்ஷ்மி. இரு கைகளாலும் தாயாரின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள். ''அம்மா இன்றைக்கு எனக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது, தெரியுமா! நான் வேலை செய்து வாங்கிய சம்பளத்தில் உங்களுக்கு எல்லாம் வாங்கி, கொடுத்தது ரொம்பவும் பெருமையாக இருக்கிறது ! உங்களுக்குத் திருப்திதானே அம்மா !'' என்று மலர்ந்த முகத்துடன் கேட்டாள்.

அகிலாண்டம் அவள் கன்னத்தைத் தடவியபடியே ''நீதானடி கண்ணே எனக்குப் பிள்ளை ! இன்றைக்கு என் மனம் பூரித்து விட்டது!'' என்ருள் உணர்ச்சியோடு.



தாயும் மகளும் அன்னியோன்னியமாய்க் குலாவும் காட்சியை ஆனந்தத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார், நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்த கைலாசம். சட்டென்று கைலாசத்தினிடம் மான்போலத் துள்ளியோடினாள் லக்ஷ்மி.

''அப்பா ! அடுத்த மாதச் சம்பளம் உங்களுக்கு !'' என்று சொல்லி அவர் நாற்காலியைச் சுற்றிச் சுற்றிச் சிட்டுக் குருவிபோல வந்தாள்.

லக்ஷ்மி கூறியபடியே இரண்டாவது மாதச் சம்பளம் வாங்கியதும் அப்பாவைக் கடைக்கு அழைத்துக் கொண்டு போய் அவருக்கு உடைகளும் உயர்ந்த செருப்பு முதலியவைகளும் கட்டாயப்படுத்தி வாங்கி வந்தாள்.

''உனக்கு இதுவரை உன் சம்பளத்தில் ஒன்றுமே வாங்கிக் கொள்ளவில்லையே !'' என்று ஏக காலத்தில் கேட்டனர் தாய்தந்தையர்.

லக்ஷ்மி கலகலவென்று சிரித்தாள். ''இத்தனை நாளாக நான் சம்பாதித்தா வாழ்ந்து கொண்டிருந்தேன் ! எனக்கு நீங்கள் இருக்கும்பொழுது என்ன குறை ! அடுத்த மாதச் சம்பளத்தில் உங்கள் திருப்திக்காக வேண்டுமானல் நான் செலவழித்துக் கொள்கிறேன் !'' என்ருள் அடக்கமாக.

அவளைப் பெற்ற பயனை அன்றே அடைந்து விட்டதாக எண்ணிப் பெருமிதம் கொண்டார்கள் அகிலாண்டமும் கைலாசமும். லக்ஷ்மியினல் தாங்கள் சுகமாகக் கவலையின்றி இருக்கப் போவதாகக் கனவு கண்டார்கள் அப் பேதையர்கள் !

மூன்றும் மாதம் சம்பளம் வாங்கிக் கொண்டு வந்தாள் லக்ஷ்மி. அப்படியே அகிலாண்டத்தினிடம் பணத்தை எண்ணிக் கொடுத்தாள். ''இந்த மாதம் உனக்கு ஏதாவது வாங்கிக்கொள், லக்ஷ்மி! புடவையாக வேண்டுமா ! அல்லது இன்னும் கொஞ்சம்கூட போட்டுக் கழுத்துக்குத் தங்கச் சங்கிலியாவது அல்லது மாங்காய் மாலையாவது......!'' என்று சொல்லிக் கொண்டே போன தாயாரை இடைமறித்து, ''அம்மா! என்னத்தையாவது வாங்கிக் கொண்டால் போகிறது. எனக்குத் தலைவலி மண்டையைப் பிளக்கிறது. ஒருகப் காப்பி முதலில் கொடுங்கள். பணத்தை ஜாக்கிரதையாகப் பெட்டியில் வையுங்கள். நீங்களும் அப்பாவும் விரும்புகிறபடி இந்தப் பணம் என்னுடைய செலவுக்குத்தான். நான் சற்றுப் படுத்துக் கொள்கிறேன்!'' என்று சொல்லிவிட்டுக் கட்டிலில் தானே படுக்கையைப் போட்டுக் கொண்டு படுத்துக் கொண்டாள்.

அகிலாண்டம் பதறிப்போய்ச் சூடாகக் காப்பி கொண்டு வந்து லக்ஷ்மிக்குக் கொடுத்து விட்டு உடம்பைத் தொட்டுப் பார்த்தாள். உடம்பு நெருப்பாகக் கொதித்துக் கொண்டிருந்தது.

''ஐயோ ! லக்ஷ்மி ! உடம்பு கொதிக்கிறதே ! நான் என்னடி செய்வேன் !'' என்று சொல்லிக் கொண்டே பரபரப்புடன் ஓடி வாசலில் உட்கார்ந்திருந்த கணவரிடம் உடனே டாக்டரைக் கூப்பிட்டுக் கொண்டு வரச் சொன்னள்.

டாக்டர் வந்து பார்த்தார். ஒன்றுமில்லை, சாதாரண ஜுரம்தான் என்று சொல்லி மருந்து கொடுத்துச் சென்ருர். அகிலாண்டமும் கைலாசமும் லக்ஷ்மியின் படுக்கையை விட்டு அகலாமல் அருகிலேயே உட்கார்ந்திருந்தார்கள்.

''நீ சாப்பிடப் போ, அம்மா ! அப்பாவுக்கும் சாதம் போடு. எனக்கென்ன வந்து விட்டது ! மனுஷாளுக்கு ஜுரம் வராதா ! ஏன் இப்படிப் பயப்படுகிறீர்கள் !'' என்று தைரியம் சொன்னாள்.

தலைவலி, தலைவலி என்று இரவு முழுவதும் அரற்றினள் லக்ஷ்மி. மறு நாள் காலையில் காப்பி கொண்டு வந்து கொடுக்கும்பொழுது லக்ஷ்மி

ஒரு தினுசாக அகிலாண்டத்தைப் பார்த்தாள். "ஏன் அம்மா, இப்படிப் பார்க்கிறாய்! உடம்பு என்ன செய்கிறது! இந்தா, காப்பியைக் குடி" என்றாள் அகிலாண்டம்.

லக்ஷ்மி படுக்கையிலிருந்து வெடுக்கென்றெழுந்து உட்கார்ந்தாள். காப்பியை வாங்கிக் கொண்டு ஒரு மாதிரியாகப் பார்த்தாள்.

"ஏனம்மா இப்படிப் பார்க்கிறாய்! காப்பியை நான் வாயில் விடட்டுமா!" என்று கேட்டாள். லக்ஷ்மி எங்கோ பார்த்தபடி காப்பி டம்ளரை அப்படியே கீழே போட்டுவிட்டுத் 'தொப்'பென்று படுக்கையில் விழுந்து விட்டாள்.

லக்ஷ்மியை வந்து சோதித்த டாக்டரின் முகத்தில் களையே இல்லை. "என்ன டாக்டர்! எப்படி இருக்கிறது!" என்று ஏககாலத்தில் பதறியபடி கேட்டார்கள் கைலாசமும் அகிலாண்டமும்.

"இது வீட்டில் வைத்துக் கொள்ளக் கூடிய வியாதி இல்லை. உடனே ஆஸ்பத்திரியில் சேர்த்து விடவேண்டும்!" என்றார் டாக்டர்.

வீடு அந்தக்கணமே களையிழந்து விட்டது. அகிலாண்டத்தின் அழுகுரலிடையில் ஆம்புலன்ஸ் வண்டியில் நர்ஸுகளின் உதவியோடு, லக்ஷ்மி ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டாள்.

ஆஸ்பத்திரிக்கு வந்த பிறகு லக்ஷ்மிக்கு நினைவு தவறிப் போய் விட்டது. தன் நினைவே இல்லை. மலர மலர எங்கோ விழித்தாள். டாக்டர்கள் என்னென்னவோ பெரிய பெரிய வியாதிகளின் பெயரைச் சொல்லி அவர்களுக்குள்ளேயே அதாக இருக்கலாமோ, இதாக இருக்கலாமோ என்றெல்லாம் சர்ச்சை செய்தார்கள். அந்த சர்ச்சையில் லக்ஷ்மியின் உடலை ஊசிக்கு மேல் ஊசி குத்திப் புண்ணாக்கினதுதான் மிச்சமாயிற்று.

முதல் தேதியன்று சம்பளம் வாங்கிக் கொண்டு புள்ளிமான் போல் துள்ளியோடி வந்த இளம் பெண், ஒயிலாக நடந்து தெருவில் கண்ட தன் தோழிகளிடமெல்லாம் மோகனப் புன்னகையோடு அரட்டையடித்துக் கொண்டு வந்த அழகுத் தெய்வம், இரண்டாம் தேதியன்று சாயங்காலம் உயிரற்ற வெறும் உடலாக ஆம்புலன்ஸில் வீட்டில் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

விதி, விதி யென்கிறார்களே! அந்த விதி இத்தனை கொடுமைப் படுத்தும் தன்மை உடையதா! வயதான தாய் தந்தையர்கள் கதறி அலறுவதில் அந்த விதிக்கு உண்மையாகவே இன்பம் உண்டா! கைலாசம் உடனே இந்த அசுபச் செய்தியைத் தந்தி மூலமாகத் தம்முடைய மற்ற பெண்களுக்கும் பிள்ளைக்கும் தெரிவித்தார்.

அம்மாவையும் அப்பாவையும் காப்பாற்றப் போகிறேன் என்று பெருமையோடு பேசிய குழந்தை இன்று அவர்கள் இருவரும் ஆவிபோகும் வண்ணம் கதறுவதைக் கேட்க முடியாத மீளா நித்திரையில் இருக்கிறாள்.

லக்ஷ்மியின் திடீர் மரணம் ஊரெல்லாம் காட்டுத் தீ போல் பரவி விட்டது. அவளுடைய கல்லூரித் தோழிகளும் காரியாலயத்தில் கூட வேலை பார்த்தவர்களும் வீட்டில் வந்து நிரம்பி விட்டார்கள். ஊரே கலகலத்து விட்டது. "நேற்று காரியாலயத்துக்குப் போகும்போது நான் பார்த்தேன். நம்பவே முடியவில்லையே!" என்றார் ஒருவர். "பயந்த கோளாறாக இருக்குமோ! இல்லாவிட்டால் இப்படித் திடீரென்று உயிரை அமுக்காது!" என்று அடித்துப் பேசினார் இன்னொரு பத்தாம் பசலி. "ஸார்! இந்தப் பெண் அந்தத் தெரு முக்கு திரும்பினால் கடிகாரத்தைப் பார்க்காமல் பத்து நாற்பத்தைந்து என்று சொல்லலாம். அதேமாதிரி சாயங்காலம் திரும்பி வரும்பொழுதும் ஐந்து நாற்பத்தைந்துதான். அத்தனை சரியாக இருக்கும்" என்று சொல்லி வருந்தினார் இன்னொருவர்.

அகிலாண்டம் என்ன சொல்வதென்று தெரியாமல் உயிரற்ற லக்ஷ்மியின் உடலின்மீது விழுந்து கதறிக் கொண்டிருந்தாள். அவளை ஒருவராலும் கட்டிப் பிடிக்கவே முடியவில்லை.

கைலாசம் பிரமை பிடித்த மாதிரி வாசலில் வெறிக்கப் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருப்பார். திடீரென்று ஆவேசம் வந்த மாதிரி உள்ளே ஓடி வந்து, "என் கண்ணே! லக்ஷ்மி! ஏனம்மா என்னை விட்டுப் போனாய்!" என்று கதறிய வண்ணம் அவள் உடலின்மீது விழுந்து விடுவார்.

லக்ஷ்மியின் சகோதரிகளும், சகோதரனும் வந்து சேரும் வரை லக்ஷ்மியின் உடலை வைத்திருந்தார்கள். அவர்களும் கதறினார்கள். முட்டிக் கொண்டார்கள். தாய் தந்தையரைத் தேற்றினார்கள். ரத்தபாசமில்லையா! யார் அழுதென்ன! அவள் இனி பேசவே மாட்டாள்.

"'இந்த மாதச் சம்பளம் என்னுடைய செலவுக்குத்தான்!' என்றாளே குழந்தை! அவளுடைய இறுதிச் செலவுக்கா உபயோகப்பட வேண்டும்!"

எந்தத் தெருவழியாகப் பாவாடையும் சட்டையுமாகப் பள்ளிக்குச் சென்றாளோ அந்த தெருவின் வழியாக அவள் உடல் சென்றது.

கடைசியாக எந்தத் தெரு வழியாக நேற்று காரியாலயத்திலிருந்து கும்மாளமாக வீடு திரும்பினாளோ அதே தெருவழியாக லக்ஷ்மி திரும்பி வராத இடத்துக்குச் சென்று கொண்டிருந்தாள். பகவானே! வயது காலத்தில் பெற்றோர்களுக்கு அனுகூலமாய் அவர்களைத் தாங்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்த குழந்தையை அவர்களிடமிருந்து பிரித்து விட்டாயே!

நாலு நாட்கள் சேர்ந்தாற்போல் அகிலாண்டம் அன்ன ஆகாரம் செய்யாமல் இருந்தாள். வெறி உடலைக் குறையாடி விட்டது.

வெகு நாட்களுக்கு அகிலாண்டத்தைத் தனியாய் விடாமல் பெரிய பெண்களும் பிள்ளையும் அவளைக் காத்து வந்தார்கள்.

எத்தனை நாள்தான் அகிலாண்டத்தின் பெண்களும் பிள்ளையும் அவளிடம் இருப்பார்கள்! அவரவர்களுக்கும் குடும்பம் இருக்கிறதே! தாயாரைத் தங்களிடம் வந்து கொஞ்ச நாள் இருக்கும்படி வேண்டிக் கொண்டார்கள். அகிலாண்டம் ஒருவரிடமும் போக மறுத்துவிட்டாள்.

கைலாசமும் அகிலாண்டமும் தனிமையில் வாழத் தொடங்கினார்கள். தனிமையில் இருக்க வேண்டுமென்று விதி இருப்பதால்தானே லக்ஷ்மி அவர்களைப் பிரிந்து போனாள்!

* * *

கதவு தட்டும் சத்தம் கேட்டு அகிலாண்டம் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு கனவுலகத்திலிருந்து விழித்துக் கொண்டு கதவைத் திறந்தாள்.

"இந்தா! நாளைக்கு அவளுக்குப் பிடித்த காய்கறிகள் வேண்டியது வாங்கி வந்திருக்கிறேன். பூ வாங்கி யிருக்கிறேன். நீ சொன்னபடி சிவப்புப் புடவையும் இதோ பார்! என் கண்மணிக்கு நான் இப்படிச் செய்யவேண்டுமென்று விதி யிருக்கிறது பார்!" என்று படபடப்புடன் சொல்லியவாறு வாங்கி வந்த சாமான்களைத் தொப்பென்று கீழே வைத்துவிட்டுத் தலையில் கையை வைத்துக் கொண்டு அப்படியே கீழே உட்கார்ந்து விட்டார்!

விதியின் கொடுமைக்கு யார் என்ன தேறுதல் சொல்ல முடியும்! இந்த உலகில் அவர்கள் இருவருக்கும் இனி மன நிம்மதியே கிடையாதா!

# நீங்கள் இன்று புரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?



நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க, உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட்
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.




ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.





குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்

நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.





மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.

## புரோடெக்ஸ் ஆல் பர்பஸ் டாய்லட் பவுடர்

கால்கேட்டின் புதிய
சிறந்த தயாரிப்பு

# சக்கரவர்த்தித் திருமகன்

**ராஜாஜி**

## 58. வாலி வதம்

**மா**லை நெருங்கி வந்த வேளை. மறுபடியும் சுக்ரீவன் பெருங் கர்ஜனை செய்து வாலியை யுத்தத்துக்கு அறை கூவி அழைத்தான்.

சந்தோஷமாகப் படுத்திருந்த வாலி திடுக்கிட்டான். இதென்னவென்று அவனுக்கு விளங்கவில்லை. பயம் என்று சொல்லுவதற்கில்லை. ஆயினும் கொஞ்சம் நிறம் மாறினான். பிறகு ரோஷம் கொண்டான்.

தோல்வியடைந்து அடிபட்டுப் பயந்தோடின தம்பி மறுபடியும் இம்மாதிரி வந்து கர்ஜிக்கிறானே என்று பொறுக்க முடியாத கோபத்தோடு எழுந்து உடனே அவனை ஹதம் செய்துவிடத் தீர்மானித்துப் புறப்பட்டான். தரையை அவன் காலால் மிதித்தது பூமியைப் பிளப்பது போல் இருந்தது.

“வேண்டாம்! இன்று வேண்டாம்! நாளை பார்த்துக் கொள்ளலாம்” என்றாள் தாரை, அவனைப் பிரியமாகத் தடுத்து.

வாலியின் பட்ட மகிஷி மகா புத்திசாலியான தாரை புருஷனை ஆலிங்கனம் செய்து கொண்டு, “வேண்டாம், யுத்தத்துக்கு அவசரமில்லை. நாளைக் காலையில் சென்று சத்துருவை அழித்து விடலாம். சரியாக யோசிக்காமல் இப்போது வெளியேறித் தம்பியுடன் யுத்தம் செய்வது சரியென்று எனக்குத் தோன்றவில்லை. ஏதோ எனக்குப் பயமாக இருக்கிறது. இதில் மோசம் இருக்கிறது. அடிபட்டு அவமானப்பட்டு உயிர் தப்பினால் போதும் என்று ஓடி ஒளிந்து கொண்ட தம்பி என்ன தைரியம் கொண்டு இன்றே மறுபடியும் வந்து இவ்வளவு அட்டகாசம் செய்கிறான்? இதைப் பற்றித் தீர ஆலோசிக்க வேண்டும். பிரியநாதா! இப்போது போக வேண்டாம். ஏதோ மோசமும் அபாயமும் நான் இதில் காண்கிறேன். என் பேச்சைப் புறக்கணிக்க வேண்டாம். அவனுடைய பேச்சையும் கர்ஜனையையும் கவனித்தால் ஏதோ பெரும் சகாயம் சேர்த்துக் கொண்டு நிற்கிறான் என்பது நிச்சயமாகிறது. இல்லாவிடில் இவ்வளவு கர்வம், இவ்வளவு பிடிவாதம் ஏன்? பலமான சகாயத்தைச் சம்பாதித்திருக்கிறான் என்பது உறுதி. அந்தச் சகாயத்தின் பலத்தை நன்றாய்ப் பரீட்சை செய்து தைரியமடைந்தே வந்திருக்கிறான் உங்கள் தம்பி என்பது நன்றாகக் காண்கிறது. இதில் சந்தேகமில்லை. நம் பிரிய குமாரன் அங்கதனுடைய நலனைக் கருதுவீர்களாக. நான் சொல்லும் பேச்சைத் தட்டாதீர்கள். ஏதோ பிதற்றுகிறேன் என்று எண்ண வேண்டாம். சாரர்களால் அங்கதன் அறிந்து என்னிடம் சொன்னதைச் சொல்லுகிறேன். அயோத்தியிலிருந்து மகா வீரனான ஒரு ராஜகுமாரன் நம் பிரதேசத்துக்கு வந்திருக்கிறானாம். அவனை எல்லாரும் உத்தம தர்மவானாகவும் வீரனாகவும் மதிக்கிறார்களாம். அவனுடைய சிநேகத்தை உங்கள் தம்பி அடைந்து விட்டானாம். இதனால் அவனுடைய பலமும் தைரியமும் வளர்ந்து போயிற்று. உங்கள் தம்பியும் நல்லவன், வீரன், அவனை ஏன் விரோதிக்க வேண்டும்? அவனை விட நமக்கு யார் நெருங்கிய பந்து? அவன் உங்களுக்குப் பக்தியோடு பணி செய்து பராக்கிரமமான துணையாவான். சுக்ரீவனை நாம் மறுபடி அழைத்து விரோதத்தை மறந்து விட்டு ஒன்றாகப் போவதே நலம். அருமை நாதனே, என் பேச்சைப் புறக்கணிக்க வேண்டாம்” என்றாள்.

வாலிக்கு இந்தப் பேச்சு பிடிக்கவேயில்லை. கடல் பொங்குவது போல் எழுந்த கோபத்தில் அவன் தன் மனைவியின் பேச்சில் நியாயம் காணவில்லை. கால பாசத்தால் இழுக்கப் பட்டுச் செல்பவன் எப்படிக் காண்பான்? தாரையின்

பெயருக்குத் தகுந்த முக லக்ஷணம் கொண்ட மனைவி சொன்ன புத்தி மதி வாலிக்குச் சம்மதப்படவில்லை.

“என்ன சொல்லுகிறாய்! சத்துருவான தம்பி செய்யும் கர்ஜனையை நான் எப்படிப் பொறுப்பேன்? ஏன் பொறுப்பேன், அழகியே! எதிரி யுத்தத்துக்கு அழைக்கும் போது வீரன் போகாமலிருக்க முடியுமா? அதைவிட உயிரை விடுவதே மேலாகும். இந்த அற்பன் போடும் கர்ஜனை காதில் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க என்னால் சாத்தியமில்லை. நீ ராமனைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவன் தர்மத்தை அறிந்தவன், பாபத்துக்குப் பயந்தவன். அவன் அநியாய காரியத்தில் இறங்கமாட்டான். நீ என்னைத் தடுக்காதே, திரும்பிப் போ! சுக்ரீவனை நான் கொல்ல மாட்டேன். அவன் கர்வத்தை அடக்கி விடுவேன், அவ்வளவே. அந்த துராத்மாவின் அட்டகாசத்தைப் பார்த்துச் சகிக்க முடியவில்லை. உனக்கு என் மேலிருக்கும் பிரியத்தால் சொல்ல வேண்டியதைச் சொன்னாய். தம்பியின் கொழுப்பை அடக்கி ஓட்டி விட்டு வெற்றியுடன் திரும்பி வருவேன். பயப்பட வேண்டாம். மங்கல மொழி சொல்லி என்னை அனுப்பு, தடுக்க வேண்டாம்” என்றான்.

கவி வால்மீகி வாலியை எவ்வளவு உயர்த்தி வைத்துச் சித்திரித்திருக்கிறார்!



தாரையும் கண்களில் நீர் ததும்பிய வண்ணம் வாலியை வலம் செய்து மங்களம் சொல்லி விட்டு நல்லதாக முடிய வேண்டும் என்று வேண்டிக் கொண்டு கவலையுடன் அந்தப்புரம் திரும்பிப் போனாள். தாரையையும் அவளுடைய தோழிகளையும் அனுப்பி விட்டு வாலி புற்றிலிருந்து பாம்பு

ஓறிக் கொண்டு வெளி வருவதுபோல் சுக்ரீவனைத் தேடிச் சென்றான்.

மகா ரோஷத்துடன் போன வாலி தம்பி தைரியமாக தேஜஸ் வீசிக்கொண்டு நிற்பதைப் பார்த்தான். பார்த்ததும் கச்சையை இழுத்துக் கட்டிப் பாய்ந் தான். சுக்ரீவனும் வாலியை நோக்கி வேகமாய் வந்தான்.

"உயிரில் ஆசை வைத்திருப்பாயாயின் ஓடிப் போ. இந்த முஷ்டிக்கு உன் உயிரை தத்தம் செய்யாதே" என்று கர்ஜித்தான் வாலி.

சுக்ரீவனும் கோபமாக மறுமொழி சொன்னான். பிறகு யுத்தம் முற்றிற்று. இருவரும் அடிமேல் அடி அடித்து ரத்த பிரவாகம் ஓடிற்று. மிகவும் அடிபட்ட சுக்ரீவன் ஒரு ஆச்சா மரத்தைப் பிடுங்கி அதனால் வாலியைப் பலமாக அடித்தான். வாலி அந்த அடியின் வேகத்தால் கொஞ் சம் அசைந்து கோபம் கொண்டு அவனும் மரங்களை வேரோடு பிடுங்கி சுக்ரீவனை அடித்தான். இருவரும் சம வீரர்கள். வெகு நேரம் கோரமான யுத்தம் நடந் தது. வரவர வாலியின் பலம் அதிகரித் தது. சுக்ரீவனுடைய பலம் குறைய ஆரம்பித்தது.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த ராமன் இனி சுக்ரீவன் தாங்க மாட் டான், உயிர் நீப்பான் என்று கண்டு வில்லை வளைத்துக் கொல்லும் பாணத்தை விட்டான். அது நேராகச் சென்று வாலி யின் வைரமான மார்பை ஆச்சா மரத் தைத் துளைத்தபடியே துளைத்து விட்டது. வாலியின் வாழ்க்கை முடிந்தது. விழா முடிந்ததும் அதற்காக அலங்கரிக்கப் பட்ட துவஜஸ்தம்பம் தரையில் கிடப் பதுபோல் ரத்தம் பெருகக் கீழே வாலி யின் உடல் கிடந்தது.

இப்படி ராமனுடைய பாணத்தால் மரண காய மடைந்து மகா சூரனை வாலி கோடாலியால் வெட்டி வீழ்த்தப் பட்ட பெரிய காட்டு விருக்ஷத்தைப் போல் கையும் காலும் விரிந்து கீழே கிடந்தான்.

கீழே கிடந்தாலும் வாலியின் அழகும் காந்தியும் குறையவில்லை. ஆபரணங்கள் பூண்டிருந்த அவன் தேகம் சூரியன் அஸ்த மிக்கும்போது சிவந்து பிரகாசிக்கும் மேகக் கூட்டத்தைப் போல் பிரகாசித் தது. இந்திரனால் கொடுக்கப்பட்ட தெய் வீகமாலை அவன் மார்பில் பிரகாசித்துக் கொண்டு அவன் உயிரையும் அவன் திரு வையும் தாங்கி மிகப் பொலியச் செய்தது. அந்த மாலையின் ஜோதியும் வீரனுடைய மார்பில் குத்தி நின்ற கொல்லும் ராம பாணமும், ரத்தம் பெருகும் காயமும் எல்லாம் சேர்ந்து அந்த மகா வீரனுடைய தேகத்தை மும்மடங்கு பொலிவுடன் விளங்கச் செய்தன. விழுந்து கிடந்த இந்த மகா வீரனுடைய கம்பீர தோற் றத்தை வால்மீகி மிக அழகாக வர்ணிக் கிறார். உயிர் நீங்குவதற்கு முன் இறக்கும் தறுவாயில் சூரர்களுடைய காந்தி மிகப் பொங்கி வளர்ந்து எப்போதும்விட அதிகமாக ஜொலிப்பது இயற்கை.

எதிர்பாராத வகையில் வீழ்த்தப் பட்ட வாலி நாலா பக்கமும் தன் பார்வை யைச் செலுத்திப் பார்த்தான். எங் கிருந்து தன் உயிரைக் கொண்டேக இந்த பாணம் வந்தது என்று சுற்றிலும் பார்த் தான். அச்சமயம் ராம லக்ஷ்மணர்கள் அவன் பக்கத்தில் வந்தார்கள். வில்லேந்தி வந்த அவர்களைப் பார்த்ததும் வாலியின் கண்களில் சூரர்கள் கண்களில் வடியும் கண்ணீர் வடிந்ததும் மெதுவான குரலில் தருமத்துக்கு இசைந்ததும் மேம்பட்ட பண்பாடு நிறைந்ததுமான மொழிகளைச் சொல்லி ராமனுடைய குற்றத்தை எடுத் துக் காட்டிக் கண்டித்துப் பேசினான்.

உயிர் தேகத்தை விட்டுப் போகும் தறுவா யானபடியால் பேச்சுத் தடைப் பட்டது. ஆயினும் தாழ்ந்த சுவரத்தில் கஷ்டப்பட்டுப் பேசினான்.

"ராமனே! தசரத சக்கரவர்த்தியின் புத்திரனுவாய். உத்தம குலத்தில் பிறந்த நீ, பெரும் புகழும் அடைந்த நீ, ஏன் இப்படிச் செய்தாய்? உன் நற்குணங் களும் ஒழுக்கமும் உலகம் அறிந்த விஷ யம். இப்படி யிருக்க நான் வேறொருவ னிடம் யுத்தம் செய்து கொண்டு அதில் மனம் முற்றிலும் செலுத்தி வந்த சம யத்தில் என் கண்களுக்குத் தென்படா மல் மறைந்து நின்று என் மேல் பாணம் விட்டு என்னைக் கொன்றாய். உன்னைப் பற்றி ஜனங்கள் சொல்லும் புகழ்மொழி களுக்கு இது முற்றிலும் விரோதமா யிருக்கிறதே! எல்லாப் பிராணிகளிட மும் கருணை கொண்டவன், தோஷ எண் ணங்களுக்கு இடம் கொடுக்காமல் புலன் களையும் உள்ளத்தையும் அடக்கியாள் பவன், அற வழியில் நிற்பவன், பொறுமை, சாந்தி, தருமம், சத்திய பராக்கிரமம் முதலிய உத்தம குணங் களை எல்லாம் பெற்றவன் என்று கீர்த்தி பெற்றாயே, இப்போது அவையெல்லாம் என்னவாயிற்று? என்னைக் கொன்று நீ என்ன லாபம் பெறுவாய்? யோசிக்காமல்

இந்த அதரும காரியம் செய்தாய். என் மனைவி உன்னைப் பற்றி என்னை எச்சரித்தாள். அவள் பேச்சைத் தட்டி விட்டு வந்தேன். நீ வேஷதாரி யென்றும், துன்மார்க்கன் என்றும், புல்லால் மூடப்பட்ட பாழுங் கிணறு போன்ற பாவி என்றும் தெரியாமல் மனைவியின் பேச்சைக் கேளாமல் நான் என் தம்பியுடன் யுத்தத்துக்கு வந்தேன். உனக்கு என்ன தீமை நான் செய்தேன்? உன்னுடன் யுத்தம் செய்யவா நான் வந்தேன்? அதருமத்தில் இறங்கி என்னை மறைந்து நின்று கொன்றாய். நல்ல அரச குலத்தில் பிறந்து பெரும் பாவத்தைச் செய்தாய். நிரபராதியைக் கொன்றாய். நீ அரச பதவிக்குத் தகுந்தவனல்ல. மோசக்காரனை உன்னை பூதேவி மணக்க விரும்ப மாட்டாள். நீ எப்படி தசரதனுக்கு மகனாகப் பிறந்தாய்? தர்மத்தை விட்டு நீங்கின நீசனால் கொல்லப் பட்டேன். என் கண்ணுக்கு முன் நின்று நீ யுத்தம் செய்திருந்தாயேல் இன்றே நீ செத்திருப்பாய். என்னை நீ வேண்டிக் கொண்டிருந்தால் ஒரே நாளில் சீதையை உன்னிடம் அழைத்து வந்து விட்டிருப்பேனே! சுக்ரீவனுக்காக என்னைக் கொன்றாயே. ராவணனைக் கொன்று பிரேதத்தைக் கழுத்தில் கயிறு போட்டுக் கட்டி உன்னிடம் இழுத்துக் கொண்டு வந்து விட்டிருப்பேனே! மைதிலியை எவ்விடம் மறைத்து வைத்திருந்தாலும் கண்டு பிடித்து உன்னிடம் ஒப்புவித்திருப்பேனே! பிறந்தவர்கள் இறப்பது விதி. ஆயினும் நீ முறைதவறி என்னைக் கொன்றாய். உன் குற்றம் பெருங் குற்றம்."

இவ்வாறு தேவேந்திர குமாரனை வாலி மரணாவஸ்தையில் ராமனைக் கண்டித்தான்.

வாலியின் இந்தக் குற்றச் சாட்டுக்கு ராமன் என்ன பதில் சொல்ல முடியும்? ஏதோ சொன்னதாகவும் அதைக் கேட்டு வாலி சமாதானப்பட்டதாகவும் வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படுகிறது. அதில் சாரம் இல்லை என்று விட்டு விட்டேன். பெரியோர்கள் மன்னிப்பார்கள். ராமாவதாரத்தில் ஆண்டவனும் தேவியும் சகிக்க வேண்டிய துக்கங்களில் இந்தத் தவறும் பழியும் ஒன்று.

சுக்ரீவனால் அடிபட்டு உடம்பெல்லாம் ரண காயங்கள். அதன்மேல் ராம பாணத்தினால் உண்டான மரணாவஸ்தை. இவற்றை யெல்லாம் பொறுத்துக் கொண்டு கடைசியாக வாலி ராமனுக்கு ஒரு வார்த்தை சொன்னான்:

"ஏதாயினும் சரி, நான் இனி அதைப் பற்றி தோஷம் சொல்லவில்லை. எனக்கு மிகப் பிரியமான குமாரன் அங்கதன் மிகவும் துக்கப்படுவான். சுக்ரீவனும் நீயும் அவனைச் சரியாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். அவனை உன் வசம் ஒப்புவித்தேன். அவனைக் காப்பாற்றுவது உன் கடமையாகப் பாவிக்க வேண்டும். ஜலம் வற்றிப் போன குளத்திலுள்ள தாமரைக் கொடிபோல் துக்கப்படுவான். நான் சுக்ரீவனுக்குச் செய்த கொடுமை தாரையின் தூண்டுதலால் என்று அவன் எண்ணமலிருக்க வேண்டும். அங்கதனை அவன் கவுரவமாகவும் அன்புடனும் நடத்த வேண்டும். இதை நீ செய்தால் போதும், நான் வேறொன்றும் விரும்பவில்லை. வீரர்களுக்குரிய உலகம் எனக்குக் காத்திருக்கிறது" என்று சொல்லி விட்டு, நினைவு இழந்தான்.

• • •

ஒன்று நிச்சயம். வாலியை ராமன் எதிர்த்து ஜெயித்திருக்க முடியாது. ராவணனைத் தேவர்கள் எதிர்க்க முடியாதிருந்தது போலவே இதுவும் வரத்தினால் ஏற்பட்ட நிலைமை. மறைந்து நின்றே தான் ராமன் வாலியைக் கொல்ல முடியும். ஆயினும் ஏன் வாலியைக் கொல்ல வேண்டும் என்கிற கேள்வி நிற்கிறது.

கபந்தனுடைய சாப விமோசன காலத்தில் அவன் "நீ சுக்ரீவனுடைய நட்பை சம்பாதித்து சீதையை அடைவாய்" என்று சொன்னபடி ராமன் சுக்ரீவனைத் தேடிச் சென்றான். அவனை அடைந்து அக்கினி சாட்சியாக நட்புப் பிரதிக்ஞையும் செய்து விட்டான்.

மன்னிக்கத் தகாத அபராதம் ஏதும் வாலிக்கு சுக்ரீவன் செய்யவில்லை. அப்படியிருக்க வாலி தான் பெற்றிருந்த பலத்தைக் கொண்டு தம்பியைப் படாதபாடு படுத்திக் கொடுமை செய்து வந்தான். இதைச் சொல்லி முறையிட்ட சுக்ரீவனுக்கு "உன் பகைவனை ஒழித்து மனைவியையும் ராஜ்யத்தையும் நீ மறுபடி அடையச் செய்வேன், இது சத்தியம்" என்று சுக்ரீவனுக்கு உறுதியான பிரதிக்ஞை செய்து விட்டான். இதன்மேல் வேறு வழியில்லை. வாலியை மறைந்து நின்று கொல்வது அவசியமாக ஏற்பட்டு விட்டது. காதல் மனைவியைத் திருப்தி செய்ய மாய மானைத் தேடிப் போனதின் பயனாக ஒன்றன்பின் ஒன்றாகச் சிக்கலும் துக்கமும் தர்ம சங்கடங்களும் ராமனைத் தொடர்ந்து வந்தன. இவ்வளவே என் சிற்றறிவுக்குக் காணப்படுவது.





# பரம்பரை குணமேன்மை




பண்டைக்காலத்திய கூந்தல் சிங்காரங்கள் அன்றைப் போலவே இன்றும், அழகாகவும் வசீகரமாகவும் அமைகின்றன. இந்தியப் பெண்மணிகள் தங்கள் கூந்தலுக்கு பளபளப்பும் அழகும் ஊட்டுவதற்கு டாம்கோ பரிமள கூந்தல் தேங்காய் எண்ணெயை இருபதாண்டுகளாக பயன்படுத்தி வருகிறார்கள்.

## டாம்கோ

## பரிமள கூந்தல் தேங்காய் எண்ணெயும் ஷாம்பூவும்




டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி, லிமிடெட்

இந்திய மூலதனத்தைக் கொண்டு, இந்திய நிர்வாகத்தில், இந்தியாவிலேயே தயாரிக்கப்படுவது

# ஹாஸ்யக் களஞ்சியம்



"நம் கல்யாணம் நேற்று நடந்தமாதிரி இருக்கிறது!"
"நேற்று அப்படி என்ன மோசமாக நடந்தது?"



"பெண் கல்யாணத்துக்குப் பணம் அவ்வளவு கொடுக்க முடியாது!"
"பணம் என்ன ஸார்! பணம் தானு ஸ்வகத்திலே? ...... ஒன்று கொடுங்கோ! நகையாகக் கொடுங்கோ! வைரமாகக் வெள்ளியாகக் கொடுங்கோ!"







"அதெப்படி உபன்யாசத்தில் நீங்கள் தூங்காமல் இருந்தீர்கள்?"
"தூங்குகிறதா? நானதான் ஐயா உபன்யாசம் செய்தது!"




"பிள்ளைவாள் படுத்துக் கொண்டால்
வீடு நீளம் போதவில்லையாம். வேறு வீட
டுக்குக் குடி போகப் போகிறாராம்!"


"சர்க்கஸ்காருக்குப் பொழுது போக
வில்லையாம்! சிங்கத்துக்குத் தலைவாரிப்
பின்னுகிறார்!"


"உங்களாலேதான் என்னை மாமியார்
வீட்டிலே பிழிஞ்சு எடுத்திண்டிருக்கா!"
"என்னுலேயா?"
"ஆமாம்! ஏன் பாட்டி எனக்குக் கமலா
ன்று பெயர் வைத்தாய்?"


"என்ன துர்அதிர்ஷ்டம்! எனக்கு.
வழியிலே இப்படிக் கார் நின்று விட்டதே!
எப்பொழுது போய்ச் சேருகிறது?"

## சாமா


1
2
3

"அற்புதமான ஐந்து வருடங்கள்! உற்பத்தியைப் பெருக்கி உருவாக்க வேண்டிய காலம்! என் குழந்தைக்கு ஆரோக்கிய விருத்தியும் இலவசப் படிப்பு வசதியும் இனி கிடைக்கும். மேலும் கஷ்டப்பட்டு உழைத்தால் எங்களுக்கென ஒரு வீடும் கட்டிக்கொண்டு கவலையற்று வாழலாம்."

ஐந்து வருடத் திட்டத்தின் தொகையில் சுமார் கால்பாகம் பொது ஜன சேவையை மேலும் விஸ்தரித்து மேம்பாடடையச் செய்வதற்காகச் செலவிடப்படும். 13,000 புதிய டாக்டர்களுக்கும், 20,000 நர்ஸுகளுக்கும் பயிற்சி அளித்து, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக 425 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. 1956-ம் வருடத்திற்குள் ஆறு வயதிற்கு மேற்பட்ட சிறுவர்களில் 60 சதவீதத்துக்கு மேல் நமது 2,02,142 ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் கல்வி கற்பார்கள். இந் நெடுநாளைய திட்டம் நம் வருங்கால வாழ்க்கையில் நம்பிக்கையை திடப்படுத்துகிறது. உண்மையில் இதுவே....

## வருங்காலத்திற்கு ஓர் வாக்குறுதி



இவ்வைந்து வருடத்திட்டத்தின் பல்வேறு சாதனங்களில் பல்லாயிரக் கணக்கான டன் எஃகு உபயோகிக்கப்படும். ஆதலால் நம் நாட்டு மக்களின் வருங்கால வாழ்க்கையை செழிப்புறச் செய்வதில் எஃகானது எண்ணற்ற விதங்களில் உதவுபடும்.

**தி டாடா அயரன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்**




## 25. அதிசய நிகழ்ச்சி!

பிரபாகரனும் உமாவும் நாக்கில் ஜலம் ஊறத் திராட்சைப் பழங்களையே பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்த வயற்காட்டுக் கிழவிக்கு ஆச்சரியமா யிருந்தது.

"ஏன் பேசாமல் பழங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்? மிகவும் சிறிய கூடை. இதில் இருக்கும் பழங்கள் மூன்று சேர் நிறைக்கு மேல் இருக்காது. தயவு செய்து இந்தக் கூடையோடு வாங்கிக் கொண்டு இந்த ஏழைக் கிழவிக்கு உபகாரம் செய்யுங்கள்" என்று பிரபாகரனையும் உமாவையும் அவள் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

பிரபாகரனுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை.

"பாட்டி, உங்கள் பச்சை திராக்ஷைப் பழங்களைப் பார்த்தால் எப்படியாவது அவைகளை வாங்கி விட வேண்டுமென்று ஆசையாய்த்தான் இருக்கிறது. என்னை விட என் தங்கை மிகவும் ஆசைப்படுகிறாள். நீங்கள் சொல்லுவது போல அந்தப் பழங்கள் பாலைவனத்தின் வழியாகச் செல்லும் போது மிகவும் உதவியாக இருக்கும். ஆனால் எங்களிடம் காலணாக் கூடக் கிடையாது. அப்படி இருக்கும் பொழுது எங்களால் எப்படி வாங்க முடியும்? நீங்கள் தயவு செய்து வேறு இடத்துக்குச் சென்று இவைகளை விற்க முயற்சி செய்யுங்கள்" என்றான் பிரபாகரன்.

பிரபாகரன் சொல்லியதைக் கேட்ட கிழவி, "குழந்தாய், உன்னிடம் பணம் இல்லா விட்டால் என்ன? நான் என் வயதுக்கு எவ்வளவோ பணம் சம்பாதித்திருக்கிறேன். என் நோக்கம் பிறருக்கு உதவி செய்வதே தவிரப் பணம் பிரதானமல்ல. உன்னைப் போல நல்லவருக்கு நான் கட்டாயம் உதவி செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன். நான் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க முடியாமல் சிரமப்பட்ட போது நீயாகவே ஓடி வந்து எனக்கு உதவி செய்தாய். அப்பொழுதே உன் நல்ல குணத்துக்கு ஏதாவது என்னாலான உதவி செய்ய வேண்டுமென்றுதான் நினைத்தேன். இந்தத் தள்ளாத கிழவியினால் என்ன செய்ய முடியும்? இதோ என்னால் முடிந்தது, இந்தக் கூடையிலுள்ள பழங்கள் முழுவதையும் உங்களுக்குத்தான் கொடுக்கப் போகிறேன். இந்தாருங்கள்!" என்று கூறிக் கூடையை அவர்கள் இருவருடைய முன்னிலையிலும் வைத்தாள்.

"வேண்டாம், வேண்டாம்! எங்களுக்கு வேண்டாம். நீங்கள் இவைகளை விற்றுப் பணம் சம்பாதித்துக் கொள்ளுங்கள். பாவம், எங்களால் உங்களுக்கு வியாபாரத்தில் நஷ்டம் ஏற்படக் கூடாது" என்று பிரபாகரனும் உமாவும் சேர்ந்தாற் போல் சொன்னார்கள்.

"அதெல்லாம் முடியாது. உங்களுக்கு இந்தப் பழங்களை இனாமாகக் கொடுப்பது என்று தீர்மானித்து விட்டேன்!" என்று தன்னிடமிருந்த ஒரு பெரிய காகிதப் பையில் கூடையிலுள்ள திராக்ஷைப் பழங்களைப் போட்டுப் பிரபாகரனின் கையில் கொடுத்து விட்டுக் கூடையை எடுத்துக் கொண்டாள். பிரபாகரனும் உமாவும் வந்தனம் தெரிவிப்பதற்குள் அவ்விடத்தை விட்டுப் போய் விட்டாள் கிழவி.

"உமா, பாவம் அந்தத் தள்ளாத கிழவி நம்மிடம் திராக்ஷைப் பழத்தைக் கொடுத்து விட்டுப் போய் விட்டாள். நாம் இவைகளை இப்பொழுது தின்ன வேண்டாம். பாலைவனத்தில் நடந்து செல்லும் பொழுது தாகம் எடுக்கும் சமயத்தில் தின்னலாம்.



மான் சிங்கத்துக்குப் பயந்து ஓடுகிறது. படத்தைத் திருப்புங்கள், சிங்கத்தைப் பார்க்கலாம்.

---

இங்கு சற்று நேரம் இளைப்பாறி விட்டுச் செல்லலாம்'' என்றான் பிரபாகரன்.

'' சரி, அண்ணா அப்படியே செய்யலாம்'' என்றாள் உமா.

மந்திர திராக்ஷைப் பழத்தைப் பிரபாகரனுக்குக் கொடுத்த வயற்காட்டுக் கிழவி, தான் வெற்றி அடைந்ததைப் பற்றிச் சந்தோஷம் கொண்டாள். தன் கையிலிருந்த கூடையை எறிந்து விட்டுத் தடியை ஊன்றிக் கொண்டே கொஞ்ச தூரம் சென்று கொண்டிருந்தாள். போகும்போதே அவள் மனம் என்ன என்னவோ சிந்தனைகளில் ஈடுபட்டது. 'எப்படியாவது பீமபுரத்தில் அரசனுடன் தாற்காலிகமாகத் தங்கியிருக்கும் வீர சிம்மனிடம் சொல்லி அவரைச் சீக்கிரம் வரவழைக்க வேண்டும். பிரபாகரனையும் உமாவையும் கைதிகளாக்கி அவனிடம் சேர்க்க வேண்டும்' என்ற எண்ணம் உண்டாயிற்று. தான் ஒரு காகத்தைப் போல் உருவம் எடுத்துக் கொண்டு அரண்மனையில் தங்கி யிருக்கும் வீரசிம்மனிடம் பறந்து போவதென்று தீர்மானித்தாள்.

அப்பொழுது அவள் எதிரே வீரப்பதேவன் அவசரமாக வந்து கொண்டிருப்பதைப் பார்த்தாள். அவனைப் பார்க்கப் பிடிக்காமல் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள். வயற் காட்டுக் கிழவியின் மீது கோபம் கொண்டிருந்த வீரப்பதேவன், ''ஏ, கிழவி! ஏன் என்னைப் பார்க்க வெட்கப்பட்டுக் கொண்டு முகத்தைத் திருப்பிக் கொள்ளுகிறாய்? உன் சூழ்ச்சிகளெல்லாம் ஒன்றும் பலிக்கவில்லை என்றா?'' என்று சொல்லிக் கொண்டே '' ஹா! ஹா! ஹா!'' என்று சிரித்தான்.

கிழவிக்குக் கோபம் வந்தது. '' வீரப்பதேவரே! என் விஷயத்தில் நீர் குறுக்கிட வேண்டாம் என்று உமக்குப் பல முறை சொல்லியும் நீர் கேட்கவில்லை. நீர் வேண்டுமென்றே பிரபாகரனுக்காகக் கொடுத்திருந்த மந்திர அம்புகளை எடுத்து எனது தந்திரம் வெற்றி பெறக் கூடாது என்ற நோக்கத்துடன் அரசர் வீரசிம்மன் அம்புறாத் தூணியில் சேர்த்தீர். பாவம், உம்முடைய சூழ்ச்சியை அறியாத அரசன் போட்டியில் தோற்க நேரிட்டது'' என்று படபட வென்று பேசினாள்.

இதைக் கேட்டதும் வீரப்பதேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவனது தலை சுற்றிற்று. 'அடாடா! நான் அல்லவா ஏமாந்து அரசனைத் தோற்கும்படி செய்தேன்! தோட்டத்திலுள்ள அம்புகள் பிரபாகரனுக்காகக் கிழவியினால் கொடுக்கப்பட்ட மந்திர அம்புகள் என்று தெரிந்திருந்தால் அப்படிச் செய்திருக்க மாட்டேனே. நான் தவறு செய்ததை அரசன் தெரிந்து கொண்டால் எனக்கு அல்லவா ஆபத்து நேரிடும்!' என்று அவன் மனசுக்குள் எண்ணித் திகிலடைந்தான்.

தனது தோல்வியைக் கிழவிக்குத் தெரியப்படுத்தக் கூடாது என்று தீர்மானித்து ஒன்றும் தெரியாதது போல, '' கிழவி, அரசன் தோல்வியுற்றதற்கு என்னையா குற்றஞ் சாட்டப் பார்க்கிறாய்? அரசன் தோற்றுப்போக வேண்டுமென்ற எண்ணத்துடன் மந்திர அம்புகளை அரசன் உபயோகிக்கும்படி செய்தாய். விஷயம் இப்பொழுதுதான் தெரிகிறது. உன் சூழ்ச்சியை மறைக்க என்னைக் கருவியாக உபயோகப் படுத்தப் பார்க்கிறாயா? இப்பொழுதே அரசனிடம் சென்று உன்னை என்ன செய்கிறேன், பார்!'' என்று கோபத்துடன் சொன்னான் வீரப்பதேவன். கோபத்தினால் அவனுடைய மீசையும், உதடுகளும் துடிதுடித்தன.

வீரப்பதேவன் கூறிய வார்த்தைகளைக் கேட்ட கிழவியின் மனம் சற்றுக் கலக்கம் அடைந்தது. வீரப்பதேவனின் மீது அரசன் வைத்திருக்கும் நம்பிக்கையைப் பற்றி நன்றாக அறிந்தவள் கிழவி. ஆகையால் வீரப்பதேவன் தன்னைப் பற்றிச் சொல்லும் அவதூறுகளை உண்மை என நம்பித் தன்னைக் கடுமையாகத் தண்டித்து விட்டால் என்ன செய்வது என்ற பயம் அவள் மனத்தில் தோன்றியது.

அவள், உடனே சாமர்த்தியமாக, ''வீரப்பதேவரே, ஏன் ஏதோ பரிகாசமாக நான் சொன்னதை நிஜமென்று நம்பிக் கோபமாகப் பேசுகிறீர்கள்? நீங்களும் என் விஷயத்தில் தலையிட வேண்டாம், நானும் உங்கள் விஷயத்திலே தலையிடவில்லை. ஆனால் ஒன்று சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது வழியில் இருக்கும் கிணற்றடிப் பந்தலில் பிரபாகரனையும், உமாவையும் பார்த்தேன். என் சாமர்த்தியத்தினால் அவர்களை எனது சூழ்ச்சி ஒன்றில் சிக்க வைத்திருக்கிறேன். ஆனால் அந்தச் சூழ்ச்சி என்னவென்பதை உங்களுக்கு மாத்திரம் அல்ல, அரசனுக்கும் சொல்லப் போவதில்லை. முன் கூட்டியே

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்

•

சிறு நீரில் அதிக சர்க்கரை இருப்பின் நீரிழிவு (DIABETES) என்று சொல்லப்படும் இப் பயங்கர வியாதியுள்ள நோயாளி நாளுக்கு நாள் தன் முடிவு நெருங்குவதைக் காண்கிறான். இதை நிவர்த்திக்க டாக்டர்கள் இன்ஸுலின் இன்ஜக்ஷன் ஒன்றைத்தான் கண்டு பிடித்தார்கள். இதைக் குத்திக் கொள்வதால் பூரண குணம் ஏற்படுவதில்லை; இன்ஜக்ஷன் மருந்து உள்ள வரையில் சர்க்கரை தற்காலிகமாக மறைந்து விடுகிறது.

அபரிமிதமான தாகம், பசி, அடிக்கடி சிறு நீர் சர்க்கரையுடன் போதல், எரிச்சல் ஆகியவைகள் இந்த வியாதியின் முக்கிய அறிகுறிகள். வியாதி முற்ற ராஜப் பிளவை கட்டிகள் சாலேஸ்வரம் இதர கொடிய வியாதிகள் ஏற்படும். வீனஸ் சார்ம் நவீன விஞ்ஞான அதிசயமாகும். இதை உபயோகித்ததால் பலர் மரணத்தினின்று தப்பியுள்ளனர்.

வீனஸ் சார்ம் உபயோகித்த 2-வது அல்லது 3-வது நாளில் சிறு நீரில் சர்க்கரை குறைந்து அடிக்கடி போகும் சிறுநீரும் குறைகிறது. 8வது அல்லது 4-வது நாளில் வியாதி பாதிக்கு மேல் குணமடையும். இந்த மருந்துக்குப் பத்தியம் கிடையாது; இன்ஜக்ஷன் கிடையாது. நன்கு விளக்கும் இலவச ஆங்கில புத்தகத்திற்கு எழுதிக் கேளுங்கள்.

•

**50 வில்லைகள் கொண்ட புட்டி 1-க்கு ரூ. 6-12-0**

(பாக்கிங், தபாற் செலவு இனும்)

•

**Venus Research Laboratory (K.M.)**

**POST BOX No. 587, CALCUTTA**




## மார்கோ ஸோப்

வாசனை நீக்கப் பெற்ற வேப்பெண்ணெயிலிருந்து ஒரு விசேஷ முறைப்படி தயாரிக்கப் படுவது. அதன் அபரிமிதமான கிருமி நாசன நுரை அழுக்கை அகற்றி, சருமத்தினுள் புகுந்து நன்கு சுத்தம் செய்யும். சருமத்திற்கு புஷ்டியும் மென்மையும் தரும். அபூர்வ மணம். நுட்பமான சருமத்திற்கும் ஹானியற்றது.

**A CALCHEMICO PRODUCT**

தென் இந்தியா ஆபீஸ்:

5/149, பிராட்வே, மதராஸ் - 1









சொல்லி விட்டால் என் சூழ்ச்சி வெற்றி அடையாமல்படி யாராவது ஏதாவது செய்து விடுவார்கள். இப்பொழுதே பீம புரியில் தங்கி யிருக்கும் நம் அரசனை இங்கு வரவழைக்கப் போகிறேன். அவர் வந்து பிரபாகரனையும், உமாவையும் சிறைப் பிடித்துச் செல்லச் சௌகரியமாக இருக்கும். சிறிது நேரத்தில் எனது சூழ்ச்சிக்கு அவர்கள் பலியாக்கப்படுவார்கள். அந்த இரண்டு பேர்களையும் பற்றி நீங்கள் இனி சிந்திக்கவே வேண்டாம். நான் வருகிறேன்'' என்று வீரப்பதேவனிடம் விடைபெற்றுக் கொண்டு தன் வழியே சென்றாள்

வீரப்ப தேவனுக்குக் கிழவி கூறிய வார்த்தைகள் ஆத்திரத்தையும், ஏமாற்றத்தையும் அளித்தன. 'கிழவி சொல்லியபடி அவள் சூழ்ச்சி வெற்றி பெற்றுப் பிரபாகரனும், உமாவும் கைதிகளாக்கப்பட்டால், அரசனுக்கு என்மீதுள்ள மதிப்பு குறைந்து கிழவியின் மீதுள்ள மதிப்பு அதிகரிக்கும். ஆதலால் இந்தத் தடவை கிழவிக்கு வெற்றி கிடைக்காமல் பார்ப்பது என் முதல் கடமை. பிறகு எனது சூழ்ச்சியில் பிரபாகரனையும் உமாவையும் சிக்க வைத்து அரசனிடம் நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ள வேண்டும். அதற்கு நான் ஏற்கெனவே யோசித்தபடி ஒரு புதிய வழியைக் கடைப் பிடித்து வெற்றி பெற வேண்டும். அந்த வழியை இப்பொழுதே, உபயோகப் படுத்துகிறேன். ஹா ஹா ஹா!' என்று சிரித்துக் கொண்டும், குதித்துக் கொண்டும் கிணற்றடிப் பந்தலை நோக்கி வீரப்பதேவன் வெகு வேகமாகச் சென்றான். (தொடரும்)

ரஸ்தாக்களில் சிறந்தவை

# காங்கிரிட் ரஸ்தாக்களே

அதற்கு மூன்று காரணங்கள்:—

- ✓ முதல் சிலவு நேர்மையானது.
- ✓ செப்பனிடும் சிலவு குறைவானது
- ✓ காங்கிரிட் ரஸ்தாவின் நெடு நாள் உழைப்பே அதன் சிக்கனத்தின் சான்றாகும்.




இந்த புகழ் பெற்ற ஏ சி சி சிமெண்ட் காலமெனும் சோதனையில் தேறியது.

## நெடுநாள் உழைப்புக்கென ஏ சி சி செமண்டினால் கட்டப்பட்டவை.




**தி செமெண்ட் மார்கெடிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்.**
9, மௌண்ட்ரோடு, மதராஸ். 4/12, ரேஸ் கோர்ஸ் ரோடு, கோயம்புத்தூர்.
டைகர் கம்பெனி பில்டிங், பங்களூர்.

SISTA'S-CHI-187-TAM

# கணையாழியின் கனவு



'கல்கி'

## 4. அல்லோல கல்லோலம்

கணையாழியில் பெண்கள் பள்ளிக்கூடம் ஒன்று இருந்தது. அதன் உபாத்தியாயரின் பெயர் கனகசபை வாத்தியார். கொஞ்சம் பழைய காலத்து மனிதர்.—ஐயோ! சாமி!—அன்று அவர் அடைந்த காபராவைப் போல் அதற்கு முன் அவருடைய வாழ்நாளில் என்றும் அடைந்ததில்லை.

"ஸார்! ஸார்! யாரோ வரா, ஸார்!" என்று ஒரு பெண் கூவினாள். உடனே எல்லாப் பெண்களும் ஜன்னல்களண்டை குவிந்து வேடிக்கை பார்க்கலானார்கள். வாத்தியாரும் அந்தப் பக்கம் நோக்கினார். உடனே பள்ளிக்கூடம், பெஞ்சு, நாற்காலி, மேஜை, கரும் பலகை எல்லாம் அவரைச் சுற்றிச் சுழலத் தொடங்கின. சட்டென்று கரும் பலகை துடைக்கும் குட்டையை எடுத்துத் தலைப்பாகையாகச் சுற்றிக்கொண்டார். மேஜை மீதிருந்த தலைப்பாகையை உதறி அங்கவஸ்திரமாக மாட்டிக் கொண்டார். பிறகு, நாற்காலி முதுகின்மேல் கிடந்த மேல் வேஷ்டியை எடுத்து, அதை என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தார். இதற்குள் சமீபத்தில் காலடிச் சத்தம் கேட்கவே அதை மேஜை டிராயரில் செருகி விட்டுப் பெண்களைப் பார்த்து, "சனியன்களே! உட்காருங்கள். அவரவர்கள் இடங்களில் உட்காருங்கள்" என்று பாம்பு சீறுவது போன்ற குரலில் இரகசியமாகச் சொன்னார்.

அடுத்த நிமிஷத்தில் ஸ்ரீமதி சகுந்தலா தேவியும் அவளுடைய தகப்பனாரும் பள்ளிக்கூட அறைக்குள் வந்தார்கள்.

"வாத்தியாரே! இவள் என்னுடைய பெண். கல்கத்தாவிலிருந்து வந்திருக்கிறாள். பள்ளிக்கூடத்தைப் பார்க்க வேண்டுமென்றாள். அழைத்து வந்திருக்கிறேன்" என்று ரங்கநாதம் கூறினார். வாத்தியாருக்கு இந்த விஷயம் விளங்கச் சற்று நேரம் பிடித்தது. அவர் பள்ளிக்கூட 'இன்ஸ்பெக்டரெஸ்' திடீர் சோதனைக்கு வந்துவிட்டதாக எண்ணி அவ்வளவு குழப்பத்துக்குள்ளாகி யிருந்தார். இந்தக் காலத்தில்தான் சின்னச் சின்ன பெண்களுக்கு 'இன்ஸ்பெக்டரெஸ்' உத்தியோகம் கொடுத்து, தலை நரைத்த கிழவர்களையெல்லாம் மிரட்டுவதற்கென்று அனுப்பி விடுகிறார்களே?

வாத்தியாருடைய கோலத்தைப் பார்த்துச் சகுந்தலை புன்னகை செய்துகொண்டு, "உங்களுக்கு ஒன்றும் ஆட்சேபம் இல்லையே?" என்று கேட்டாள்.

"எதற்கு?" என்றார் வாத்தியார்.

"தினம் நான் இங்கு வந்து குழந்தைகளுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கலாமென்று நினைக்கிறேன், செய்யலாமல்லவா?" என்று கேட்டாள்.

கனகசபை வாத்தியாரின் நாக்கு இப்போதுதான் புரள ஆரம்பித்தது. "அடடா! இப்படி ஒருவரும் இல்லையே என்றுதானே காத்துக் கொண்டிருக்கிறேன்? இந்த ஊரில் இவ்வளவு பேர்கள் இருக்கிறார்களே? ஒருவராவது இங்கு வந்து எட்டிப் பார்த்தது கிடையாது. குழந்தைகள் வீட்டிலிருந்தால் தொல்லை யென்று பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி விடுகிறார்கள். அதுவும் பாதி நாளைக்கு அனுப்புவதில்லை. 'கணக்கு வரவில்லை; பாட்டு வரவில்லை' என்று மட்டும் அடிக்கடி புகார் செய்கிறார்கள்..." என்று இவ்வாறு வாத்தியார் தமது முறையீட்டை ஆரம்பித்தார்.

சகுந்தலை கால் மணி நேரத்திற்குள் பள்ளிக்கூடத்திலுள்ள பெண் குழந்தைகளையெல்லாம் பெயர், வகுப்பு எல்லாம் விசாரித்துச் சிநேகம் செய்துகொண்டாள். பிறகு,

"ஜண்டா ஊஞ்சா ரஹே ஹமாரா"

என்னும் ஹிந்தி தேசியக் கொடிப் பாட்டில் இரண்டடி சொல்லிக் கொடுத்தாள். பின்னர் "நாளைக்கு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு வெளிக் கிளம்பினாள்.

'ஆனந்த விகடனி'ல் 1934-ம் ஆண்டு வெளியானது.

சகுந்தலையும் அவள் தகப்பனாரும் திரும்பி வீட்டுக்குப் போகையில் கணையாழியின் வீதியில் ஒரு அதிசயமான காட்சியைக் கண்டார்கள். ஒவ்வொரு வீட்டிலும் உள்ள ஆண்கள் பெண்கள் எல்லாருக்கும் ஏக காலத்தில் வாசற் பக்கத்தில் என்னதான் வேலை இருந்ததோ, தெரியவில்லை. புருஷர்களும் கொஞ்சம் வயதான ஸ்திரீகளும் வாசலிலும் திண்ணையிலும் காணப்பட்டனர்; இளம் பெண்களோ வீட்டு நடைகளின் கதவிடுக்குகளிலும், காமரா உள்ளுகளின் ஜன்னல் ஓரங்களிலும் நின்று கொண்டு எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். விஷயம் என்னவென்றால், சகுந்தலையும், அவள் தந்தையும் பெண் பள்ளிக்கூடத்தைப் பார்க்கப் போயிருக்கிறார்கள் என்ற செய்தி பரவவே, கல்கத்தா பெண்ணைப் பார்ப்பதற்கென்று அவள் திரும்பி வருவதை ஆவலுடன் எதிர்பார்த்து அவ்வளவு பேரும் காத்துக் கொண்டிருந்தார்கள்.

இவ்வாறு கணையாழி முழுவதும் ஒரே அல்லோல கல்லோலமாக இருந்தது.

## 5. புரட்சி

சகுந்தலை வந்தது முதல் கணையாழி இளைஞர்களுக்குக் கல்கத்தா ரங்கநாதம் வீட்டில் ஏதாவது வேலை ஏற்பட்டுக் கொண்டிருந்தது. அவர்களுக்கு எந்த விஷயத்தில் என்ன சந்தேகம் ஏற்பட்டாலும் அதைத் தீர்த்து வைக்கக் கூடியவர் அவர் ஒருவரே என்று கருதுவது போல் காணப்பட்டது.

ஒரு நாள் எல்லாரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த போது சகுந்தலை "இந்த ஊர் எனக்குப் பிடிக்கவே யில்லை. ஏன் வந்தோமென்று இருக்கிறது" என்றாள். ரங்கநாதம் சற்றுத் தூக்கி வாரிப் போட்டவர் போல் அவள் முகத்தைப் பார்த்தார்.

"ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்? இந்த ஊரில் என்ன பிடிக்க வில்லை? இந்த ஜில்லாவிலேயே அழகான கிராமம் என்று இதற்குப் பெயராயிற்றே?" என்று கல்யாணசுந்தரம் சொன்னான்.

"ஊர் அழகானதுதான். ஆனால் மனிதர்கள் மோசமானவர்கள். எப்பொழுது பார்த்தாலும் தெருவெல்லாம் அசிங்கம். பள்ளிக்கூடத்துக்குப் பக்கத்தில் குப்பை மேடு. கோவிலுக்குப் பக்கத்தில் மாட்டுக் கொட்டகை. குடியானத் தெருப் பக்கம் போகவே முடியவில்லை; அவ்வளவு குப்பையும் நாற்றமுமா யிருக்கிறது. நேற்றுக் கொஞ்ச தூரம் போய்ப் பார்த்தேன். முடியாமல் திரும்பி வந்து விட்டேன்" என்றாள்.

அப்போது அவள் தந்தை, "அதற்கு என்ன அம்மா செய்யலாம்! நம்முடைய ஜாதி வழக்கமே அப்படி. வீதிகளையும் வீட்டின் சுற்றுப்புறங்களையும் சுத்தமாய் வைத்திருப்பதற்கு வெள்ளைக்காரர்கள்தான்: அவர்களிடமிருந்து நமக்கு எப்போதுதான் அந்த வழக்கம் வரப் போகிறதோ, தெரியவில்லை!" என்றார்.

"இவர்களெல்லாம் மனம் வைத்தால் காரியம் ஒரு நிமிஷம் நடந்து விடுகிறது. வேண்டுமானால் சாந்தி நிகேதனத்துக்கு அருகாமையிலுள்ள கிராமங்களுக்கு இப்போது வந்து பாருங்கள். எவ்வளவு சுத்தமா யிருக்கும், தெரியுமா? படித்தவர்கள் கொஞ்ச நாளைக்குச் செய்து காட்டினால் கிராமத்தார்கள் அப்புறம் சுத்தமாய் வைத்துக் கொண்டிருக்கத் தாமே கற்றுக் கொண்டு விடுவார்கள்" என்றாள் சகுந்தலை.

அது என்ன அதிசயமோ, தெரியாது. அடுத்த இரண்டு மூன்று நாட்களுக்குள் கணையாழியின் வீதிகளில் குவிந்து கிடந்த குப்பைகள் எல்லாம் எங்கேதான் போயினவோ? கணையாழி இளைஞர்களுக்குத் திடீரென்று கிராம சுகாதாரத்தில் அக்கறை உண்டாகி விட்டது. வீட்டிற்குள்ளேயும், வெளியிலும் அவர்கள் சுத்தத்தைப் பற்றியே பேச



லானுர்கள். அவர்களுடைய முயற்சி 'தீழ்' ஜாதியார் வசிக்கும் தெருக்களில் கூட பலன் தர ஆரம்பித்தது. கோழிகளும், பன்றிகளும் பேசக் கூடுமானல் அவை தங்களைப் பட்டினிக்குள்ளாக்கிய கணையாழி இளைஞர்களின் மீது பெரிதும் புகார் கூறியிருக்கு மென்பதில் சந்தேகமில்லை. உண்மையில் குடியானவர்களெல்லாம் கூடப் புகார் சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். "சின்ன எசமான்கள் இப்படி மூன்று மாசம் வீதி துப்புரவு செய்தால் அடுத்த பஸலி சாகுபடிக்கு வயலுக்கு எருக் கூடக் கிடைக்காது" என்று முறையிடத் தொடங்கினார்கள். இவ்வாறு கணையாழியின் சமூக வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் புரட்சி ஏற்படலாயிற்று.

## 6. பெரு மழை

மற்றொரு நாள் சகுந்தலை வாழ்க்கையிலேயே வெறுப்புக் கொண்டவன் போல் பேசினாள்.

"இந்த உலகத்தில் ஏன் உயிர் வாழ வேண்டுமென்று தோன்றுகிறது. அதிலும் பெண்ணாய்ப் பிறந்தவர்கள் உயிரை வைத்துக் கொண்டிருக்க வேண்டாம். முன்னெல்லாம் நம் தேசத்தில் பெண் பிறந்தால் கங்கையில் எறிந்து விடுவது வழக்கமாமே? ஏன், அப்பா! என்னை ஏன் அப்படி நீங்கள் செய்யவில்லை?" என்று கேட்டாள்.

அவளுடைய தந்தையின் கண்களில் நீர் ததும்பத் தொடங்கியது. அருகிலிருந்த ரகுராமன், வைத்தியநாதன், கல்யாண சுந்தரம் முதலியோரின் நெஞ்சுகள் துடித்தன. அவர்கள் ஒவ்வொருவரும் அந்தச் சமயம் தங்கள் தங்கள் உயிர்களைக் கொடுத்துச் சகுந்தலையின் உயிரைக் காப்பாற்றுவது என்று தீர்மானித்துக் கொண்டார்கள்.

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?" என்று ரங்கநாதம் தொண்டை அடைக்கத் துக்கக் குரலில் கேட்டார்.

"நான் உங்கள் பெண்ணாய்ப் பிறந்ததால் சுகமாயிருந்து கொண்டிருக்கிறேன். அப்படியின்றி, சொர்ணம்மாளாய்ப் பிறந்திருந்தால்?..."

"சொர்ணம்மாள் யார்?" என்று ஸ்ரீதரன் கேட்டான். எல்லாருக்கும் அந்தச் சொர்ணம்மாளின் பேரில் சொல்ல முடியாத இரக்கமுண்டாயிற்று.

"சொர்ணம்மாள் எங்கள் வீட்டு வேலைக்காரி" என்றாள் சகுந்தலை. உடனே அந்த இளைஞர்களுக்கும் கொஞ்சம் அலட்சிய புத்தி ஏற்பட்டது.

"அவளுக்கு என்ன இப்போது வந்து விட்டது?"

சகுந்தலை சொல்லத் தொடங்கினாள்:— "சொர்ணம்மாளுக்கு என்னுடைய வயதுதான். அவள் ஏழு மாதம் கர்ப்பமாயிருக்கிறாள். இன்று காலையில், இனிமேல் அவள் வேலைக்கு வரவேண்டாம் என்றும் வேறு வேலைக்காரி வைத்துக் கொள்கிறேன் என்றும் சொன்னேன். உடனே அழத் தொடங்கி விட்டாள். வேலையை விட்டுப் போனால் அவள் புருஷன் அவளைக் கொன்று விடுவானும். அவள் உடம்பின் மீதிருந்த காயங்களையும், வீங்கியிருந்த இடங்களையும் காட்டினாள். நேற்றுச் சாயங்காலம் அவள் புருஷன் நன்றாய்க் குடித்து விட்டு வந்து, 'கண்ணே, நம்முடைய லோகிதாட்சன் எங்கே? கொண்டா இங்கே!' என்றானும்..."

ரகுராமன் முதலியோர் சிரித்தார்கள்.

"எனக்கும் அதைக் கேட்டபோது முதலில் சிரிப்பு வந்தது. ஆனால் சொர்ணத்தின் உடம்பிலிருந்த காயங்களை மறுபடி பார்த்ததும் அழுகை வந்து விட்டது. 'அடி பாதகி! என்னுடைய அருமைக் கண்மணி லோகிதாட்சனைக் கொன்று விட்டாயல்லவா?' என்று சொல்லி அவளை அடி அடியென்று அடித்தானும். வேலைக்குப் போகாவிட்டால் கொன்றே விடுவான் என்று சொன்னாள்."

அப்போது சகுந்தலையின் கண்களில் நீர் துளித்தது.

"இப்படி எத்தனை பெண்கள் கஷ்டப்படுகிறார்களோ? கள்ளுக் குடியை ஒழிப்பதற்கு வழி ஒன்றும் இல்லையா? இந்த ஊரில் பெரிய மனிதர்கள் எல்லாருங்கூடத் தென்னை மரங்கள் கள்ளுக்கு விடுகிறார்களாமே?" என்றாள்.

அன்று முதல் மாலை நேரங்களில் கணையாழி கிராமத்தில் சில வேடிக்கைக் காட்சிகள் தென்படலாயின.

குடிகாரப் பொன்னன் பக்கத்தில் ரகுராமனும் கல்யாண சுந்தரமும் நின்றார்கள். பொன்னன் சொல்கிறான்: "அகோ வாரும் பிள்ளாய், மதிமந்திரி சத்தியகீர்த்தியே! நம்முடைய அருமை நாயகியான சூர்ப்பணகா தேவியை நீ ஒளித்து வைத்துக் கொண்டு அனுப்பமாட்டேன் என்கிறாயல்லவா? இந்த நிமிஷத்தில் அவளை இங்கே கொண்டு வந்தால் ஆயிற்று. இல்லாவிடில் இந்திரஜித்திடம் சொல்லி உம்மைச் சிரச்சேதம் செய்து விடுவோம், பிள்ளாய்!......"

"பொன்னு! இதோ பாரு. மதுபானம் குடி கெடுக்கும். ரொம்பப் பொல்லாதது. குடிப்பதை விட்டு விடு" என்றான் ரகுராமன்.

"எஜமாங்களே, இதோ பாருங்க! நீங்க காலைக் காப்பி குடிக்கிறதை நிறுத்தி விடுங்க. நானும் மாலைக் காப்பி குடிக்கிறதைவிட்டுடறேன்" என்றான் பொன்னன்.

இம்மாதிரியாக, ஒவ்வொரு குடிகாரனையும் இரண்டு மூன்று படித்த, நாகரிக இளைஞர்கள் சுற்றிக் கொண்டு பிரசங்கப் பெருமழை பொழியும் காட்சிகள் மாலை நேரங்களில் காணப்பட்டன.

[அடுத்த இதழில் முடியும்]

# GOODYEAR

சைக்கிள், ரிக்ஷா டயர்களையே வாங்குங்கள்.

நீடித்து திறம்பட சேவை யளிக்கும்




ஒரு புதிய டயருக்கு ஒரு புதிய ஹெவிடியூடி குட்இயர் டியூப் அவசியம்

# ஒரு கடியாரம் வாட்டர்புரூப் ஆக ஏன் இருக்க வேண்டும்?

முதல் நோக்கில், ஒரு வாட்டர் புரூப் வாட்சிலுள்ள ஒரே சௌகரியம் அதைக்கட்டிக் கொண்டே வேண்டுமானால் ஜலத்தில் நீஞ்சலாம் என்பதுதான்.
ஆனால் விஷயம் அதுமட்டுமல்ல. உலகிலேயே முதன்முதல் வாட்டர்புரூப் கைக்கடியாரம் ஆவது தவிர, இன்றளவும் ஈடு இணையற்று விளங்கும் நிரந்தர வாட்டர்புரூப் ரோலெக்ஸ் ஆயிஸ்டரானது ஜலம் புகாதபடி பாதுகாப்பு தருவதுடன் நிற்பதில்லை.
ஒரு கடியார யந்திரத்திற்கு நாசகரமான தூசி, அழுக்கு, தூள், வியர்வை முதலியன கூட உட்புகாமல் தடுக்கப்படுகின்றன. ஜெனிவா நிபுணர்களின் கைத்திறனின் பயனாகிய விசிட்டப்பட்ட ஆயிஸ்டர் கேஸ், ரோலெக்ஸ் யந்திரம் பிரதிதினமும் 4,32,000 டிக்-டிக் சப்தங்களுடன் (அதற்கு அதிகமுமில்லை குறைவுமில்லை) நேர்மையாகவே ஓடுவதற்கு உதவி புரிகின்றது.



எமது ரோலெக்ஸ் ஆயிஸ்டர் கடியார இனங்களையெல்லாம் வந்து பாருங்கள்—ரோலெக்ஸ் ஆயிஸ்டர் டேட் உள்பட. இந்த கடியாரம் டயல் மீதுள்ள ஒரு சிறு ஜன்னல் மூலம் அன்றைய தேதியை தானாகவே தெளிவாகக் காட்டுகிறது. நேரில் வரமுடியாவிட்டால் ஒரு இலவச காட்லாக் அனுப்புகிறோம்.



## ரோலெக்ஸ்

தென்இந்தியாவில் ஏக விநியோகஸ்தர்கள்:

**மெஸர்ஸ் பி. ஆர் & ஸன்ஸ் லிட்.,**

மவுண்ட் ரோட், மதராஸ்

R. 737

# அசல், நெய் ஹாஸ்யம்

சாமா























# சரியான பேரம்

கே. ராமசாமி

சமீபத்தில் புதிதாக ஸ்தாபிக்கப்பட்ட 'மோஹினி' குக்கர் கம்பெனியைத் தமிழ் நாட்டில் பலர் அறிந்திருக்கக் கூடும். அந்தக் கம்பெனியின் முதலாளியான பஸவண்ண ராவ் பிரபல பத்திரிகைகளில் விளம்பரங்கள் மூலமாகவும் சுவரொட்டிகள் மூலமாகவும் 'மோஹினி' குக்கரின் விசேஷ அம்சங்களை விவரமாகப் பொது மக்களிடையே பரப்பி வந்தார். நேர்த்தியான சாப்பாட்டைக் குறுகிய காலத்தில் குறைந்த செலவில் சமைத்துத் திருப்தி அளிக்கக் கூடியது 'மோஹினி' குக்கர் ஒன்றே என்பது அவர் விடுத்த விளம்பரங்களின் சாராம்சம் ஆகும்.

பஸவண்ண ராவ் இத்துடன் நிற்கவில்லை. 'மோஹினி' குக்கரில் அறுசுவையுடன் கூடிய உணவை அரை மணி நேரத்தில் அற்புதமாகச் சமைத்துக் காட்டவல்ல ஒரு டஜன் ஏஜண்டுகளையும் கம்பெனியில் அமர்த்திக் கொண்டார். ஊர் ஊராகச் சென்று தேவையானவர்களுக்கு 'மோஹினி' குக்கரின் திவ்யமான சமையலை நேரிடையாகச் செய்து காட்டி, அவர்களின் நன்மதிப்பைப் பெற்று 'ஆர்டர்களை' அமோகமாகப் பெற வேண்டும் என்பதுதான் பஸவண்ண ராவ் தம் ஏஜண்டுகளுக்கு இட்ட கட்டளையாகும்.

இவ்வாறு நியமிக்கப்பட்ட ஏஜண்டுகளில் சென்னை நகர வட்டாரத்துக்கு அனுப்பப் பட்டவர்தான் பீமாச்சாரி. பத்தாவது படிவப் பரீட்சையில் தட்டுத் தடுமாறித் தேறியபின் வேறு ஒரு வேலையும் கிடைக்காததாலும், இளவயதிலிருந்தே சமையற் கலையில் ஓர் தனி ஆர்வத்தைக் காட்டி வந்ததாலும் பீமாச்சாரி 'மோஹினி' குக்கர் கம்பெனியில் ஏஜண்டு வேலை செய்யும் வாய்ப்பை நழுவ விட விரும்பவில்லை.

சென்னையில் முதன் முதலாகப் பீமாச்சாரி சந்தித்தது ஹைகோர்ட் வக்கீல் ஹரிஹர சர்மாவைத்தான். ஏதோ குடும்ப காரியமாகத் தம் மனைவி மக்களைத் திண்டிவனத்துக்கு அனுப்பிவிட்டுத் தாம் மட்டும் மிகுந்த சிரமத்துடன் ஓர் ஹோட்டலில் சாப்பிட்டு வந்தார் சர்மா. இரண்டு மாதங்களாகச் சற்றேறக் குறைய ஒரே விதமாக ருசிக்கும் ஹோட்டல் சாப்பாடு சர்மாவுக்கு வேம்பாகக் கசந்தது. ஆகவே அவர் பீமாச்சாரியை வெகு ஆவலுடன் வரவேற்றதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை.

'மோஹினி' குக்கரில் அறுசுவையுடன் கூடிய ஓர் அற்புத சாப்பாட்டை அரைமணி நேரத்தில் சர்மாவின் எதிரே பீமாச்சாரி சமைத்துக் காட்டினார். நேர்த்தியான அவ்வுணவை முற்றிலும் ருசித்து ரசித்துச் சாப்பிட்டுக் களித்தார் சர்மா. தம் மனைவியின் இன்பச் சமையலுக்கு ஈடாக ஒரு குக்கரும் செய்யக்கூடும் என்பதை அனுபவ வாயிலாக முதன் முதலாகத் தம் வாழ்க்கையில் உணர்ந்தார் நமது சர்மா. 'மோஹினி' குக்கரின் சாப்பாட்டை மோஹனப் புன்னகையுடன் உண்டு முடித்த சர்மா பீமாச்சாரியையும், அவரது 'மோஹினி' குக்கரையும் வாயாரப் புகழ்ந்தார்.

உண்டு முடித்த பின் பீமாச்சாரியையும் அழைத்துக்கொண்டு தம்முடைய காரியாலய அறைக்குச் சென்றார் சர்மா. அங்கே போனதும் நிறைந்த மனத்தோடு சிறிதுநேரம் வெற்றிலை பாக்குப் போட்டவாறு அளவளாவினர்.

சம்பாஷணை முடிந்த பின் 'மோஹினி' குக்கர் கம்பெனி முதலாளி பஸவண்ண ராவுக்குப் பின்வரும் கடிதத்தையும் எழுதி அன்றையத் தபாலிலேயே சர்மா அனுப்பி வைத்தார். கடிதம் பின்வருமாறு:—

'மோஹினி' குக்கர் முதலாளி பஸவண்ண ராவுக்கு.

தங்கள் கம்பெனியின் 'மோஹினி' குக்கரை ஓர் அற்புத சிருஷ்டியாகவே நான் கருதுகிறேன். உங்கள் ஏஜண்டு மூலம் ஓர் அருமையான விருந்தைச் சாப்பிடும் வாய்ப்பு இன்று எனக்குக் கிடைத்தது. உங்கள் குக்கரின் சாப்பாட்டிலே சொக்கிப் போன எனக்கு இன்னும் அதிகமாகப் புகழ வார்த்தைகள் கிடைக்கவில்லை. வாழ்க மோஹினி குக்கர்! வாழ்க பஸவண்ணராவ்!

ஹரிஹர சர்மா, (ஹைகோர்ட் வக்கீல்.)

குறிப்பு—ஏஜண்ட் பீமாச்சாரி கொண்டு வந்த மாதிரி குக்கரை இன்றே ரயில்வே பார்ஸலில் உங்கள் கம்பெனி விலாசத்துக்கு அனுப்பியிருக்கிறேன். அதே சமயம் பீமாச்சாரியின் சம்மதம் பெற்று அவரை இன்று முதல் என் வீட்டுச் சமையல்காரராக அமர்த்திக் கொண்டேன் என்பதையும் இத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஹரிஹர சர்மா.

# வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்
# கால்கேட் டூத் பவுடர்
# மூன்று நன்மைகளையும் அளிக்கிறது!

✓ வாயில் நறுமணம்!
✓ ஒளிவீசும் பற்கள்!
✓ சொத்தை குறையும்!

வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத்பவுடரை உபயோகியுங்கள்:

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் ப்ற்களை 2 நிமிஷம் பிரஷ்கொண்டு தேய்க்கவும்.
- பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லாவற்றையும் தேய்க்கவும்.
- எப்போதும் ஈற்றிலிருந்து பல்நுனி நோக்கி தேய்க்கவும்.




**கைகண்ட முறையை இன்றே கையாளுங்கள்!**

TPC/14

**பல் டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**



ரமண்லால் வஸந்தலால் தேசாய் - மொழிபெயர்ப்பு: ரா. வீ.

## 44. குயில் இசைக்கும் கீதம்

தான் வேலைகளை முடித்துக் கொண்டு திரும்பி வந்த வத்ஸராஜ், "ஏன், ராதா! அண்ணி நன்றாகப் பாடுவார்கள் என்று சொன்னாயே?" என்றான். அவன் பேசிய அந்தப் பேச்சு அவனை ஒரு நல்ல சங்கீத ரசிகன் என்று நிரூபணமாக்கியது.

"ஆமாம், ஆமாம்! அண்ணியின் பாட்டைக் கேட்க ஆரம்பித்து விட்டால் அப்புறம் எழுந்திருக்கவே மனம் வராது!" என்று ராதா ஆமோதித்தான்.

"இத்தனை நாள் நீ அண்ணியோடு இருந்தாயே! ஏதாவது கற்றுக் கொண்டாயோ, இல்லையோ?—ஒரு பாட்டுப் பாடேன், பார்ப்போம்!" என்றான் வத்ஸராஜ்.

"போதும், போதும்! நான் பாட ஆரம்பித்து விட்டால் அப்புறம் நீங்கள் இங்கே நிற்கவே மாட்டீர்கள், ஓரேயடியாக ஓட்டம் பிடித்து விடுவீர்கள்!" என்று சொல்லிச் சிரித்தான் ராதா.

கணவனும் மனைவியும் மிகவும் வற்புறுத்தவே, கோகிலா பாடச் சம்மதித்தாள். அவளுக்குப் பொதுவாகவே 'பிகு' செய்து கொள்ளும் கலை அவ்வளவாகத் தெரியாது. அதனால் அந்தக் கிராமியத் தம்பதிகள் தன் துயரத்தை மாற்றுவதற்காகவே இப்படி ஒரு யுக்தியைக் கையாண்டிருக்கிறார்கள் என்பது அவளுக்குத் தெரிய நியாயம் ஏது? எனவே, அவள் தன் இனிமையே உருவான குரலில் கபீர்தாஸரின் பாடல் ஒன்றை உணர்ச்சியுடன் பாடலானாள்:—

"மாயை என்பதோர் மேகமாம்
மதிமுகத்தை அது மயக்குமாம்
காமமும் குரோதமும் கார்முகிலாகி—அதில்
குமுறிக் கர்ஜிக்கும் அஹங்காரமாம்
லோபமும் மோகமும் மாரிநீராகி-இம்
மண்ணுலகை வெள்ளக் காடாக்குமாம்.
மாயை என்பதோர் மேகமாம்!"

இரவின் அமைதியில் இன்பம் தருவது பால் பொழியும் நிலவா? அல்லது அமிர்தத்தை வர்ஷிக்கும் இன்னிசையா? இந்தக் கேள்விக்கு விடை கண்டு பிடிப்பது அவ்வளவு சுலபமானதல்ல. ஒன்று கண்களுக்குக் குளுமை தருகிறது. அதனால் அது இருதயத்துக்கும் இன்பம் தருவதாக அமைந்து விடுகிறது. இன்றொன்று இருதயத்துக்கு இன்பம் தருகிறது. எனவே, கண்களுக்கும் இன்பம் தரும் கவர்ச்சிப் பொருளாகி விடுகிறது. இன்னிசையில் இன்னொரு விசேஷம் என்னவென்றால், தண்ணிலவைப் பொழியும் வெண்ணிலவு காயா விட்டாலும் மனத்தில் மோகன லாகிரியை எழுப்பி அத்தகைய பிரமையை உண்டு பண்ணி விடுகிறது; கற்பனை நிலவைச் சிருஷ்டித்து விடுகிறது.

மண்ணுலகில் உள்ள எழில்கள் அனைத்திலும் சிறிதளவாவது மண் சம்பந்தமும் மண் வாசனையும் இருக்கின்றன. ஆனால் சங்கீதத்தின் சௌந்தர்யம் ஒன்றில் மட்டும்தான் அத்தகைய கலப்படம் எதுவுமே கிடையாது. அப்படி எங்கேயாவது கொஞ்ச நஞ்சம் மண் வாசனை ஒட்டிக் கொண்டிருந்தாலும் சங்கீதம் அதைக் கரைத்து உருக்கிப் பரிசுத்தமாக்கி விடுகிறது. இடையறாத களங்கமற்ற ரசப் பிரவாகத்தைச் சங்கீதத்திலேதான் காண முடியும். குற்றங் குறையற்ற எழில் ஏதாவது இந்த உலகத்தில் அநுபவிப்பதற்கு இருக்கிறது என்றால் அது சங்கீதம்தான், சங்கீதம்தான்; சங்கீதம்தான்.

"பலே! பலே! பாட்டு ரொம்ப ரொம்பப் பிரமாதம்! இம்மாதிரி இதுவரை நான் கேட்டதேயில்லை! ஆகா! என்ன குரலினிமை! என்ன குரலினிமை! யார் பாடுகிறது?" என்று பக்கத்து வீட்டிலிருந்த கிழவர் கேட்டார். தமக்குப் பிடித்த விஷயத்தைப் புகழாமல் இருக்க அவருக்குத் தெரியாது; தெரிந்தாலும் அவரால் இருக்க முடியாது. அது அவரோடு பிறந்த பிறவிக் குணம்.

"தாத்தாவா? இங்கே எங்கள் வீட்டுக்கு அண்ணி வந்திருக்கிறார்கள். அவர்கள் பாடியதுதான் இந்தப் பாட்டு!"—கிழவரின் புகழ்ச்சியைப் பெறற்கரிய பெரும் நற்சாட்சிப் பத்திரமாகக் கருதிய ராதா மகிழ்ச்சியுடன் பதில் அளித்தான்.

"அப்படியா? ரொம்ப சந்தோஷம். உன் அண்ணியிடம் அன்னை பார்வதி அருள் புரிவாள் என்று சொல்லு!" என்று கிழவர் வாழ்த்தினார்.

"தாத்தா! நிஜமாக அண்ணியே அன்னை பார்வதியாட்டமாகத்தான் இருக்கிறார்கள்!" கிழவரின் புகழ்ச்சி நிறைந்த அந்த வாழ்த்தில் ராதா ஒரு சிறிய திருத்தம் செய்தான்.

சங்கீதத்தைப் பற்றியும், மாதர்களைப் பற்றியும் அன்னை பார்வதியைப் பற்றியும் கிழவர் கதை கதையாகச் சொன்னார். கடைசியில் இம் மூன்றும் ஒன்றே என்று வெகு அழகாகச் சாதித்தார். சிவ பார்வதியைப் பற்றி அவர் அறிந்திருந்த கதைகளைக் கேட்டு யாருமே பிரமிக்கத்தான் வேண்டும்.

இரவு வெகு நேரமாகிவிடவே, எல்லோரும் தூங்கி விட்டனர். காலையில் சீக்கிரம்

எழுந்து ராதா வீட்டைச் சுத்தம் செய்தாள். பிறகு மாடுகளுக்குத் தண்ணீர் காட்டித் தீனி வைத்துக் கவனிக்கச் சென்றாள்.

கோகிலாவும் சூரியோதயத்துக்கு முன்னால் எழுந்து வந்து முற்றத்தை அழகு படுத்தினாள். பிறகு வாசலுக்கு நீர் தெளித்துக் கோலம் போட்டாள். தெருவிலேயே வத்ஸராஜின் வீட்டு வாசல் வெகு சிறப்பாக விளங்கியது. அவளுக்குக் கோலம் போட மாவும் காவிப் பொடியும் எங்கிருந்து எப்படி கிடைத்ததோ, யார் கண்டார்கள்? கோலம் போட்டு முடித்துவிட்டு வீட்டுக்குள் வந்த கோகிலா கடவுளை வணங்கி 'நாத விந்து கலாதி நமோ, நமோ!' என்னும் தோத்திரப் பாடல் பாடினாள்.

முதிர்ந்த பிராயத்தின் காரணமாகத் தூக்கத்தையும் கண்களையும் இழந்து விட்ட பக்கத்து வீட்டுக் கிழவர் தம் வீட்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். கோகிலாவின் அந்தப் பாட்டைக் கேட்டு அவர் மெய் சிலிர்த்தார். அவர் நல்ல சங்கீதம் கேட்டு நாதப் பிரும்மத்தில் தம் மனத்தை லயிக்க விட்டு எத்தனையோ நாட்கள் ஆகி விட்டன.

ஒட்டுத் திண்ணையில் உட்கார்ந்த வண்ணமே கோகிலா பாட்டை முடித்ததும், "ராதா, உன் அண்ணி குயிலின் குரலை வரமாக வாங்கிக் கொண்டு பிறந்திருக்கிறார்கள் போலிருக்கிறது!" என்றார். பிறகு, "ஏன், அம்மா! உன் பெயர் என்ன, அம்மா?" என்று கோகிலாவையே கேட்டார்.

"என் பெயரா? கோகிலா!" என்று பதில் அளித்தாள் கோகிலா.

"பலே பேஷ்! பெயர் வைத்தவர்கள் ஆசையை நீ பூர்த்தி செய்து விட்டாயே! கோகிலா என்றாலும் குயில் என்றாலும் ஒன்றுதானே?" என்ற கிழவர், "ஏன், அம்மா! நீ தினம் இத்தனை விடியற் காலையில் எழுந்து விடுவாயா?" என்று கேட்டார்

"எழுந்து விடுவேன்!" என்றாள் கோகிலா.

"சூரியோதயத்துக்கு முன்பு வீடு வாசல் கூட்டி மெழுகி விட வேண்டும். சூரியோதயம் ஆகும் வரை கைகால் கழுவிச் சுத்தம் செய்து கொள்ளாமல் அசுத்தமாயிருப்பவர்களைப் பார்ப்பது கூடப் பாவம்!" என்று கிழவர் தம் அபிப்பிராயத்தைச் சொல்ல ஆரம்பித்து விட்டார். கோகிலா அவ்விடத்தை விட்டுச் சமையலறைப் பக்கம் போன பின்பும் கூட அவர் பாட்டுக்குப் பேசிக் கொண்டிருந்தார். கண்கள் குருடான பின் பேசுவதற்குப் பக்கத்திலே மனுஷ்யர்கள் இருக்க வேண்டும் என்பது அவசியம் இல்லை அல்லவா?




கோகிலா சமையல் வேலையை வலியத் தானே ஏற்றுக் கொண்டாள். வேலை எதுவுமே இல்லாமல் வீட்டில் சும்மா உட்கார்ந்திருப்பதென்றால் எந்தப் பெண்ணுக்குத்தான் பிடிக்கும்?

கோகிலா அந்தத் தெருவில் உள்ளவர்களை மட்டும் அல்ல; கிராமத்தில் உள்ளவர்களுடைய கவனத்தையே கவர்ந்திருந்தாள். அவளைப் பற்றிப் பேசாதவர்கள் அந்த ஊரில் யாருமே கிடையாது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

கோகிலா அவர்கள் எல்லோரையும் விடத் தனி ரகத்தைச் சேர்ந்தவளாக இருந்த பொழுதிலும் அவர்களோடு வெகு சரளமாக ஒட்டிப் பழகினாள். கிராமத்தின் அறியாப் பெண்கள் தங்கள் அறியாமையை அறிந்து தாழ்வு மனப்பான்மை கொள்ளாவண்ணம் அவள் அவர்களோடு அற்புதமாகப் பழகினாள். கிராமத்து மக்களின் சூது வாது அறியாத நிஷ்களங்கமான சுபாவம் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. நகரவாசிகளிடையே காணப்பட்ட புறத்தூய்மையை அவர்களிடம் காண முடியவில்லை. அதேபோல, நகரவாசிகளிடம் இருந்த துவேஷ புத்தியையும் அவர்களிடம் காணமுடியவில்லை. நகரவாசிகளிடம் காணப்படும் புறத்தூய்மையும் நாட்டுப் புறத்தார்களின் அணிகலனாக விளங்கும் அகத்தூய்மையும் ஒன்று கலந்து விட்டால் எவ்வளவு அழகாயிருக்கும்? — கோகிலாவின் மனத்தில் இத்தகைய எண்ணங்கள் இடம் பற்றின.

ராதாவைப் பார்க்கும் சாக்கில் கோகிலாவைப் பார்த்துப் பேசிப் பழகி அறிமுகம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்துடன் வரும் கிராமத்துப் பெண்டிர்களோடு பல குழந்தைகளும் வருவார்கள். அக்குழந்தைகளின் தலைமயிர் பறந்து பரட்டையாகக் கிடக்கும். துணிமணிகள் நர்விசாக இராது. உடற் சுத்தம் என்பதையே சிறிதும் காண முடியாது. ஆயினும் எத்தனையோ குழந்தைகளின் முகத்தில் துறுதுறுப்பு தாண்டவமாடும். தேகக் கட்டும் நன்றாக அமைந்திருக்கும். பார்க்கப் பார்க்கப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று தோன்றக் கூடிய அளவுக்குப் பல குழந்தைகள் இருந்தார்கள்.

கோகிலா ஒரு பையனை அன்புடன் தன் அருகில் அழைத்து விளையாட்டுக் காண்பித்தாள். தின்னத் தின்பண்டமும் கொடுத்தாள். பெற்றோர்களை வசப்படுத்தி வெற்றிகொள்ள வேண்டுமானால் வெகு சுலபமான வழி அவர்களுடைய குழந்தைகளே. இந்த உலகத்தில் தாய் தந்தை



யர்கள் எவ்வித ஒளிவு மறைவுமின்றி யாரிடமாவது அதிகப் பட்சபாதம் காட்டுகிறார்கள் என்றால் அது தங்கள் குழந்தைகளிடமே. கண்கூடான ஒரு விஷயத்துக்குச் சான்று வேண்டுமானால் கைப் பொன்னுக்குக் கண்ணாடி கேட்கும் கதையாகத்தான் முடியும். உலகத்தில் உள்ள எல்லா விஷயங்களுக்கும் ஒரு விதி விலக்கு உண்டு. ஆனால் தாய் தந்தையரின் பிள்ளைப் பாசத்துக்கும், அவர்களிடையே அவர்கள் காட்டும் பட்சபாதத்துக்கும் ஒரு விதிவிலக்கு இல்லையாதலால், இந்தக் குற்றம் மன்னிக்கத் தகுந்ததே.

தன் குழந்தை கோகிலாவோடு ஒட்டிக்கொண்டு விளையாடுகிறான் என்பதைக் கண்ட தாயாருக்கு அளவு கடந்து அகமகிழ்ச்சி ஏற்பட்டது. கோகிலா நீர் கொண்டு வந்து பையனின் அழுக்கேறிய முகத்தைக் கழுவினான். பறந்து புழுதி படிந்திருந்த தலைமயிரைக் கொஞ்சம் கோதி விட்டாள். மேகத் திரையில் மறைந்து வெளி வந்தால் சந்திரன் பார்ப்பதற்கு எவ்வளவு எழிலுள்ளவனாகத் தோற்றமளிப்பான்? அப்படித் தோன்றினான் அந்தப் பாலகன். தன் தனயனின் முகச் சோபையைப் பார்த்த தாயாரின் பெருமிதத்தைச் சொல்ல வேண்டுமா?

“ஆகா! எத்தனை அழகா யிருக்கிறான் குழந்தை!” என்று கோகிலா பாலகனைப் புகழ்ந்தாள். அவ்வளவுதான்; அதைக்கேட்டதும் தாயாருக்கு உச்சி குளிர்ந்து விட்டது! அகமும் முகமும் மலர்ந்து விட்டன. உண்மையில் தன் குழந்தை அழகானவன்தான் என்ற திட நம்பிக்கையும் ஏற்பட்டது. அழகிய குழந்தையின் உடலை அலங்கரித்திருந்த அழுக்குச் சட்டை அவளது கண்களையே உறுத்தியது. ‘வீட்டுக்குப் போனதும் குழந்தைக்குத் தூய ஆடைகள் அணிவிப்பேன்!’ என்று அவள் அந்த இடத்திலேயே மனத்தில் தீர்மானமாக நிச்சயித்துக் கொண்டாள்.

மிருகங்களைப் போலவே, பாலகர்களுக்கும் உண்மை அன்பைப் புரிந்து கொள்ளும் அபாரத் திறமை இருக்கிறது. எத்தனையோ மனிதர்கள் மேலுக்கு அன்பைச் சொரிபவர்கள் போல் நடிக்கிறார்கள். ஆனால் அப்படி அன்பு காட்டுபவர்கள் எல்லோரையுமே குழந்தைகளிடம் அன்பு கொண்டவர்கள் என்று கூறிவிட முடியாது.

யார் வீட்டுக்காவது போவதென்றால், தாய் தந்தையர் தங்கள் குழந்தைகளை முன் நடத்திச் செல்வது ஒரு சம்பிரதாயமாக இருந்து வருகிறது. இதனால் பலரும் மேல் பூச்சு நாகரிகத்தை உத்தேசித்து, ‘குழந்தை ரொம்பச் சமர்த்தா யிருப்பான் போலிருக்கிறதே! என்ன பெயர் இவனுக்கு?’ என்று கேட்பார்கள். தாய் தந்தையர் தவறாக எடுத்துக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்பதற்காக ஏதேதோ விளையாட்டுக் காட்டுவதாகவும் பாசாங்கு செய்வார்கள். உள்ளத்திலே அவர்களுக்குப் பாலகர்களிடம் பிரியம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் நடிப்புக்கு மட்டும் ஓர் குறைவும் இராது.

ஆனால் பச்சிளம் பாலகர்கள் பலே கைகாரர்கள்! நாணயப் பரிசோதகன் பார்த்த மாத்திரத்தில் ‘இது நல்ல நாணயம், இது நல்லதில்லாத நாணயம்’ என்று சுண்டி எடுத்து விடுவது போல் பாலகர்களும் ஆளைப் பார்த்த மாத்திரத்திலே அவனது உள்ளத்தின் ஆழத்தை அளந்து கணக்காக அறிந்துகொண்டு விடுவதில் தேர்ந்தவர்கள்.

'அது ஒரு குழந்தையா? கோட்டான் அல்லவா?' என்றோ அல்லது 'வால் ஒன்றுதான் பாக்கி. சுத்தக் குரங்கு!' என்றோ பட்டம் கட்டி, வீட்டை விட்டு வெளியே வந்தபின் இவர்கள் நம்மைப் பரிகாசம் செய்வார்கள். நிஜமாகவே நாம் ஹனுமாரின் அவதாரமாக இருந்தாலும், இவர்கள் 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடுகிற இடத்திலே!' என்று சொல்லி நம்மைக் கொண்டாடுவார்கள் என்பதை எடை போட்டுப் புரிந்து கொண்டு தராதரம் பார்த்துப் பழகுவதில் குழந்தைகளுக்கு ஈடு குழந்தைகள் தான். தங்களிடம் உண்மை அன்பு செலுத்தக் கூடியவர்கள் என்று தெரிந்தால் தான் அவர்களிடம் நெருங்கிப் பழகுவார்கள்!

கோகிலாவின் குணத்தை அறிந்து கொண்டு விட்ட கிராமத்துக் குழந்தைகள் அவளைச் சுற்றிக் குழுமி விடுவார்கள். அவர் அவர்கள் பிராயத்துக்குத் தகுந்தபடி வேடிக்கை காட்டி, விளையாட்டுக் காட்டி, பாட்டுப் பாடிக் கதை சொல்லிக் கோகிலா குழந்தைகளை மகிழ்ச்சியில் ஆழ்த்துவாள்.

"ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்கலாகாது
பாப்பா!"

ஆகா! அவள் பாடிய அந்தப் பாட்டைக் கேட்டு எத்தனை குழந்தைகள் நற்குண நற்செய்கைகளைக் கற்றுக் கொண்டு விட்டன?

நாளடைவில் குழந்தைகளின் தாய்மார்களுக்கே அழுக்குத் துணியுடனும் அழுக்கு உடம்புடனும் கோகிலாவிடம் வர வெட்கமாகப் போய் விட்டது. அவர்கள் கோகிலாவைப் பார்த்துப் பார்த்துத் தூய ஆடையுடனும் தூய உடலுடனும் இருக்கக் கற்றுக் கொண்டார்கள்.

உடம்பு தேய்த்துக் குளித்துச் சுத்தமான ஆடை உடுத்தி வரும் கிராமத்துப் பெண்மணிகள் எழிலரசிகளாகவே விளங்கினார்கள்.




"ஆகா! இந்தக் கிராமயச் சூழ்நிலைக்குள்ளே எத்தகைய எழிலுருவங்கள் ஒளிந்திருக்கின்றன?" என்று கோகிலாவே வியந்தாள் என்றால் வளர்த்துவானேன்?

கோகிலா அடிக்கடி பக்கத்து வீடுகளுக்கெல்லாம் போய் வரலானாள். கோகிலா தங்கள் வீட்டுக்கு வந்து விட்டாள் என்றால், யாருக்கும் கிடைக்கக் கூடாத பெரிய கௌரவம் தங்களுக்குக் கிடைத்து விட்டதாகவே எண்ணிப் பெண்மணிகள் பெரு மகிழ்ச்சி கொள்வார்கள். தங்கள் குடிசையை அவள் வந்து பார்த்தால் நன்றாயிருக்க வேண்டும் என்பதற்காகச் சுத்தம் செய்து வைப்பார்கள். தட்டுமுட்டுச் சாமான்கள், மூட்டை, சாணம், குப்பை, கூளம் ஆகியவை அவள் கண்களில் படக் கூடாது என்பதற்காகத் தங்களால் இயன்ற முயற்சிகள் எல்லாம் செய்வார்கள். கோகிலா அவர்கள் வீட்டில் போய் உட்கார்ந்து கொண்டு, அவர்களுடைய கதைகளைக் கேட்பாள்; சுக துக்கங்களை விசாரிப்பாள். அவர்கள் காரியத்துக்குக் கொஞ்சம் ஒத்தாசை செய்வாள். அவர்கள் வீட்டு முற்றத்துக்குக் கோலமிட்டு அழகு செய்வாள். ஆசையும் ஆர்வமும் உள்ள பெண்களுக்குக் கோலம் போடக் கற்றுக் கொடுப்பாள். இவற்றைச் சொல்வதன் கருத்து என்னவென்றால், நான்கைந்து நாட்களுக்குள்ளேயே அந்தக் கிராமத்தில் உள்ள பெரும்பாலானவர்களின் மனத்தை அவள் கொள்ளை கொண்டுவிட்டாள்.

தினம்போல் ஒரு நாள் காலை எழுந்ததும் பக்கத்து வீட்டுக் கிழவர் கோகிலாவின் பாட்டைக் கேட்பதற்காகக் காதைத் தீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். ஆனால் சூரியன் உதித்து வெகு நேரம் ஆகியும் கோகிலாவின் குயிலிசை கேட்கவில்லை. ஆதுரத்துடன் அவள் பாட்டை எதிர் நோக்கியிருந்த கிழவர் ஆவலை



முறிந்த கை, கால், இடுப்பு எலும்புகளை மீண்டும் இணைத்துப் புத்துயிரும் புது வாழ்வும் அளிப்பதில் கை தேர்ந்தவர், புத்தூர் வைத்தியர் ஆர். செங்கல்ராஜு அவர்கள். சென்னை, சிந்தாதிரிப்பேட்டையில் சிகிச்சை நிலையம் நிறுவிப் புகழுடன் நடத்தி வருகிறார். மேற்படி சிகிச்சை நிலையத்துக்கு இந்திய சர்க்கார் சுகாதார மந்திரி காரியாலயத்தைச் சேர்ந்த விசேஷ அதிகாரியான டாக்டர் கே. சி. கே. இ. ராஜா அவர்களுடன் ருஷ்ய டாக்டர்களான அப்ரஸாவ், ஸ்கார்னியாகாவோ இருவரும் சமீபத்தில் விஜயம் செய்தனர். புத்தூர் வைத்திய சிகிச்சை முறைகளைப் பற்றி வைத்தியர் செங்கல்ராஜு ருஷ்ய டாக்டர்களுக்கு விளக்கிக் காட்டினார். அவர்கள் மேற்படி சிகிச்சை முறைகளை வியந்து பாராட்டினார்கள்.

அடக்க மாட்டாதவராகத் தட்டித் தடவிக் கொண்டு அவள் வீட்டு வாசலுக்கு வந்து, "ஏன் அம்மணி! இன்றைக்கு ஏன் இத்தனை நேரம்? உடம்பு சௌக்கியம்தானே?" என்று அன்பு சுரக்க விசாரித்தார்.

கிழவர் கோகிலாவை அம்மணி என்றுதான் கூப்பிடுவது வழக்கம். முற்றத்தில் நின்று கொண்டிருந்த வத்ஸராஜ், "என்ன, தாத்தா! நான்தான் வத்ஸராஜ்! அண்ணி இன்னும் எழுந்திருக்க வில்லையே!" என்றான்.

"என்ன? இன்னும் எழுந்திருக்க வில்லையா?" என்று வியப்பும் ஆதுரமும் பொங்கக் கேட்டார் கிழவர்.

"இல்லை. நேற்று இரவிலிருந்து அவர்களுக்கு ஜுரம்!"

"என்ன, ஜுரமா?" என்று துடிப்புடன் கேட்ட கிழவர், "அம்மணி விழித்துக்கொண்டிருக்கிறாளா?" என்றார்.

"விழித்துக் கொண்டு இருக்கிறார்கள்!"

"வத்ஸராஜ்! அப்படியானால் என்னை மெதுவாக அவளிடம் அழைத்துப் போயேன். உடம்பு இப்பொழுது எப்படி இருக்கிறது என்று நான் பார்க்கிறேன்!" என்றார் கிழவர்.

கிழவருக்கு எல்லா வித்தைகளுமே வரும். அவருக்கு வைத்தியமும் கொஞ்சம் தெரிந்திருந்தது. நீண்ட ஆயுளில் எதுவுமே கற்றுக் கொண்டால் தெரிவது இயல்புதானே?

வத்ஸராஜ் கிழவரை மெதுவாகத் தன் வீட்டுக்குள் அழைத்துச் சென்றான். சிறிதும் கண் பார்வை இல்லாத கிழவர், கண்களை விழித்து ஒரு முறை பார்த்தார். பிறகு மெதுவாகக் கோகிலாவின் படுக்கையருகில் போய் உட்கார்ந்து கொண்டு கடவுளின் பெயரைச் சொல்லிக் கையைப் பிடித்துச் சாவதானமாக நாடி பார்த்தார்.

"ஒன்றும் கவலைப் படாதே! ஆண்டவன் இருக்கிறார்!" என்று சொன்ன கிழவர் சிறிது நேரம் அங்கேயே நிலைக் குத்தலிட்டவர் போல் உட்கார்ந்திருந்தார். பிறகு மெதுவாக எழுந்து தம் வீட்டு மேடைக்கு வந்தார். அவரைக் கொண்டு வந்துவிடுவதற்காக வத்ஸராஜும் பின்னோடு வந்திருந்தான். "வத்ஸராஜ்! கடவுள் மேலே பாரத்தைப் போடு. வைத்திய நாதன் தானே காப்பாற்றுவான். ஆனால் அம்மணிக்கு உடம்பு ரொம்ப சரியில்லைதான்!" என்றார்.

"என்ன சொல்கிறீர்கள், தாத்தா? இப்பொழுது நான் என்ன செய்ய?" என்று துடித்தான் வத்ஸராஜ்.

"ஒரு நல்ல வைத்தியரோ டாக்டரோ இல்லாமல் காரியம் நடக்காது என்று தோன்றுகிறது!"

"இந்த ஊரிலே நாம் வைத்தியரை எங்கே போய்க் கொண்டு வர முடியும்?" என்று கேட்டான் வத்ஸராஜ்.

அதற்குள் பக்கத்தில் வந்து நின்ற ஒரு ஆள், "நாத் பாபாவிடம் கொண்டு போய் முடி கயிறு போட்டுக் கொண்டு வாயேன்!" என்று ஆலோசனை கூறினான்.

"அங்கே எப்படி அழைத்துப் போக முடியும்? ஜுரம் ரொம்ப ஜாஸ்தியாக இருக்கிறதே!" என்று சொன்ன வத்ஸராஜுக்கு அப்புறம் அங்கே இருப்புக் கொள்ள வில்லை. உடனே தன் வீட்டுக்குள் ஓடி வந்தான். நகரத்தில் நாசூக்காக வாழ்ந்து கொண்டிருந்த பூப்போன்ற தேகம் படைத்த இந்த அம்மாளை நாம் இப்படிக் கட்டாயப்படுத்தி நடத்தி அழைத்து வந்தது தவறு. அதனால்தான் உடம்பு நெகிழ்ந்து கடுஞ் சுரம் வந்து விட்டது என்று அவனுக்குத் தோன்றியது. என்ன செய்வது என்று ஒன்றும் புரியாமல் முகத்தில் பரபரப்புத் தாண்டவமாடக் கடவுளே என்று நின்றான். (தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10. Editor: Mi. Pa. Somasundaram.



# நீங்கள் இன்று உங்கள் பற்களை

# மக்ளீன்

# செய்தீர்களா?



ஆம்! நான் இன்று என் பற்களை மக்ளீன்ஸ் பற்பசையைக் கொண்டு சுத்தம் செய்தேன். வசீகரம் வாய்ந்த புன்னகைக்கு ஆரோக்கியமான பற்கள் அத்தியாவசியம். ஆகையால் தான் நான் பிரதி தினமும் இரு முறை எனது பற்களை மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக்கொண்டு சுத்தம் செய்கிறேன் மக்ளீன்ஸிலுள்ள ஒரு தனிப்பட்ட பொருள் பற்களின் மேல் படிந்துள்ள ஊத்தையை நீக்கி பற்களுக்கு இயற்கையாக இருக்கும் வெண்மையையும், ஒளியையும் தருகிறது. அதிக வெண்மையான பற்கள் கெட்டியான ஈறு மற்றும் நறுமணமுள்ள சுவாசத்திற்கு மக்ளீன்ஸ் பற்பசையையே உபயோகியுங்கள்

"...மக்ளீன்ஸ் பற்பசை இப்பொழுது கடைகளில் விற்கப்படும் எல்லா ரகங்களை விட மிக உயர்ந்தது."




க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்

MTY-39-TAM

REGISTERED No. M. 4392
*Registered as newspaper in Ceylon*